உ

ஸ்ரீராமஜயம்.

# A STORY OF THE GLORIOUS MAINAVATHI.

மகாமகிமைபொருந்திய

# மைனாவதிக்கதை.

இஃது,

சிலகனவான்கள் வேண்டுகோளின்படி

புதுவைமாநகரம்,

பு. சு. நாராயணதாசர் அவர்களால்

இயற்றப்பட்டு,

சென்னை - தூளை

எஸ். பி. இராஜாராமவர்களால்

தமது

லைன் ஆப் இந்தியா பிரெஸ்ஸிற்

பதிப்பிக்கப்பட்டது.

1903.



விலை அணு 12. வி-பி-சார்ஜ் அணு 3.

உ

கணேசர் துணை.

# ரிஜிஸ்ட்டர் அறிவிப்பு.

இதனால் சகலருக்கும் தெரிவிப்பது யாதெனில், 1867 வது வருஷத்திய 25-வது ஆக்ட்டின் 20-வது பிரிவின் 6-வது விதியின் பிரகாரம் இந்நூலை இங்கிலீஷ் இலாகாவாகிய மதராஸிலும் பிரஞ்சு இலாகாவாகிய புதுச்சேரியிலும் காரைக்காலிலும் காப்பிரைட் ரிஜிஸ்ட்டர் செய்யப்பட்டிருக்கின்றது. ஆகையால் இந்நூலுக் குடையவராகிய எஸ். பி. இராஜாராமவர்களின் உத்திரவின்றி இதை வேறு பாஷையில் மொழிபெயர்த்தலும் அல்லது, இதிற் கண்டிருக்கிற பாகங்களைப் பிறர் அச்சிடுதலும் கூடாது. அப்படி அச்சிட்டால் அதனால் உண்டாகும் நஷ்டத்தை வசூல் செய்யப்படும்.

——(0)——

## முக்கியகவனிப்பு.

இப்புத்தகமாவது இன்னும் இதரமான புத்தகங்களாவது ஔஷதங்களாவது தேவையானவர்கள் அடியிற்கண்டிருக்கும் கம்பெனியாரவர்களுக் கெழுதிப் பெற்றுக்கொள்ளலாம். கேட்டலாக் தேவையானவர்கள் எமக்குத் தெரிவித்துக்கொண்டால் இனாமாக அனுப்பப்படும்.

எமது விலாசம்.

எஸ். பி. ராஜாராம் அண்டு கோ,
லைன் ஆப் இந்தியா பிரெஸ், ஆரிமுத்து மேஸ்திரி தெரு,
சூளை போஸ்ட், மதராஸ்.

உ

ஸ்ரீராமஜயம.

## மகாமகிமைதங்கிய மைனாவதிக்கதையின்

# முகவுரை.

திருமகளது கடைக்கணோக்கம் பெற்ற கௌடபங்காள தேசத்தரசன் பட்டத்தரசியாகிய மைனாவதிக்கு அநேகநாளாய் பிள்ளையில்லாக் குறையால் மிக்க கவலையடைந்து தருமகுண சீலனாகிய அரசனுடன்தானும் நாட்டைவிட்டு யாத்திரைசெய்து வெகு இடுக்கண்கள்பட்டு ஓர் காட்டில் அரசன் நித்திரைசெய்யக் கண்ணை இமைகாப்பதுபோல நாயகனைக் காத்திருந்த உத்தமியாகிய மைனாவதியை பிரமராக்கதன் எடுத்துக்கொண்டுபோய் வடவால மரத்தின் பொந்தில் வைத்துக்கொள்வதும், உடனே அப்பிரமராக்கதன் கண்களிரண்டுங் குருடானதுமன்றிப் பெரியவியாதி ஜனித்து துக்கப்படுவதும், கற்புக்கரசாகிய மைனாவதி, நகமுஞ்சதையும்போல ஒருவரைவிட்டொருவர் பிரியாதிருந்த தனது நாயகனைப் பிரியச் செய்த தன்விதியை நினைந்து புலம்புவதும், அரசன் நித்திரைதெளிந்தெழுந்து மனைவியைக்காணாமல் பரதவித்துக் காடெல்லாந்தேடியலைவதும், முடிவில் யானையினால் சுபுத்திமாமுனிவரைக் கண்டு பிள்ளைவரம் பெற்றதும், அம்முனிவராலேயே ஆலமரத்தின் பொந்தில் பிரமராக்கதனால் சிறைவைக்கப்பட்ட தன் மனைவியைத் தருவித்துக் கொடுத்ததும், மகரிஷியை பக்திவினயமாய்ப் பணிந்த மைனாவதிக்கு சுபுத்திமாமுனிவர் புத்திரஉற்பத்தி யாகும்படி குளிகையொன்று தந்ததும், அரசனும் அரசியும் முனிவரிடத்துவிடைபெற்றுத் தங்கள் நகரத்தையடைந்து முனிவருடைய ஆசீர்வாதத்தினால் பெற்ற குளிகையின் மகத்துவத்தால் புத்திரனைப் பெற்றதும், புத்திரன் விருத்தியடைந்து யுவராஜனாகியகாலத்தில் அரசன் தேகவியோகமடைந்ததும், இந்த துக்கத்தினால் மைனாவதி கலக்கங்கொண்டு மாறாத் துயர மடைந்து அழுதகண்ணுஞ் சிந்தையுமாக மேடையின்பேரில் உலாவிக்கொண்டு தன் பார்வையை நாலு திக்கிலுஞ் செலுத்திக்கொண்டிருக்கையில் ஓர் திக்கில் மகாத்துமா ஒருவர் விறகுசுமைகட்டித் தன்தலையின்மீது வைத்துக்கொண்டுவருகிற விந்தையைக் காண்பதும், அன்றிரவில் பெரியோராகியஜாலந்தர

நாதரைத் தெரிசித்து அவரிடம் உபதேசம் பெறுவதும், தினமும் இரவிற்சென்று ஜாலந்தரநாதரைச் சேவித்து வருவதுமாக இருக்க, இதனைத் தாதிகளறிந்து மருமகளுக்குச்சொல்ல மாமியார்போவதை யும் வருவதையும் மருமகள் ரூபில்கண்டு அரசனுக்கு அறிவித்த துடன் அழைத்துக்கொண்டுபோய் ரூபில் காட்டி இப்படி நின தன்னை சோரம்போவதால் ஊரிலுள்ளகுடிகளால் நிந்திக்கப்பட்டு உனக்கு அவமானம் நேரிடுமென்று பலவாகச்சிற்றரசனுக்குப்போதி ப்பதும், இதனைக்கேட்ட அரசன் இடியோசையைக்கேட்ட நாகத் தைப்போல மிகவும் ஏங்கி நாணமடைவதும், பின்பு மந்திரிகளால் ஜாலந்தரநாதரை வஞ்சநெஞ்சத்துடன் வரவழைப்பதும், பலவித லாகிரிவஸ்துக்களில் நஞ்சைக்கலந்து விருந்திட்டு மூன்றுநாளிரவில் சிலதூதர்களால ஜாலந்தரநாதரைத் தூக்கிக் கிணற்றிற்றள்ளுவதும், மறுநாட்காலையில் பாராங்கல்லை அக்கிணற்றின்மேற்போட்டுச் சுண் ணும்பினுல் கட்டுவதும், கிணற்றில் போடப்பட்ட ஜாலந்தரநாதர் தன்மேல்ஜலம்படாமல் இடைவெளிவிட்டுக் குடையைப்போல்நிற்க, கீழ்மட்டத்திற்போய் உட்கார்ந்து யோகசாதனஞ் செய்துகொண் டிருப்பதும், அன்றிரவில் மைனுவதிசென்று ஆசானைக்காணுமல் பரி தவிப்பதும், காணீபாநாதர் ஆசானைத்தரிசிக்கவேண்டி சிஷ்யர்களு டன்வந்து இருப்பிடத்தில் ஆசானைக்காணுமல் அங்கு தங்கியிருப்ப தும், மைனுவதி ஆசான் வந்திருக்கிறுரெனக் கருதி சென்று பார்க்க ஆசான் அல்லாததால் காணீபாநாதர் திருவடியில்விழுந்து ஆசானை க்கண்டு அவரிருப்பிடத்தை யெனக்கறிவியும் சுவாமி யென்று வேண்டிக்கொள்வதும், அவரும் அப்படியே தெரியப்படுத்துகிறே னென்றுசொல்லி ஆசானைத் தேசதேசங்கடோறுஞ் சென்று தேடு வதும், அங்கோரிடத்தில் கோரக்கநாதரைக்கண்டு எனது சற்குரு நாதரைத் தாங்கள் கண்டதுண்டோவென்று விசாரிக்க, அவர் யோகதிருஷ்டியினுற்பார்த்து நினது ஆசான் கௌடபங்காள தேசத் தரசனுல் கிணற்றில் தள்ளப்பட்டு அக்கிணற்றிலேயே யோகஞ்செ ய்து கொண்டிருக்கிறுரென்று சொல்லக்கேட்டு காணீபாநாதர் தன் சிஷ்யர்கள் கூட்டத்துடன் திரும்பி கௌடபங்காள தேசத்தை யடைவதும், மைனுவதி மறுபடியும் தன்னுசான் வந்திருக்கிறு ரென்று போய்ப்பார்த்து ஆசான் அல்லாததால் காணீபாநாதரை விசாரிப்பதும், அவர் நமதாசாரியர் நின்குமாரனுல் அரண்மனைக்குள் ளிருக்கும் கிணற்றில் தள்ளப்பட்டிருக்கிறுரென்று சொல்வதும்,

அவ்வுத்தமி இதற்கென்ன உபாயஞ் செய்யலாமென்று வினவுவதும், காணீபாநாதர் நினது புதல்வனாலேயே வெளிப்படுத்தவேணுமென்று சொல்வதும், அவ்வாறே அந்த கற்புடையமாது சென்று மகனைத் திருத்தி காணீபாநாதர் திருவடியில் வீழ்த்துவதும், அவரால் சில உபாயங்கள் சொல்லக்கேட்டு அந்தப்படியே செய்து ஜாலந்தரநாதரைக் கிணற்றிலிருந்தும் வெளிப்படுத்தி அவரால் அரசன் உபதேசிக்கப்பெற்று விரக்தியடைந்து சகலசம்பத்துகளையும் ராஜரீகத்தையும் வெறுத்துப் பரதேசியாகி தேசங்கள்தோறுஞ்சென்று பிச்சையெடுத்து ஆத்தும திருப்திசெய்துகொண்டு தன்தங்கை வீட்டையடைந்து அவளால் கொடுக்கப்பட்ட அடையைப் புசியாமல் அவ்வடையை அங்கொருமேடையின்பேரில் வைக்க நகரம யாவும் எரிந்து சாம்பலாகியதும், மச்சேந்திர நாதரைக்கண்டு சேவித்து அவராற் சிலசங்கை தீர்ந்து தன் அடையால் நகரம் பற்றியெரிந்ததைக்கண்டு மைத்துனன் ஆச்சரியமடைவதும், நடந்தவுண்மையை மனைவி சொல்லக்கேட்டமன்னவன் மைத்துனனது மகிமையையறிந்து மைத்துனனை ஆசாரியனென மதித்து அவர் திருவடிகளில்விழுந்து வெகுவாக நமஸ்கரித்து அவரால் பிரம்மநிஷ்டையும் மகாவாக்கியோபதேசமும் உலக உற்பத்திலயத்தையும் அறிவிக்கத்தெளிந்து சற்குருகிருபையால் சகலத்திலும் விருப்பமற்று வெறுப்புற்று விடைபெற்றுநகரத்தையடுத்து ஆசாரியன் உபதேசித்ததை யுச்சரித்துக் கொண்டிருக்க இதையறிந்தமனைவி அரசன் பக்தியைக் கெடுக்க அதனால் அரசனுக்கு சகலத்திலும் விரக்திபிறந்து நாட்டைத்துறந்து காட்டையடைந்து இரவும்பகலும் நித்திரையின்றிப் பகவானைக்காணவேண்டுமென்று ஓடித்தேடித் திரிந்தலைந்துகொண்டிருக்க மனைவியும் அன்னையும்தேடிகொண்டுவந்து சாதுவைக்காண்பதும், கண்டுபலகுறைகளைப்புகன்று ஓலமிட்டழ, மன்னவன் பகவத்பக்தியிலேயே மனதைச்செலுத்தினவனாக வசனிப்பதைக்கண்டு மருகி மாமியைநோக்கி ஓ அம்மா! நாமிங்கு தானே நிவாசமாகி இவரைச்சேவித்துக்கொண்டிருக்கலாமென அந்தப்படியே செய்யுமென்றுசொல்லி விடைபெற்றுக்கொண்டுதான்கௌடபங்காள தேசத்தையடைந்து மைனவதியைக்கண்டு தொழுது அவள் புருஷாகாரத்தினால் ஜாலந்தரநாதரிடத்தில் உபதேசம்பெற்று அவருக்குத் தொண்டுசெய்திருந்தாள். இங்கே அரசன்மனைவி தனக்குள்ள ஆஸ்தியைவரவழைத்து அந்த க்ஷேத்திரத்தில் மடமொன்று கட்டி யதிலிருந்துகொண்டு தன்கணவனை

யும் அவருடனிருக்கும் சாதுக்களையும் ஆதரித்துக்கொண்டிருந்து முடிவில் நற்கதியையடைந்தாள். அரசனோ மனைவி இறந்தபின்னிருந்தத்திரவியத்தை யெல்லாம் ஏழைகளுக்குக் கொள்ளைவிட்டுத் தான் அவ்வூரில் பிக்ஷையெடுத்துப் பசியாறிக்கொண்டு என்றுமழியாத ஜீவன்முக்தராக விருந்தார்.

மறுபடியும் கோபீசந்தனநாதர் திரும்பிவந்து ஆசானருளைப் பெற்று அன்னையாகிய மைனாவதியும் புதல்வனாகியகோபீசந்தனரும் யாத்திரை செய்துகொண்டு வருவதும் மார்க்கத்தில் ஒருபிராமணன் இவ்விருவரையும் அதிகாரியிடமழைத்துப்போய் பழிவார்த்தை சுமத்தியதும், அதிகாரி இருவரையும் கொலைபாளிகளால் வெட்டிவிடச்சொல்வதும், அந்தப்படியேகொலைபாளிகள் செய்வதும், அவர்களுக்கு விபத்துநேராமல் பிராமணனுக்கும் அதிகாரிக்கும் விபத்து நேரிடுவதும், அதைக்கண்டஊரார் இவர்கள் மிகவும் மகிமைபொருந்தியவர்களென்று மதித்து பயபக்தியுடன் சிலநாள்வைத் துபசரித்தனுப்புவதும், ஆசாரியனைச்சேவித்து பூரண கிருபையையடைந்துநித்தியமுக்தர்களாய் ஜீவத்துடன் உலாவிக்கொண்டிருக்கிற இக்கதைக்கு அமிர்தத்தைத்திருஷ்டாந்தமாகச் சொல்லுவோமென்றால் அந்த அமிர்தந் தனைப்புசித்த இந்திராதிதேவர்களுக்கும் பரமபதத்தை யடையச்செய்யவில்லை. இந்த ஜீவன் முக்தர்களின் கதாவமிர்தம் செவிமடுத்தவர்கள் ஜீவன்முக்தியை யடைவதுந்தவிர எந்நாளுங் கீர்த்திப்பிரதாபமடைவார்கள். ஆகையால், இக்கதைக்கு இக்கதையே யல்லாமல் வேறுகதையைக்காணேன். இதன்சாரமானது கலவியறிவுடைய சாதுக்களேயன்றி மந்தமதிகளும் பண்டிதபாமரரும் எளிதிலுணரும்படி மகராட்டிரபாஷையி லிருந்ததை மொழிபெயர்த்துத் தமிழில் வசனரூபமாக வெழுதப்பட்டது.

முகவுரை முற்றிற்று.

---

S. B. R.

உ

ஸ்ரீராமஜயம்.

மகிமைபொருந்திய

# மைனாவதிக்கதை

## கணபதி துதி.

வெண்பா.

தாபங்கள் மூன்றுந் தணிந்துலகத் தென்றுமுய்யு
மாவிரதை மைனா வதிக்கதையைச்—சோகமுறச்
சொல்லு மயிற்பெரிய தொந்திவயிற் றெந்தையாங்
கல்விக் கணபதிதாள் காப்பு.

## சரஸ்வதி துதி.

வெண்பா.

காமக் கடன்மூழ்கிக் கண்டுகரை சேறியாப்
பூமன்ன நன்னை புகழ்பெற்ற—தாமிதனைப்
பார்க்குள் விரித்துரைக்கப் பங்கயன்றன் றேவிமிசை
வார்க்குஞ் சிலம்பொலிதாள் வாழ்த்து.

## திருமால் துதி.

விருத்தம்.

அண்டரண் டங்களுக்கு மாதியாய் விளங்குஞ் சோதி
கொண்டல்மே னியனு மெங்குங் குறிப்பிட நின்ற கோமான்
அண்டர்க்கன் றமுதளித்த வரவணை துயிலுஞ் செல்வன்
புண்டரீ கப்பொற் றாளைப் போற்றினேன் போற்றி னேனே.

## இலக்குமி துதி.

விருத்தம்.

பங்கய மலரிற் றோன்றிப் பார்தனி லுலாவி யெங்குந்
தங்கியே செல்வஞ் சீருந் தழைத்தின்பம் பெருகி வாழ
மங்களத் திருக்கண் ணோக்க மருளுமா தவியின் பாதஞ்
சங்கையில் லாமற் போற்றிச் சரண்புகுந் தவாதீர்ந் தேனே.

## சிவபெருமான் றுதி.

விருத்தம்.

மான்மழு வேந்திக் கையில மார்பினின் மாலை துன்னச்
சேணுறை சடையிற் கங்கைத் திங்களு ந்துலங்க தேவி
தான்விளங் கிடச்சி ரத்திற் றனிப்புலி யாடை நீறுந்
தோன்றிடத் தரித்தவீசன் றுணைமலர்ப் பாதம் போற்றி.

## பார்வதி துதி.

விருத்தம்.

தக்கன்றன் றவத்திற் றோன்றித் தக்கன்வேள்வியினில் மாய்ந்து
அக்கண மலைக்கு வேந்த னகமகிழ் மதலை யாகித்
திக்குக ளெங்குந் தானாய்ச் சிரித்துமுப் புரமெ ரித்த
முக்கணன் பாகத் துச்சா முண்டிதா ளென்றும் போற்றி.

## அவையடக்கம்.

விருத்தம்.

இருளினைப் போக்கி யெங்கு மொளிதரும் பருதி யைப்போ
லருளெனு முங்கள் நோக்கா லடியனு முய்யும் வண்ண
மருளாலிக் கதைபு கன்றேன் மகான்கள்யா வருமிக் காதைப்
பொருள்தனை யுணர்ந்து பேதப் பிழைபொறுத் தருளு வீரே.

## கதையின் வரலாறு.

ஸ்ரீகொண்டல் வண்ணன் புண்டரீக பக்தனுக்காக நின்ற பண்டரிபுரத்திற் கிடையில் அண்டரும்போற்றும் திண்டிரவனத்தி லிருக்கும் உத்தமசித்தர் முதலானவர்களும், காலையி லெழுந்து திவ்வியமான சந்திரபாகாநதியிற் படிந்து ஜபதபங்கள் முடித்து மூலாதார முத லாறாதாரங்களையுந் தரிசித்து நாதாந்தவசமாகி சோதியைக் கண்டு அகசோதியைக்காணும் பரஞ்சோதியாகிப் பரப்பிரமத்தைக் காணாமற்கண்டு பரமானந்தக்கடலில் மூழ்கினவர்களாகி ஜீவன்முக்தி யடைந்த அனேக சாதுக்களின் கதைகளை வடமொழியிலியற்றிஅதனாலிவ்வுலகிலுள்ள மானிடர்களை யீடேற்றப் பிரம்மாம்ஸம்பெற்றுத் திரிகாலங்களையு முணர்ந்த நாபாஜிசித்தரிடஞ்சென்று, அவரது திருவருட்டாமரைகளுக்கு அனந்தம் வந்தனங்கள்செய்து ஓ சத்குருநாதரே! கற்பிற்சிறந்த உத்தமகுணமைனாவதியென்னும் மாதுசிரோமணி ஜீவன் முக்தியடைந்த கதையைத் திருவாய்மலர்ந்தருளி யெங்களைப் புனிதர்களாகச் செய்யுமையாவென்று வணங்கிநிற்க.

மகாயோகியான நாபாஜிசித்தர் நாமின்றுசெய்த பாக்கியமேபாக்கியம் என்று சந்தோஷசித்தராய் அகங்குளிர்ந்து முகமலர்ந்து ஓ சித்தர்களே! மிகவும் பரிசுத்தர்களே! இம்மைனவதியின் பெருமையை என்னொருவனு லுரைக்கப்போமோ? ஆதிசேஷனாலும் விரிக்கப்போமோ? தேவர்களாலுந் துதிக்கப்போமோ? மூவர்களாலு மதிக்கப்போமோ? மற்றியாவர்களாலுஞ் சொல்லக்கூடாதாயினும் எனக்குத் தெரிந்தமட்டுஞ்சொல்லுகிறேன் என்று வழிபடுகடவுளை வணங்கி பரமாசாரியனைப்போற்றிச் சொல்லத்தொடங்கினர். ஓ சீலர்களே! சற்சங்கத்துக் கனுகூலர்களே!

பூமாதுக்கோர் திலகம்போலவும், புகழ்பெற்ற மணப்பெண்ணுக்கோர் மங்கலசூத்திரம்போலவும், அழகிய வனிதையின் மூக்கில் ஒளிபெற்றோங்கும் மூக்குத்தியைப்போலவும், கிரகக்கூட்டங்களில் சந்திரனைப்போலவும், காடாந்தகாரமான இருளைப்போக்குஞ்சூரியனைப்போலவும், நவநிதிகளும் பொருந்திய அளகாபுரியைப் போலவும், இணைசொல்வதற்குக்கூடாத சொர்க்கலோகத்தைப்போலவும், சிறப்புற்றோங்கும் கௌடபங்காளதேசமென்றோர் நகரமுண்டு. அந்நகரமானது பாங்காக உயர்ந்தோங்கி வளர்ந்த தென்னமரங்களாலும், பலா, வாழை, கமுகு, நாவல், முதலாகிய கனிகளைத்தரும்பலவிதசெடிகளாலும், தேகாரோக்கியத்தைத்தரும் திராட்சை முதலிய கொடிகளாலும், மல்லிகை, முல்லை, இருவாக்ஷி, செண்பகம், மந்தாரை, கோங்கு, மனோரஞ்சிதம் முதலாகிய மலர்ச்செடி கொடிகளாலும் செழித்தும், தழைத்தும், பூத்தும், காய்த்தும், பலகனிகள் நிறைந்தும், அக்கனிகளினின்றும் தேனானதுபெருகிநதிப்பிரவாகத்தைப் போலப் பரவியோடும் ஓடைகளும்,நஞ்சை, புஞ்சை,வயல்களில் கிளிகள்முதலான பலபறவைகள் கூட்டங் கூட்டமாகவந்து சேரவும் நெல்முதலாகிய கதிர்களிலுள்ள தானியங்களைத்தின்று தண்ணீர் அருந்தி ஆணும்பெண்ணுங் கூடிக்குலாவித்திரியும் ஓசையும் குயில்கள் பாடும் இனிமையும் மயில்களாடும் ஒய்யாரங்களும் அன்னப்பக்ஷிகளின் நடையின் ஒயிலும் இன்னும் பலபறவைகளின் தொனியாரவாரங்களும் அண்டமுகட்டையளாவும் கோட்டையினுலும், ஆழமறிவ தரிதாகிய அகழியினுலும், யானைகள் தங்குஞ் சோலைகளாலும், குதிரைக்கூட்டங்க ளடங்கிய சாலைகளாலும், மட்டுமிதமில்லா ஒட்டகங்களும், ரதங்களுந்தங்கும் கொட்டாரங்களும், கால்

படைகளடங்கும் மாளிகைகளாலும், வேதமோதும் பிராமணர்கள் வசிக்கும் வீதிகளாலும், க்ஷத்திரியர்கள் திகழும் வீதிகளாலும், பலவிதவியாபாரங்கள் செய்யும் வைசியர்வீதிகளாலும், உழுதுபயிர்செய்யும் சூத்திரர்வீதிகளாலும் பரதநாட்டியத்திலும் சங்கீதவித்துவத்திலும் தேவேந்திரனையுமகிழச்செய்யும் ரம்பை, ஊர்வசி, திலோத்தமை என்னும் தேவதாசிகளைப்பார்க்கிலும் அதிக அழகும்தேர்ந்தநாட்டியமும், கனமாகிய சங்கீதத்திலும் சிறப்புற்ற தாசிகள் வீதிகளாலும், அழகுபெற்று விளங்கும் அந்நகரத்தை அரசாக்ஷிசெய்யும் அரசனதுகுணமும் நடவடிக்கையும் எப்படிப்பட்டதென்றால், சொந்தபந்துஜனங்களிடத்தில் என்றும் தாக்ஷிண்ணியமும், சேவகசிப்பந்தி ஜனங்களிடத்தில் நீங்காததயவும், சாதுக்களிடத்தில் எப்போதும் பிரியமும், ராஜாக்களிடத்தில் சகாயமும், துஷ்டஜனங்களிடத்தில் மறவாதகடுமையும், வித்வஜனங்களிடத்தில்பயமும், மனைவியைச்சார்ந்த ஜனங்களிடத்தில் விருப்பும் வெறுப்புமில்லாத ஒருபரியாயமாக நடப்பவன். சத்தியத்தில் அரிச்சந்திரனுக்கு நிகரானவன். குடிகளிடத்தில்நயபயமாக ஆறிலொருபங்கு கப்பம்வாங்குபவன். நான்குவருணத்தாரும் அவரவர்கள் குலதருமம்தப்பாமல் நித்தியவிதிகளைநடத்தும்படி தண்டனைகண்டனை செய்பவன். தன் ஆளுகைக்குட்பட்ட நாடுகளெங்கும் புலியும் பசுவும்பேதமின்றி ஓர் துறையில் தண்ணீரைக்குடிக்கவும் மாதமும்மாரி மழைபொழியவும், முப்போகம் விளையவும், தொண்டர்கள்யாவரும் கொண்டாட, மனுநீதி வழுவாமல் முப்பத்திரண்டறங்களும நடாத்திக் கர்ணனுக்குப்பிந்தினவனென தருமபூபதிக்கு நிகரான பொறுமையும், திறமையும், கீர்த்திப்பிரதாப சௌந்தரியமும், தன்னைவிட்டகலாவண்ணம் நீதியாய் அரசுபுரிபவன். இவனுடைய பெயர் திரிலோகசுந்தரமகாராஜன். மைனாவதி என்னும் பெயரினை வாய்க்கப்பெற்றவளோ.

வெண்பா.

அன்னை தனையு மடியாள் பணியுமலர்ப்
பொன்னி னழகும் புவிப்பொறையும் — துன்னும்
வேசி அயிலும் விறன்மந் திரிமதியும்
பேசி னினையுடையாள் பெண்.

வரலாறு.

என்றபடி தன்கணவனுக்கு அன்னபானாதிகளைப் பரிமாறி அருகிலிருந்து கணவன்களிக்கும்படி பலசந்தோஷவார்த்தைகளைப் பேசி

க்கொஞ்சங்கொஞ்சமாகப் பிரசாதத்தை வைத்துப் புசிக்கச்செய்து பிள்ளையைப் போஷிக்கும் அன்னைக்குநிகரானவளும் நாயகனுக்குப் பணிவிடைசெய்வதில் வேலைக்காரிக்கு நிகரானவளும் வடிவழகில் மகாலட்சுமிக்கு நிகரானவளும் பொறுமையில் பூமிதேவிக்குச் சமானமானவளும் ரதிகேளியில் வேசிக்கு நிகரானவளும் புத்திசாதுரியத்தில் மந்திரிக்குச் சமமானவளுமான குணாலங்கள் பொருந்தியமாதினது பெருமையைப் பேசிப்புகழத்தக்க உத்தமப்பெண் என்றுமூதியோர்கள் சொல்லியபடி இம்மைனாவதியும் தன்பதிக்குத் தொண்டுசெய்வதிலும் போஷிப்பதிலும்அதிகப்பிரியமுடையவளாகி இல்லறதருமத்திற்குரிய நன்னடக்கையுடையவளாய்த் தன்கணவனைவிட வேறுதெய்வமில்லையென் றுணர்ந்து இஷ்டப்படிநடந்து சதா பக்திசெய்துகொண்டிருந்தாள். இப்படிக்கிருக்கிறபோது தம்பதிகளிருவர்களுக்கும்ஓர் மனக்குறையுண்டாகியது. அதுயாதெனில்,நமக்குச் சகலபாக்கியங்களும் குறைவின்றி இருந்தும் நமதுகுடிவிளங்க ஓர் பிள்ளையில்லாதுபோனதால் பலனில்லை. நமக்குப் பின்னிட்டு இந்தநகரத்தையாளவும், நங்குலம் மேலுமேலும் விருத்தியடையவும் அதைக்கண்டு நாம்சந்தோஷிக்கவும் முன்ஜென்மத்தில் நல்லநோன்பு நோற்காதபடியால்இந்தஜென்மத்தில்பிள்ளையில்லாதபாவிகளானோம். இதன்றி பிள்ளையில்லாப் பாவிகளுக்குப் பரலோகஞ் சித்தியாதென்று பெரியோர்கள் கூறியிருக்கின்றார்கள். ஆகையால் நாம் செய்தபாவத்தை எந்தமார்க்கத்தில் ஒழித்துப் புண்ணியாத்துமாக்களாகிப் புத்திரப்பேற்றைப்பெறுவோமென்று இரவும்பகலும் இதுவே ஏக்கமாகி சஞ்சலமனத்தினராய் ஊண் உறக்க மற்றவர்களாகிக்கடவுளைத் துதித்துக்கொண்டிருந்தார்கள். இவ்வண்ண மிருக்கையில் திரிலோகசந்தனமகாராஜன் ஒருநாள் கொலுக்கூடத்திற்குவந்து சிங்காதனத்தில் வீற்றிருந்து அருகிலிருக்கும் முதல்மந்திரியை நோக்கி ஐயா முதல்மந்திரியே ! எனக்குப்பின் இந்தநகரத்தையாளுவதற்குப் பிள்ளையில்லாததால் யானும் என்மனைவியும் மிகக்கவலையால் மெலிந்து வாட்டமடைந்து முன்ஜென்மத்தில் புண்ணிஞ்செய்யாததனால் பாவிகளானோம்.இப்பாவத்தையொழித்துப்புத்திரப்பேறடையும்படி யாங்கள் வெளிப்பட்டு வானப்பிரஸ்தாசிரமத்தையடுத்துப்போய்சில நாளையில் வந்து சேருகிறோம். அதுபரியந்தம்நீங்கள் இந்தநகரத்தை மனுநீதி வழுவாமல் பாதுகாத்துவரக்கடவீர்களென்று சொல்லி முத்திரை மோதிரத்தையும் சகலசம்பத்துகளையும் மந்திரிவசமாக்கி

விட்டு அவ்வரசன் சிங்காதனத்தைவிட்டெழுந்து வேகமாகநடந்து அந்தப்புரஞ்சேர்ந்து மனைவியையழைத்து ஓ பெண்ணே! புத்திர பாக்கியம் வேண்டிப் பெரியோர்கள் திருவருளைப்பெற்றுவர வெண்ணிப்போகிறேன். ஆகையால் தடையொன்றும் சொல்லாமல் விடை தரவேண்டுமென்று சொல்ல, அதற்கு மைனுவதி அரசனைநோக்கி எனது பிராணநாயகரே! பெண்கள் பதியைவிட்டுப்பிரிந்து தனித்து இருப்பதுநியாயமல்லவென்று நூல்கள் முறையிடுகின்றன. அன்றி, மலரும்மணமும்போலவும், பாலுஞ்சுவையும்போலவும், கரும்புஞ்ருசியும்போலவும், தயிரும் வெண்ணெயும்போலவும், ஒருவரைவிட்டொருவர்பிரியாமல் நகமுஞ்சதையும்போல நாமிருவருங் கூடிக்கலந்திருந்தோம் அப்படிக்கிருந்தநம்மிருவரையும் கர்மமானதுதொடர்ந்துகிரகங்களின்ரூபமாய்ப்பிரியச்செய்ததே! ஒருநிமைப்பொழுதும் தங்களைவிட்டுப்பிரியாமலிருந்த யானெப்படி பிரிந்துயிர் தரித்திருப்பேனென்று கண்ணுங் கண்ணீருமாய்க் கலங்கி அழுதுவாடிக் கதறுவதைக்கண்ட அரசன் பெண்ணே! நீ என்பிரிவைப்பற்றி துக்கப்படவேண்டாம். நான் உன்னெதிரிலிருந்து விடைகேட்கிறபோதே என்பிரிவைச்சகியாமல் கதறுகிறநீ நான்கண்ணிற்படாமல் மறைந்து போவேனேயாகில் பிராணனை விட்டுவிடுவாய்போலத் தோன்றுகிறது. ஆகையால், உன்னைத்தனியே விட்டுவிட்டு நான்போவதில்லை. இதை உண்மையென்று கருதி உனக்குண்டான கவலையைமாற்றிச் சந்தோஷமாக உனது அபிப்பிராயமெதுவோ அதைமனதில் வையாமல்உண்மையைத் தெரியச்சொல்வாயென்று தேறுதலைசெய்யஅதற்குமைனுவதி எனது குலதெய்வம் தாய்தந்தைபந்துக்கள் யாவும் நீரேயென்று உண்மையிலேயே நம்பியிருக்கும் அடியாளுக்கு நேத்திரஸ்தானமாய் விளங்கும் கண்ணாளரே! தங்கள்திருவடிசாக்ஷியாய் என்மனதிலெந்தக்கோரிக்கையுங்கிடையாது. தங்கள்பிரிவைச்சகிக்காதது ஒன்றேயாம். இதைப்பற்றித் தாங்கள் தீர்க்காலோசனைசெய்து அடியாளைப்பாதியாளாய் இங்குவிட்டுவிட்டுத்தேவரீர்பாதியாளாய்ப் போகாமல் தங்கள் திருவடிச்சாயலைப்போல நடிக்கும் என்னையுந் தங்களுடன் கூட்டிக்கொண்டு போகும்படிவேண்டுகிறேனென்று சொல்லிப் பாதங்களில்விழுந்து கண்ணீர் ஆறாய்ப் பெருகவிட்டுக்கொண்டு ஓவென்றுகதறியழுகிற தன்மனைவியை அரசன் இருகாங்களினுலுந்தழுவிப்பிடித்துக்கன்னத்தோடுகன்னம்சேர்த்து முத்தமிட்டுத்தன் மடியின்பேரில் உட்காரவைத்துக்கொண்டு பலவித நயவார்த்தை

களைச் சந்தோஷமுண்டாகும்படி இனிமையாகப்பேசித் தேறுதல் செய்து அழுகையைமாற்றி எனது மனதிற்கினிய பெண்ணரசே! நீ விசனப்படவேண்டாம். சீக்கிரம் பிரயாணப்படென்று சொல்லிநவரத்தினங்களிழைத்த முடிபுஜகிருதி ஆடையாபரணங்களைக் களைந்துவைத்து மரவுரி சடைமுடியுடன் தாமரைமணி - துளபமணிமாலைகளைத்தரித்துப் பன்னிருதிருநாமமணிந்து தாம்பரத்தினாற்செய்த குண்டலங்களைச் செவியிற்பூண்டு இடையிற்பீதாம்பரமுடுத்து ஜோலனாவைத்தோளில்மாட்டி சுரக்காயைப்போல நீண்டபித்தளைப்பாத்திரத்தைக்கையிற்பிடித்துப் பகவானைத்துதித்து மனைவியை அழைத்துக்கொண்டு நடுராத்திரியில் அரண்மனையைவிட்டுவெளிப்பட்டுக் காவலாளரை யெச்சரித்துப் பாதசாரியாய் நடந்தார்கள்.

இவ்வண்ணம் நடந்து அப்போது ஆங்காங்குள்ள வீடுகள்தோறுஞ்சென்று அன்னபிக்ஷை எடுத்துப் பசிதாபந்தீர்ந்து திண்ணைகளிலுஞ் சத்திரங்களிலும் ஜனசஞ்சாரமில்லாத தோப்புகளிலும்படுத்து நித்திரைசெய்பவர்களாய் புராணஸ்தலங்களும் பாடல்பெற்றஸ்தலங்களுமாகிய ஸ்ரீசைலம், மல்லிகார்ச்சுனம், அஹோபிலம்,நிவிர்த்திசங்கம், கெடிகாசலம், வெங்கடாசலம்,நரசிம்மபுரம், காஞ்சீபுரம், சிதம்பரம், அருணாசலம், கோகரணம், அஷ்டகேஸ்வரம், ஜநார்த்தனம், மைந்தபர்வதம், அனந்தசயனம், கோகுல பிருந்தாவனம், ஹரித்துவாரம், கிருஷ்ணா, கோதாவரி, சரஸ்வதி, கௌதமி, காவேரி, துங்கபத்திரா, பெண்ணை, கருடாநதிமுதலாகிய தீர்த்தஸ்நானம் ஸ்தலவாசம் தேவதெரிசனம் பாகவதசேவை செய்துகொண்டு முடிவில்வதரிகாசிரமம் சேர்ந்து அங்குள்ள வதரிநாராயணரைசேவித்து அத்தலத்திலுள்ள சோலைகளுக்குள் புகுந்து வடதிசையை நோக்கி ஐந்துநாள் பிரயாணம் செய்து காட்டிலுள்ள கனிகளைப்புசித்து சுனைத்தண்ணீரை யருந்தி ஓரிடத்தில் மனைவியுந்தானுஞ்சயனித்து நித்திரைசெய்கிறபோது அங்கு மிருகங்களின் மிகுதியும் ஆரவாரமும் விசேஷமாயிருந்ததனால் மைனாவதிக்கு நித்திரைபிடியாமல்பயங்கரமடைந்து தன்கணவனுக்கு மிருகங்களினால் ஏதாவது விபத்து நேரிடப்போகிறதென்று நித்திரைசெய்யாமல் வெகுஜாக்கிரதையாய் கண்ணை இமைகாப்பதுபோலக் கணவனை அந்தவுத்தமி பாதுகாத்திருந்தாள். அப்போது அங்கிருக்கும் வடவாலமரத்தில் வாசஞ்செய்துகொண்டிருந்தபிரம்மராக்கதன் இவர்களிருவரையும் பார்த்து இப்

பெண்ணை நமக்கு மனைவியாகவும் இப்புருஷனை நமக்கு ஆகாரமாகவும் பகவான் கூட்டிவைத்தாரென்று தனக்குத்தானே யோசித்து அடங்காதசந்தோஷத்தினால் கொக்கரித்து ஆரவாரஞ் செய்துகொண்டே மரத்தைவிட்டுக்கீழிறங்கி அவர்கள் சமீபத்தில்வந்து நாயகனைப்பாதுகாத்துக்கொண்டிருக்கும் வனிதையை நோக்கி, ஓ பெண்ணே! நீங்களார்? கொஞ்சமேனும் பயமின்றி என்னுடைய வனத்தில்வந்து தங்கியிருக்கவேண்டிய காரணம்யாது? இதோ படுத்திருப்பவன்யாவன்? இவன் உனக்கென்ன வேண்டும்? மிகவும் அழகுவாய்ந்த நீ இந்த கேவலமானகுரூபியுடன்கூடிவந்த காரணமியாது? இவைகளெல்லாம் ஒன்றுமொளியாமல் உண்மையைச்சொல்லுவாயாகில் உன்னைமன்னித்து எனக்குமனைவியாகக்கொள்வேன். மொழிபிரட்டு ஏதாகிலுமிருக்குமாகில் இவனுடன் உன்னையும்பிடித்து விழுங்கிவிடுவேன் என்றுசொல்லிப்பயமுறுத்திய பிரம்மராக்கதனைநோக்கி ஐயா மகானுபாவனே! இவர் கௌடபங்காளதேசத்தைப் பரிபாலனஞ்செய்யும் திரிலோகசந்தனமகாராஜன். இவரதுபட்டத்தரசியாகிய என்பெயர் மைனாவதி. எங்களுக்கு நெடுநாளாய் புத்திரசந்தானமில்லாததால் கவலையுண்டாகி பிரமைமேலிட்டு நாடுநகரங்களை மந்திரிவசம் ஒப்புவித்துவிட்டு நாங்களிந்தக்கோலத்துடன் நகரத்தைவிட்டு வெளிப்பட்டு திவ்யதேசங்களும் ஆங்காங்கு பலவிதத்திருக்கோலங்கொண்டிருக்கும் பகவானைச்சேவித்தும் நதிகளில் மூழ்கிக்கொண்டும் பெரியோர்களைத்தெரிசித்தும் இந்தக்காட்டில்வந்துசேர்ந்தோம். எங்கள் முன்னோர்கள்செய்த மாதவப்பயனோ அல்லது யாங்கள் ஜென்மாந்திரத்திற்செய்த புண்ணியபலனோ அன்றி யெங்கட்பெரியோர்களைத்தெரிசித்தபுண்ணியபலனோ அல்லதுஎந்தப்பெரியோரது திருபாகடாக்ஷமோ தேவரீருடைய சேவை எங்களுக்குக்கிடைத்தது. இனியெங்கள் எண்ணம் நிறைவேறுவதற்குத் தடையேயில்லை. ஆதித்தனைக்கண்டபனிபோல எங்கள்பாவம் தங்களைச்சேவித்த மாத்திரத்தில்உருமாய்ந்து நீங்கிவிட்டது. எங்கள் தவம் இன்றல்லவோபலித்தது. எங்கள் பாக்கியமேபாக்கியம் என்றுசொல்லி மைனாவதி பிரம்மானந்தமடைந்து பிரம்மராக்கதன் திருவடியில்விழுந்து சேவித்தாள். உடனே வஞ்சநெஞ்சமுடைய பிரம்மராக்கதன் அந்தஉத்தமியினது கற்பின்நிலையையறியாமல் 'குலத்தளவேயாகுங்குண'மென்பதற்கிணங்க ராக்கதகுலத்திற்குத் தக்ககுணத்தைப்படைத்த அந்ததுஷ்டன் கற்பின்நிலைதவறாத மைனாவதியை இரண்டுகரங்களாலுந் தூக்கிக்

கொண்டு சிதையை ராவணன் வஞ்சித்துக்கொண்டு போனதுபோல ஆகாயமார்க்கமாகக்கிளம்பி வடவாலமரத்தின் பொந்தில் மைனவதியைச்சேர்த்தான். தக்ஷணமே அந்தப்பிரம்மராக்கதனுக்குப் பதிவிரதாதோஷத்தினாலே கண்கள் இரண்டும் குருடாயிற்று. அன்றியும், பதிவிரதையைக் கூடி யணையவேண்டுமென்று கருதிய மனம் நடுக்கமுண்டாகியது. மேலும் பதிவிரதையைத் தன் கரங்களினால் தொட்ட பாபத்தினால் தேகமுழுமையும் பெருவியாதி சம்பவித்துவிட்டது. இந்தப்படியாகக் கண்களிரண்டும் போய்க்குருடாகித் தேகமெங்கும் பெருவியாதியுற்று மனநடுக்கமுண்டாகி ஐயோ நாம்அநேகநாளாக இந்த வடவாலமரத்தில் வசித்துக்காலம்போக்கிக்கொண்டிருந்த நமக்கிந்த துற்குணமேனுண்டாகியது? இந்தப் புண்ணியவதி மிகக்கற்புடைய மாதுசிரோமணியைப்போலதோன்றுகிறது. இவ்வுத்தமியின்பதிவிரதாக்கினியேநம்மையிவ்வண்ண மாக்கிவிட்டதென்று பலவிதமாக வெண்ணியெண்ணிக் கதறியழுது முடிவில் இவ்வன்னையே யிவ்வளவுமகிமைபொருந்தினவளாயிருந்தால் இவளது நாயகன் மிக உத்தமனாயிருப்பானென்பதற்கு ஐயமில்லை. இதுவென்ன அநியாயம்? நம்முடைய பேதமையை யென்னென்று சொல்லுவோம். இந்த அம்மணியாலே நமக்குநேரிட்டதுன்பம் மிகக் கஷ்டமாயிருக்கிறதே. இவளது நாயகன் துயில்விட்டெழுந்து தன்நாயகியைக் காணாமல் மனம்நொந்து யாதேனுஞ் சொல்வானாகில் தடையில்லாமல் அந்தசொற்களின்பலன் நம்மை யின்னமென்னென்ன வாதைப்படச் செய்யுமோ நாமறியோமே யென்று திகிலடைந்தான்.

பின்பு ராக்கதன், அந்த உத்தமபுருஷன் நித்திரையினின்றும் விழித்து எழுந்திருப்பதற்குள் இம்மாதை முன்னிருந்தவிடத்தில் விட்டுவிட்டு வந்தால்தான் இவள் புருஷனால் நமக்கு யாதொரு கஷ்டமுமில்லாமல் இப்போது பிராப்தமாயிருக்கிற இந்தப் பாபமும்நீங்குமென்று தோன்றுகிறபடியால் இம்மாதைக் கொண்டுபோய்ப் புருடனிடம்விட்டுவருவதே நலமென்று கருதினபோதிலும் கண்கள் குருடாகிய நாமெவ்வண்ணம் இம்மாதினைக் கொண்டுபோய்விடுவது? ஐயோ! நானறியாமல் வினைதேடிக் கொண்டேனே. உண்மையிலேயே அக்கிரமஞ்செய்த பாவியாகிய என்னைத்தெய்வம் தண்டிக்காமல் விடுமோ? கேடுசம்பவிப்பதற்கு முன்னதாகப் புத்திகெட்டுவரும் என்பதுபோல மதிகெட்டு அஞ்ஞானாந்தகாரத்தி லகப்

பட்டுக் கண்கள்கெட்டு தேகங்கெட்டு துக்கப்படும்படி நேரிட்டது. ஐயோ யானெப்படி யிப்பாவத்தைப் போக்கிக்கொண்டு உத்தமதேகத்தை யடையப் போகிறேனென்று புலம்பிக் கொண்டிருந்தான். இவனிப்படியிருக்க, மைறுவதி ஆலமரத்தின் பொந்திலிருந்துகொண்டு தன்கணவனைநினைந்துநினைந்துருகி என்னுண்டவனே! காட்டில் பேசுவதற்குஒருவருமின்றித் தனித்துஎன்னைத்தேடித்தேடித் திரிகிறீரோ! எப்படி மனம்நொந்துகொள்ளுகிறீரோ! இந்தக்கொடியபாவி யிப்படி நம்மிருவரையும் பிரித்துவிடுவானென்று அறியாமற்போனேனே. தெரிந்திருந்தால் உடனேதங்களைஎழுப்பிவிடுவேனல்லவா? இந்தக்கபடந்தெரியாமல் இச் சண்டாளனை யோகபுருஷனென்று எண்ணியல்லவோ வகைமோசம்போனேன். இனியெப்போது தங்கள் திருமுகத்தைப்பார்க்கப்போகிறேன். இன்னமும் உயிரை வைத்துக்கொண்டிருக்கிறேனே. முன்னம் ராவணன் சந்நியாசிவேடந்தரித்துவந்து சீதையை வஞ்சித்துக்கொண்டுபோய் அசோகவனத்தில் சிறைவைத்ததைப்போல இந்தப்பிரம்மராக்கதன் என்னைவஞ்சனையாக எடுத்துவந்து இந்த ஆலமரத்தின் பொந்தில் சிறையிருக்க வைத்தானே அந்தஅசோகவனத்திலேனும் விபீஷணனுடைய புதல்வி திரிசடை அடிக்கடி சீதைக்குத் தேறுதல்சொல்லிப் பேசிக்கொண்டிருந்தாள். இங்கேயெனக்குத் தேறுதல்சொல்லவும் பேசுவதற்குங்கூட ஒருவருமில்லாமல் அநாதையைப்போலத் தவிக்கின்றேனே. இக்கற்பாவியானேனே. அந்த ஸ்ரீராமர் சீதையைத்தேடிக் கொண்டு காட்டிலலைந்ததைப்போல் என்னைத்தேடிக்கொண்டு நடுக்காட்டிலலைகின்றீரோ? அவருக்காகிலும் தம்பி லட்சுமணர் துணையாகவிருந்து அடிக்கடி தேறுதல் சொல்லிக்கொண்டிருந்தார்.

அப்பால் ஜடாயுவினுல்ராவணன் சீதையையெடுத்துக்கொண்டுபோனுனென்று சொல்லத்தெரிந்தும் மார்க்கத்தில் அடையாளமாகத்தெரிந்துகொள்ளும்படி சீதை சில ஆபரணங்களை மூட்டையாகக் கட்டிக் கிஷ்கிந்தையில் போட்டுவிட்டுப்போன குறிப்பை சுக்கிரீவனுல் ஆபரணங்களைப்பார்த்தும் வாய்மொழியினுலறிந்தும் ஸ்ரீராமர் அதற்குத்தக்க யோசனைகளைச்செய்து வானரசேனைகளுடன்சென்று லங்கையைக்கிட்டி ராவணுதி ராக்கதர்களை வதைத்து எனதன்னையாகிய சீதையைமீட்டு அயோத்திமா நகரத்தை யடைந்து பட்டாபிஷேகராக சுமங்கல காத்துடன் நகரத்தைப் பரிபாலித்திருந்தார். அதுபோலத் தங்களுக்குத் தேறுதல்சொல்லவும் துணையாக விருக்

கவும் ஒருவருமில்லாமல் இருள் சூழ்ந்தகாட்டில் தனித்து ஒண்டியாகித் தவிக்கின்றீரோ? அல்லாமலும் ஸ்ரீராமருக்கு ஜடாயுவும் சுக்கிரீவனும் சீதையின் இருப்பிடத்தைச் சொல்லியபடியால் ஸ்ரீராமர் வானரசேனைகளைக்கூட்டிக்கொண்டுபோய்ச் சீதையைமீட்டுக்கொண்டுவந்தார். என்னுடைய நிலைமையை ஒருவருமறியமாட்டார்களே; எவ்வண்ணம் என்னை இச்சிறையில் நின்றும் மீட்கப்போகிறீர்? யாராகிலும் உம்முடைய மனைவியை ராக்கதன் எடுத்துக்கொண்டு போயினனென்று சொன்னாலல்லவோ உமக்குத்தெரிந்து தக்கசேனையுடன்வந்து ராக்கதனை வென்று என்னை யழைத்துப்போவீரென்ற நம்பிக்கையுண்டாகும். ஒருவரும் அறியாததால் அடியாளுக்கு நம்பிக்கை ரவலேசமும் இல்லையே என்னைப்போல் பாவியும் உலகத்திலுண்டோ? நான் எப்படி உயிர்தரித்திருப்பேனென்று வெகுவாகப்பிரலாபித்துக் கொண்டிருந்தாள்.

இப்படியாக மைனவதி துயரப்பட்டுக்கொண்டிங்கே ஆலமரத்தின்பொந்தில் இருக்க, அங்கே திரிலோகசந்தனராஜன் நித்திரைதெளிந்தெழுந்து மனைவியைக்காணுமல் மயங்கித் தியங்கி நாலாபக்கமும் ஓடித்தேடியுங்காணுமல் மனங்கலங்கி அடிபெண்ணே! இக்கொடியகாட்டில் என்னைத்தனியேவிட்டு மிருகங்களினால் கொல்லப்பட்டு மாய்ந்துபோனாயோ? அல்லது காட்டிலுங் கல்லிலும் முள்ளிலும் என்னுடன் நடக்கச்சக்தியற்றுக் கால்கள்நோயினாலும் வெய்யலின் தீக்ஷண்ணியத்தினாலும் ஆகார நித்திரை யில்லாததினாலும் தேகம்மெலிந்து இந்தக்கஷ்டத்தை யனுபவிப்பதைப் பார்கிலும் மரணமடைவது மெத்தவும் நலமாமென்று மனோநிச்சயஞ்செய்து எந்தச்சுனையிலாகிலும் விழுந்து மடிந்துவிட்டையோ? அடி என்னுயிருக்குயிராகியமானே! நானினி யெவ்வண்ணம் உன்னைப்பிரிந்து பிராணனுடன் உலகத்தி லிருப்பேன்? அடி சொற்றவறாத பாவையே! லக்ஷுமிக்கு நிகரான வடிவழகமைந்த பூவையே! இனியொருக்கால் யான்காண்பனோ நின்னையே! அடியெனதாவியே! உன்னை யிந்தக்காட்டில் தாரவார்க்கப் பிரம்மதேவன் விதித்தவிதியோ! அல்லது யார்செய்தசதியோ! யாதொன்றும் அறிகிலேனே கிளியைவளர்த்துப் பூனைக்கிரையாகக் கொடுத்ததைப்போல உன்னை அருமையாகப் பாதுகாத்து சகலசுகத்திலுங் குறைவின்றிப் போஷித்துப் புத்திரப்பேறடைய யிக்காட்டிற்கழைத்துவந்து வஞ்சமோசத்தினால் நின்னை

யிழந்தேனே. ஆடி என்மனைவிக்கினியமானே! யான்பிரிந்து வருந்தேனே! தெவிட்டாவமுதே! என் இவினைக்கோர்மருந்தே! நானெப்படி நகரத்துக்குச்செல்லுவேன்? சென்றாலும் உன் தாய்தந்தைபந்துக்கள் முதலானோருக்கு என்னவிதில் சொல்லுவேன்? யாவரும் நிந்திக்க உடலெடுத்தேனே. உலகத்தில் என்னைவிடப்பாவியும் உண்டோவென்று இவ்வண்ணமாகப் புலம்பிக்கொண்டு அக்காட்டிலுள்ளமாச்சோலைகளால் மூடப்பட்ட இடத்திலும் புதர்களிலும் தேடித் தேடி வேசாறி ஆயாசமேலிட்டு ஓர் மாத்தடியில் உட்கார்ந்து உலகத்தில் மானிடர்கள் ஒவ்வொருவரும் மிகவுந் தங்களுக்கு நேரிடும் கஷ்டங்களைப் பகவன்னாமத்தியானத்தினால் போக்கிக்கொண்டு சுகத்தையடையலாமென்று பலநூல்களுங் கூறுவதால் அந்த உண்மையையறிய வேண்டுமென்று கருதி கேசவா! நாராயணா! மாதவா! கோவிந்தா! முகுந்தா! நந்தநந்தனா! கோபாலா! பக்தவத்சலா! வேணுகானலோலா! கிருஷ்ணா! கஜேந்திரவரதா! ஜகந்நிவாசா! ஸ்ரீநிவாசா! சர்வேசா! தேவதேவா! வாசுதேவா! அநந்தசயனா! அப்பிரமேயா! அதோக்ஷஜா! திரிவிக்கிரமா! வாமனா! மதுசூதனா! சாரங்கதரா! சக்கிரபாணி! பத்மநாபா! தாமோதரா! பிரகலாதவரதா! ருக்குமணிரமணா! அருகபங்கோ! ஆபத்பாந்தவா! இருடீகேசா! தீனதயாளா! இலக்குமிநரசிங்கா! மோகனாங்கா! அடியேனுடைய மனையாளைத்தந்து ரக்ஷிக்கவேண்டுமென்று பக்தியுடன் நிச்சலமாகத்துதித்துக்கொண்டே அவ்வரசன் தன்னைமறந்து பகவானுடைய திருவடியில் லயித்து ஸ்தம்பித்துத் தூணைப்போல அசைவற்றிருந்தான்.

இந்தப்படியாக திரிலோகசந்தனமகாராஜன் பகவத்தியானத்திற்சொக்கித்தன்னைமறந்துபுலன்களையும் ஆகர்ஷித்துக்கொண்டு இருக்கிறபோது அக்காட்டிலுள்ள மிருகங்களிற் சில வந்துபார்த்து இதென்ன மனிதசஞ்சாரமில்லாத இக்கொடியவனத்தில்வந்து கண்ணைமூடிக்கொண்டு இருக்கிற இவன்யாரோ தெரியவில்லை. இதையறியவேண்டுமென்றுயோசிக்கிறபோது அவைகளிலொருபுலியானது மற்றமிருகங்களைப்பார்த்து ஓ நேசர்களே! யான் சொல்லுவதைக் கவனமாகக்கேளுங்கள். அதென்னவென்றால், நாட்டில்வசிக்கவேண்டிய மனிதன் நமது காட்டிற்குவந்து கண்ணைமூடிக்கொண்டு மௌனமாகப் பேசாதிருந்தால் இவன் தவசியாவானோ? இவன் தவசியல்ல. ஏதோ மோசமெண்ணங்கொண்டு இவ்வண்ணமிருக்கிறான். ஆதலா

க்கிஞ்சித்துஞ் சந்தேகமில்லை அதற்குத் திருஷ்டாந்தமாகப் பாருங்கள். இவன் முதுகில் அம்புறாத்தூணி தரித்திருந்தவடு காணப்படுகிறது. அல்லாமலும் இவன்கைகளைப்பாருங்கள். விற்பிடித்தவடுவும் பாணந்தொடுக்கிற வடுவுமிருக்கிறது இதனால் நம்மை இவன்கொல்ல வந்தவனாகத் தோன்றுகிறது. ஆகையால் நம்மைக்கொல்ல மோசவெண்ணங்கொண்டு சமயம்பார்த்திருக்கும் இவனை முன்னதாகவேநாம் கொன்று தின்றுவிடுவோமென்ன, அதற்கு அக்கூட்டத்திலிருந்தயானை ஒன்றுசொல்லுகிறது. கேளும் நேசர்களே! "ஆய்ந்தோய்ந்துபாராதான் தான்சாகக்கடவன்" என்ற முதியோர் மொழியாதலால், இவன்கண்ணைத்திறந்தபின் தீரவிசாரித்து நமக்கு நஷ்டமில்லாதிருந்தால் விடுவோம்; கஷ்டம் நேரிடுகிறபக்ஷத்தில் நீ சொல்லியபடி இவனைக் கொன்றுவிடுவோமென்னக்கேட்டமிருகங்கள் யாவும் சம்மதித்து அவ்வரசனைச்சுற்றிக்கொண்டு வெகுஜாக்கிரதையாய்க் காத்திருந்ததுகள். இப்படியிருக்க அரசன் மூன்றுநாளிரவில் கண்ணைத்திறந்து பார்க்கிறபோது மிருகங்கள் தன்னைச்சூழ்ந்திருப்பதை யறிந்து இதுவென்ன நமக்கு நஷ்டகாலமாக விருக்கிறதென்றுணர்ந்து பகவான் சங்கற்பமின்றி அணுவும் அசையாதாகையால் முன்ஜென்மத்தில் துஷ்கர்மஞ்செய்திருந்தால் அதன் பலன் நம்மையடையாமல் விடமாட்டாது. இதற்கிணங்கத் தான்வசிப்பதோ வெள்ளிமலை. தன் கையில்தாங்கி இருப்பதோ பொன்மலை. தனக்குநேசனோ நவநிதிகளுக்குங் காரணனாகிய குபேரன். தானோ தேவர்களுக்கெல்லாம் அதிபதியாகவிருந்தும் சிவபெருமான் பூர்வகர்மபலத்தினால் கபாலங் கையிலேந்திக்கொண்டு பிக்ஷையெடுக்கும்படியாக நேரிட்டது. அப்படிப்பட்ட கடவுளையே கர்மம்விடாதிருக்க நாமென்ன அற்பம்! நம்மையந்த கர்மசேஷம் சாமானியமாகவிடுமோ? விடாது. ஆகையால், நன்மையும் துன்மையும் சமமாகவே அனுபவிக்கவேண்டும். இந்தப்படி யனுபவிப்பதே உத்தமபுருஷனுக்கு அழகென்று தனக்குத்தானே யோசித்து யான் எனதென்னும் மமகாரத்தைப் பற்றறுத்துப் பகவான் திருவடியில் சிந்தையைப்பதித்திருந்தான். அப்போது யானையானது அரசனைத் தன்தும்பிக்கையினலெடுத்துப்பிடரியின் பேரில் வைத்துக்கொண்டு கூட்டங்களுடன் அந்தக்காட்டிற்கருகிலிருக்குஞ் சோலைக்குள்சென்று அங்கு தவஞ்செய்து கொண்டிருக்கும் ரிஷிகளுக்கெல்லாந் தலைவராகிய சுபுத்திமாமுனிவரிடம்விட்

டது. உடனே அரசன் அம்முனிவருக்குத் தீர்க்கதெண்டனிட்டு கைகட்டி வாய்பொத்திக்கொண்டு மிகவும் வணக்கமாக நின்றான்.

இந்தப்படியாகத் தன்னைச்சேவித்துத் தானென்னும் ஆங்காரத்தைவேரோடு பற்றறுத்து வணங்கி இணங்கிநிற்கும் அரசனைக்கண்டசுபுத்திமாமுனிவர் தன்யோகதிருஷ்டியினால் அரசனது வரலாறனைத்தையும் அறிந்துகொண்டு அரசனைநோக்கி மன்னுயிரைத்தன்னுயிர்போலக்காத்து ரக்ஷிக்கும் உத்தம அரசனே! நகரத்தில் வெய்யல்-பனி-காற்று-மழை தேகத்திற்படாமல் வெகுசுகுமாரமாக உலாவிக்கொண்டு ஏழை பரதேசிகளுக்குப் பசிதீர அன்னமிட்டுமநுநீதி தவறாமல் குடிகளைக்காப்பாற்றிவருகிற விரதத்தைவிட்டுக் காடாந்தகாரமான இருள்சூழ்ந்தவனத்திற்கு மிகவுங் கஷ்டப்பட்டுக்கொண்டு நீ வந்தகாரணம் யாது? உன்னுடைய பத்தினியாகிய உத்தமியையெங்குதாரவார்த்தாய்? இவைகளெல்லாம் ஒன்றுமொளியாமற் சொல்லென்ற முனிவரைவணங்கி அரசன் சொல்லத்தொடங்கினான்.

கேளும் எமதாண்டவரே! தங்களுக்குத்தெரியாத தொன்றுண்டோ? சகலமும் அறிந்துகொள்ளும் யோகதிருஷ்டியை யுடைய தேவரீருக்கு யான் சொல்லவேண்டுமோ? அடியேனைப் பரிசோதிக்கும்பொருட்டு வினவியதாகத்தோன்றுகிறது. ஆகிலும் உண்மைக்கோர்நாளும் பழுதில்லையென்ற முதியோர்வாக்கியப்படி. யானிங்கு வந்த காரணமும் யிடையில் மனைவியை யிழந்த மதிமோசத்தினையும் எவ்வளவும் பிசகாமல் "உற்றது சொன்னால் அற்றது பொருந்து" மென்னும் பழமொழிக்கிணங்கஉண்மையைச்சொல்லுகின்றேன் அதென்னவெனில், தங்களுடைய கிருபையினால் எல்லா பாக்கியங்களும் எங்களுக்குக் குறைவற்றிருந்தும் புத்திரபாக்கிய மொன்றில்லாக் குறையால் என்மனைவியும் யானும் தவசிகளைப்போல வேடம்பூண்ந்து நாடுநகரங்களைத்துறந்து சகலசங்கத்தையுந்துறந்து வெகுதேசங்களெல்லாந்திரிந்து பிச்சையெடுத்துப் பசிதாகந்தீர்ந்து முடிவில் இவ்வனத்திற் கருகிலிருக்குஞ் சோலைக்குள் நுழைந்து அங்கிருந்த வடவாலமரத்தடியி லிறங்கி நடந்தசிரமத்தினால் ஆயாசமேலிட்டு யான்படுத்து நித்திரைசெய் தெழுந்து பார்க்கிறபோது என்பக்கத்தில் படுத்திருந்த மனைவியைக்காணாமல் அக்காட்டிலுள்ள சந்து பொந்து புதர்களெல்லாந் தேடித்தேடி வெசாறி விடாய்ப்பட்டு அங்கோர் மரத்தடியில் உட்கார்ந்து பத்தினியின் கவலையை யொழித்து

இந்திரியாதிகளையடக்கிப்பகவன்னுமங்களைத்தியானித்து என்னைமறந்திருக்கிறபோது இந்த மிருகங்களெல்லாம் என்னைச் சூழ்ந்திருக்க கண்களைத்திறந்த மாத்திரத்தில் கண்டேன். உடனே இந்தயானையானது தன் தும்பிக்கையினுல் என்னையெடுத்துவந்து தங்கள்திருவடியின் முன்விட்டது. இதுவே என்னுண்மையான வரலாறு. அன்றியும், யான் முன்ஜென்மத்தில் யென்னபுண்ணியஞ்செய்தேனே அல்லதுஎந்தமகாத்துமாவின் குளிர்ந்த திருக்கண்பார்வை கடாக்ஷிக்கப் பெற்றேனே தங்களுடைய தெரிசனம் இந்தயானையின் புருஷாகாரத்தினுல் கிடைக்கப்பெற்றேன். இனியெனக் கனுகூலமாகாத காரியமும் உண்டோ என்பாக்கியமே பாக்கியமென்று சொல்லிப்பணிந்து நிற்கும் அரசனைநோக்கிச்சுபுத்திமாமுனிவர்சொல்லத்தொடங்கினர்.

கேளும் உத்தமகுணத்திலும் நற்றவமுயற்சியிலும்சிறந்த அரசர்கோமானே ! நீ சொல்லியவெல்லாம் உண்மையே. உனக்கு மனைவியின்விஷயத்திலும் புத்திரப்பேறடையவேண்டுமென்ற கோரிக்கையும் விசேஷமாக விருக்கிறது. இவ்விரண்டில் ஒன்றுதான் கிடைக்கும். மற்றென்று கிடைக்கமாட்டாது. அதுயாதெனில் புதல்வன் வேண்டுமானுல் மனைவிகிடைக்கமாட்டாள். மனைவிவேண்டுமானுல் புத்திரப் பேறு கிடைக்கமாட்டாது. ஆகையால் இவ்விரண்டில் உனக்குவேண்டியதொன்றைத்தருகிறேன் விருப்பமுள்ளதுஎதுவோ அதைக்கேளுமென்றார். அதற்கரசன் வெகுவாகயோசித்து எங்கள் குலந்தழைக்கும்படி அனுக்கிரகஞ் செய்ய வெழுந்தருளிய ஐயனே அடியேனுக்கு புத்திரப்பேறடையும்படியான வரமொன்று கிருபை செய்தால் போதும். இதுவேயெனக்கு மேலானபாக்கியம். இதற்காகவல்லோ யித்தனைகஷ்டப்பட்டு யிங்குவந்தேன். கிருபைசெய்யவேண்டும். எங்கள்குலதெய்வமே யென்று சொல்லிப் பக்திசிரத்தையுடன் அம்முனிவரது உபய திருவடிகளிலும் தன்சிரம்படிய சேவித்து அடியேனுக்குத்தேவரீரது திருவடிகளே தஞ்சமென்றடைந்ததிக்கில்லாத அனதைக்கு அருள்புரிவது மிகவும்தங்களுக்குக் கீர்த்தியாகுமென்று வேண்டிக்கொள்ளும் அரசன்மேல்கருணையென்னும் மழையைப்பெய்துகவலையென்னும் அக்கினியைத்தணித்து அரசனே! நீர் கேட்டபடி புத்திரன் ஒருவன் கிடைப்பான். அவனுல் நீ சகல சுகங்களையும்அனுபவித்துச்சுகித்திருக்கக்கடவாயென்று வாழ்த்தினர். அரசனும் அடங்காமகிழ்ச்சியடைந்து முனிவரிடத்தில் விடைபெற்றுத்

தன்னகரத்தை நோக்கிப் பகவத்தியானஞ் செய்துகொண்டே போவதை சுபுத்திமாமுனிவர்கண்டு வியப்படைந்து சம்சாரத்தின்மீதில் வெறுப்படைந்த இந்தமன்னனுக்கு நிகரான அரசர்கள் உலகத்திலுண்டோ? மனைவிவேண்டாம; மகன்கிடைத்தால்போதுமென்ற மேலாகிய எண்ணமுண்டாயிருக்கிறதே இவனுக்கல்லவோ உத்தமபதவி கரதலாமலகம்போல விளங்கும். மேலும் ஒருவனுக்கு மகாவிஷ்ணுவின் அம்சத்தில் கிஞ்சித்தேனும் இல்லாவிடில் பாருலகத்திற்கு அரசனாகமாட்டான் என்றபடி இவனுக்கு ஏற்கெனவே மகாவிஷ்ணு அம்சம் பொருந்தியிருந்து விஷயாசக்தியில் ஈடுபட்டுவீண்காலம் போக்காமல் சதாகாலமும் பகவன்னாமத்தியானஞ் செய்துகொண்டு பற்றற்றவனாகவிருக்கு மிவனுக்கு அனுகூலமாகாதகாரியமும் உலகத்திலுண்டோ? இவனுக்குள் அவனும் அவனுக்குளிவனும் பொருந்தியிருப்பதால் இவனேயவன். அவனேயிவனென்பதற்குச் சந்தேகமேயில்லையென்று அம்முனிவர் தனக்குத்தானே யோசித்து அரசனைப்பலவாறு கொண்டாடித் தன்னெதிரில் நிற்கும் மிருகக்கூட்டங்களில் யானையைநோக்கி ஓ கரியே! நீவிரைவாகச்சென்று அதோ போகிற மகாத்துமாவை நினது முதுகின்பேரி லேற்றிக்கொண்டு வரக்கடவாயென்ன, அந்தப்படியே அவ்வியானையானது வேகமாக நடந்து அரசர்கோமானைத் தன்முதுகின்பேரிலேற்றிக்கொண்டுவந்து முனிவர்முன்விட்டது. அரசனும் யானையைவிட்டிறங்கி சுபுத்திமாமுனிவரைப்பணிந்து எமது குலதெய்வமே யாதுகாரணத்தாலோ ஊரைநோக்கிச்செல்லுமென்னை இந்த யானையானது சுமந்து வந்து தங்கள் சமூகம்விட்டது அதனைத்தெரியச்சொல்லவேண்டும் சுவாமியென்றுவேண்ட, அதற்கம்முனிவர் ஓபுண்ணியபுருஷனே! நின்மனதைச்சோதிக்கும்பொருட்டுக்கற்புடையமங்கையைவரவழைத்து நின்னுடன் கூட்டியனுப்பாதபடியால் என்மனதுக்குத் திருப்தியுண்டாகவில்லை. ஆகையால், நின்மனைவியையுங்கூட்டியனுப்புகிறேன் அழைத்துக்கொண்டு போகக்கடவாயென்றுசொல்லி எதிரிலிருக்கும்யானையைப்பார்த்து ஓ வேழமே! இந்தசோலைக்கு அருகிலிருக்கும் வனத்திற்குள் வடவாலமரமொன்றிருக்கிறது; அந்தமரத்தின் பொந்தில் இம்மகாத்துமாவின் மனைவியிருக்கின்றாள்; அம்மாதினையெடுத்துக் கொண்டு வரக்கடவாயென்ன, அந்தப்படியேயானையானது வடவாலமரத்தைநாடிப்போயிற்று. அப்போது அரசன் மகரிஷியைவணங்கி ஓ சுவாமி! அடியேனுடையமனைவி எவ்வண்ணம் வடவாலமரத்தின்

பொந்திற்குள் போயிருக்கிறாள்? அந்த விருத்தாந்தத்தை விவரமாக யானறியச்சொல்லவேண்டுமென்று வேண்டிக்கொள்ள, அதற்கு அம்முனிவர் அரசனைநோக்கிச் சொல்லுகின்றார்.

கேளாய் அரசனே! நீமுன்னம்வந்து தங்கிய வடவாலமரத்தில் பிரம்மராக்கதனொருவனிருக்கிறான். அவன்நீ நித்திரைசெய்வதையறிந்து தீய எண்ணத்துடன் மரத்தைவிட்டுக் கீழிறங்கி உனது மனையாளை எடுத்துக்கொண்டுபோய் அம்மரத்தின்பொந்தில் சேர்த்தமாத்திரத்தில் பதிவிரதையைத் தொட்டெடுத்ததோஷத்தினால் அவன்தேகமெங்கும் பெருவியாதியுண்டாகியதுமன்றி உத்தமியைப் பார்த்தகண்களிரண்டுங் கெட்டுக் கற்புடையமங்கையைக்கருதினபாவத்திற்குநடுக்கமுண்டாகிவெகுசிரமப்பட்டுக்கொண்டிருக்கிறான். அம்மாதுசிரோமணியோ நின்மீதுவைத்திருக்கும் அன்பினால் அழுது துயரமுற்று நின்னையே எதிர்பார்த்துக்கொண்டிருக்கிற கண்களையுடையவளாக விருக்கின்றாள் என்று சொல்லக்கேட்ட அரசன் பெரியோர்களைத் தரிசித்தபலன் வீண்போகாதென்று சந்தோஷித்தனாகி இருக்க, முன்னம் வடவாலமரத்தைநோக்கிச்சென்ற யானையானது அம்மரத்தைக்கிட்டித் தன்னுடைய தும்பிக்கையை மரத்தின்பொந்தில்விட்டு மங்கையையெடுத்துத்தன் முதுகின்மேரில் வைத்துக்கொண்டுவந்து முனிவர்முன்னம்விட்டது. அம்மாது பரமபக்தியுடன்நாயகனுக்கு முன்னம் வந்தனஞ்செய்து பின்முனிவருக்குத் தெண்டனிட்டாள்; இதைக்கண்டமுனிவர் சர்க்கரைப்பந்தலில்தேன்மாரிபொழிந்தது போலமிகவுஞ் சந்தோஷித்துப் பதிக்குத்தக்க சதியும் பெண்டுக்குத்தக்க புருஷனும் வாய்த்ததால் இவர்கள் மெத்தவும் புண்ணியாத்துமாக்களென்று கருதி அம்மாதினையும் வாழ்த்திக் குளிகையொன்றைக்கொடுத்து இதையெடுத்துக்கொண்டுஉங்கள் நகரஞ்சேர்ந்து பருவத்தினன்று சுசியாயிருந்து பாயசத்திற் சேர்த்துப் புசிப்பாயாகில்திவ்யஞான சம்பன்னனான புத்திரன் உதிப்பான் போய் வாருங்களென்று சொல்லி இருவரையுங்கூட்டி யானையின்மேலேற்றிக்கொண்டுபோய்அவர்கள் நகரத்தில் விட்டுவரும்படி திட்டஞ்செய்து அனுப்பினார். தம்பதிகளிருவரும் முனிவரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு யானையின் மீதேறிச்சென்று தங்கள் நகரத்தின் அருகிலோர் சோலையிலிறங்கி யானையை அனுப்பிவிட்டுத் தங்கள்வரவைமந்திரிகளுக்குத் தெரிவிக்கும்படி வேவுகாரரையேவினார். அவர்கள்செ-

ன்று ராஜசபையையடுத்து அரசனும் அரசியும் நகரத்துக்குப்புறம்பே சோலையில் வந்திறங்கியிருக்கிறார்கள். இதுசங்கதியைத் தங்களுக்குத் தெரிவிக்கும்படி எங்களுக்கு அரசன்கட்டளை யிட்டாரென்றுசொல்லிவணங்கினார்கள். அரசன்வந்து சோலையிலிறங்கியிருக்கிறாரென்று வேவுகாரன் சொல்லக்கேட்டஅந்தசபையிலுள்ளமந்திரிகள்முதல்யாவரும் என்றுமிலாத ஆநந்தமடைந்தவர்களாகி அரசன்வரவை யறிவித்த வேவுகாரர்களுக்குத் தக்கபரிசளித்துப் பரலோகத்தையடைந்ததங்களுயிரனைத்தும் மீண்டும்வந்து தேகத்திற்புகுந்ததுபோல்மிகவும் உற்சாகத்துடன்யானைகுதிரை ஒட்டைரதம்பதாதிகளுடன்சகலமானமங்கல வாத்தியங்களுங்கோஷிக்க மந்திரிகள்முதலாகயாவருஞ்சென்று அச்சோலைக்குட்புகுந்து அரசனைக்கண்டுவணங்கிபலவித உபசாரவார்த்தைகளைப்பேசி அரசனது தவக்கோலத்தைமாற்றி ஆரகேயூரகடககங்கணமுதலானநவரத்நாபரணங்களும் மேலாகியவஸ்திரங்களுங்கொடுத்து தரிசித்துக்கொள்ளும்படிச்செய்து அறுசுவையன்னம் பரிமாறிச் சந்தனபுஷ்ப தாம்பூலாதிகளையுதவி ரம்பை, மேனகை, ஊர்வசி, திலோத்தமையென்னுந் தேவதாஸ்திரீகளுக்கு நிகரான தாசிஜனங்கள் பரதநாட்டியஞ்செய்யவும் அரசன் அங்குவீற்றிருந்தார். அப்போது மந்திரி அரசனைப்பணிந்து க்ஷேமலாபங்களைவிசாரித்துக்கொண்டிருந்தான். இப்படியிருக்க பிராமணஸ்திரீகளும் அனேகதாசிகளும் கூட்டமாகக்கூடிக்கொண்டுசென்று அரசியைக்கண்டு பிராமணஸ்திரீகள் அக்ஷதைகளைசிரமேற்போட்டு வாழ்த்தவும், தாசிகள்வணங்கி வெகுவாக அரசிக் குபசரிக்கவும் சில தாதிகள் அரசியின் தவக்கோலத்தைநீக்கி நவரத்தின ஆடையாபரணங்களைத் தரிப்பிக்கவும் சிலர்போய்வந்த சமாசாரத்தை விசாரிக்கவும், இன்னும்பலவிதமாக உபசரிக்கவும் அரசிவீற்றிருந்தாள். பின்பு முதல்மந்திரியானவன் அரசனை ரதத்தின்மேலேற்றிக்கொண்டு ஆலவட்டம் கவரிவீச மகரதோரணம்பிடிக்க பூரிபேரி பாங்கா முதலாகிய மங்கலவாத்தியங்கள் கோஷிக்க பாடகர் பண்பாட தாசிஜனங்களாட கட்டியன் கச்சரிக்கைசொல்ல சகலாடம்பரத்துடன்சோலையை விட்டு வெளிப்பட்டார்கள்.

அப்போது தாசிகளும் அரசியை முத்தாச்சிவிகையி லேற்றிக்கொண்டு ஸ்திரீகூட்டங்கள், பாலா, ஈட்டி, பிச்சுவா, வாள் முதலாகிய ஆயுதங்களைப்பிடித்து சிவிகையின் நாற்புறமும் சூழ்ந்துகொ

ண்டுபுறப்பட்டு அரசன்யேறியிருக்கும் ரதத்துக்குப்பின் பந்தோபஸ்தாக நடந்தார்கள். இவ்வண்ணம் சகலசம்பிரமத்துடன் நகர்வலஞ்செய்கின்ற அரசனையும அரசியையும் அவ்வூர் ராஜவீதிகளிலிருக்கும் வீடுகள்தோறும் வசிக்கும் புருஷர்களும் ஸ்திரீகளும் மேடையின் பேரிலிருந்துபார்த்துஇந்த தருமப்பிரபு நீடூழிகாலமிருந்து அரசுசெய்யவேண்டு மென்பார் சிலர்; இந்த மகாராஜன் புத்திரபாக்கியத்தைப்பெறநாட்டைவிட்டுச்சென்று நெடுநாளானதால் இந்நகரம் லக்ஷ்மி கடாக்ஷம்நீங்கிக் கருணைமாறி யிருந்ததென்பார்சிலர்; இந்த உத்தமனாகியமன்னனுக்கு மகப்பேறில்லாமற் போகுமோவென்பார்சிலர்; இம்மன்னவனுக்குத்தருமங்களும் நற்குண இயல்பும்பிராமணபக்தியும் பெரியோர்கள் விசுவாசமும் பொருந்தியிருக்கிறபடியால் தானாகவே புத்திரபாக்கியம் கிடைக்கும். எளிதாகிய மார்க்கத்தைவிட்டு மலைகலிலி எலிபிடித்து வந்ததைப்போல காட்டிற்குச்சென்று கெட்டலைந்து வெகுபிரயாசப்பட்டு பெரியோரையடுத்துப் பிள்ளை வரம்பெற்றுக்கொண்டு வந்தார் என்பார் சிலர்; இம்மன்னன் தானொருவனேசென்று புத்திரப்பேறடையாமல் மனைவியையும் அழைத்துச்சென்றது மேலான கஷ்டமே யென்பார் சிலர்; இந்த கற்புடைய மாதரசு பூர்வத்தில் யாதுகருமஞ் செய்தாளோ அதன் பலன் வீண்போமோ? நற்கருமஞ்செய்திருப்பாளாகில் இத்தனைகாலமாய் பிள்ளையில்லாமற் கவலைப்படுவாளோ? நாயகனுடன் காட்டிற்குப்போய் சங்கடப்படவேண்டிய காரணமே யில்லையென்பார்சிலர்; இவ்வுத்தமிக்குப் பிள்ளையின் கவலை நீங்கியபடியால் பூர்ணச்சந்திரனுக்கு நிகராகமுகம்பிரகாசிக்கின்றது யென்பார்சிலர்; இம்மாது நாட்டைவிட்டுக் காட்டுக்குப்போய் நெடுநாளானதால் பிள்ளை வரம்பெற்றே வந்திருப்பாளென்று சிலரும், பிள்ளைவரம் பெற்றாகிலும் பெறாதாகிலும் இவர்கள்சுகமேவர்து நகரத்தைச் சேர்ந்தார்களே யிதுவே நமக்கெல்லாம் மெத்தவும் சுகமாகுமென்றிப்படியாக நகரவாசிகளெல்லாம் பலபலவிதங்களாகப்பேசிக்கொண்டு விழித்தகண் விழித்தபடி அவ்விருவருடையவடிவழகைப்பார்த்து பிரமித்துச்சித்திரப்பதுமைகளைப்போல அசைவற்றுநின்றிருந்தனர். அரசனும்தேவியும் நகர்வலம்புரிந்து அரண்மனைமுகப்பில்நிற்க, சிலமங்கையர்கள் பூரணகும்பங்கள்முதல் பற்பலவிதங்களாகிய திருஷ்டிகள்கழிக்க அரசன் ரதத்தைவிட்டும் அரசி சிவிகையைவிட்டு மிறங்கி அந்தப்புரஞ்சேர்ந்து தேகாயாசம் போக்கிக்கொண்டிருந்தார்கள். சேனைகளெல்லாம் தங்கள் தங்களிடம் புக்கிருந்தார்கள்.

ன்று ராஜசபையையடுத்து அரசனும் அரசியும் நகரத்துக்குப்புறம்பே சோலையில் வந்திறங்கியிருக்கிறார்கள். இதுசங்கதியைத் தங்களுக்குத் தெரிவிக்கும்படி எங்களுக்கு அரசன்கட்டளை யிட்டாரென்றுசொல்லிவணங்கினார்கள். அரசன்வந்து சோலையிலிறங்கியிருக்கிறாரென்று வேவுகாரன் சொல்லக்கேட்டஅந்தசபையிலுள்ளமந்திரிகள்முதல்யாவரும் என்றுமிலாத ஆநந்தமடைந்தவர்களாகி அரசன் வரவை யறிவித்த வேவுகாரர்களுக்குத் தக்கபரிசளித்துப் பரலோகத்தையடைந்ததங்களுயிரனைத்தும் மீண்டும்வந்து தேகத்திற்புகுந்ததுபோல்மிகவும் உற்சாகத்துடன்யானைகுதிரை ஒட்டைரதம்பதாதிகளுடன்சகலமானமங்கல வாத்தியங்களுங்கோஷிக்க மந்திரிகள்முதலாகயாவருஞ்சென்று அச்சோலைக்குட்புகுந்து அரசனைக்கண்டுவணங்கிபலவித உபசாரவார்த்தைகளைப்பேசி அரசனது தவக்கோலத்தைமாற்றி ஆரகேயூரகடககங்கணமுதலானநவரத்நாபரணங்களும் மேலாகியவஸ்திரங்களுங்கொடுத்து தரிசித்துக்கொள்ளும்படிச்செய்து அறுசுவையன்னம் பரிமாறிச் சந்தனபுஷ்ப தாம்பூலாதிகளையுதவி ரம்பை, மேனகை, ஊர்வசி, திலோத்தமையென்னுந் தேவதா ஸ்திரீகளுக்கு நிகரான தாசிஜனங்கள் பரதநாட்டியஞ்செய்யவும் அரசன் அங்குவீற்றிருந்தார். அப்போது மந்திரி அரசனைப்பணிந்து க்ஷேமலாபங்களை விசாரித்துக்கொண்டிருந்தான். இப்படியிருக்க பிராமணஸ்திரீகளும் அனேகதாசிகளும் கூட்டமாகக்கூடிக்கொண்டுசென்று அரசியைக்கண்டு பிராமணஸ்திரீகள் அக்ஷதைகளைசிரமேற்போட்டு வாழ்த்தவும், தாசிகள்வணங்கி வெகுவாக அரசிக் குபசரிக்கவும் சில தாதிகள் அரசியின் தவக்கோலத்தைநீக்கி நவரத்தின ஆடையாபரணங்களைத் தரிப்பிக்கவும் சிலர்போய்வந்த சமாசாரத்தை விசாரிக்கவும், இன்னும்பலவிதமாக உபசரிக்கவும் அரசிவீற்றிருந்தாள். பின்பு முதல்மந்திரியானவன் அரசனை ரதத்தின்பேரிலேற்றிக்கொண்டு ஆலவட்டம் கவரிவீச மகரதோரணம்பிடிக்க பூரிபேரி பாங்கா முதலாகிய மங்கலவாத்தியங்கள் கோஷிக்க பாடகர் பண்பாட தாசிஜனங்களாட கட்டியன் எச்சரிக்கைசொல்ல சகலாடம்பரத்துடன்சோலையை விட்டு வெளிப்பட்டார்கள்.

அப்போது தாசிகளும் அரசியை முத்துச்சிவிகையி லேற்றிக்கொண்டு ஸ்திரீகூட்டங்கள், பாரா, ஈட்டி, பிச்சுவா, வாள் முதலாகிய ஆயுதங்களைப்பிடித்து சிவிகையின் நாற்புறமும் சூழ்ந்துகொ

ண்டுபுறப்பட்டு அரசன்யேறியிருக்கும் ரதத்துக்குப்பின் பந்தோபஸ்தாக நடந்தார்கள். இவ்வண்ணம் சகலசம்பிரமத்துடன் நகர்வலம்செய்கின்ற அரசனையும அரசியையும் அவ்வூர் ராஜவீதிகளிலிருக்கும் வீடுகள்தோறும் வசிக்கும் புருஷர்களும் ஸ்திரீகளும் மேடையின் பேரிலிருந்துபார்த்துஇந்த தருமப்பிரபு நீடூழிகாலமிருந்து அரசுசெய்யவேண்டு மென்பார் சிலர்; இந்த மகாராஜன் புத்திரபாக்கியத்தைப்பெறநாட்டைவிட்டுச்சென்று நெடுநாளானதால் இந்நகரம் லக்ஷ்மிகடாக்ஷம்நீங்கிக் கருணைமாறி யிருந்ததென்பார்சிலர்; இந்த உத்தமனாகியமன்னனுக்கு மகப்பேறில்லாமற் போகுமோவென்பாசிலர்; இம்மன்னவனுக்குத்தருமங்களும் நற்குண இயல்பும்பிராமணபக்தியும் பெரியோர்கள் விசுவாசமும் பொருந்தியிருக்கிறபடியால் தானாகவே புத்திரபாக்கியம் கிடைக்கும். எளிதாகிய மார்க்கத்தைவிட்டு மலைகல்லி எலிபிடித்து வந்ததைப்போல காட்டிற்குச்சென்று கெட்டலைந்து வெகுபிரயாசப்பட்டு பெரியோரையடுத்துப் பிள்ளை வரம்பெற்றுக் கொண்டு வந்தார் என்பார் சிலர்; இம்மன்னன் தானொருவனேசென்று புத்திரப்பேறடையாமல் மனைவியையும் அழைத்துச்சென்றது மேலான கஷ்டமே யென்பார் சிலர்; இந்த கற்புடைய மாதரசு பூர்வத்தில் யாதுகருமஞ் செய்தாளோ அதன் பலன் வீண்போமோ? நற்கருமஞ்செய்திருப்பாளாகில் இத்தனைகாலமாய் பிள்ளையில்லாமற் கவலைப்படுவாளோ? நாயகனுடன் காட்டிற்குப்போய் சங்கடப்படவேண்டிய காரணமே யில்லையென்பார்சிலர்; இவ்வுத்தமிக்குப் பிள்ளையின் கவலை நீங்கியபடியால் பூர்ணச்சந்திரனுக்கு நிகராகமுகம்பிரகாசிக்கின்றது யென்பார்சிலர்; இம்மாது நாட்டைவிட்டுக் காட்டுக்குப்போய் நெடுநாளானதால் பிள்ளை வரம்பெற்றே வந்திருப்பாளென்று சிலரும், பிள்ளைவரம் பெற்றாகிலும் பெறாதாகிலும் இவர்கள்சுகமேவர்து நகரததைச் சேர்ந்தார்களே யிதுவே நமக்கெல்லாம் மெத்தவும் சுகமாகுமென்றிப்படியாக நகரவாசிகளெல்லாம் பலபலவிதங்களாகப்பேசிக்கொண்டு விழித்தகண் விழித்தபடி அவ்விருவருடையவடிவழகைப்பார்த்து பிரமித்துச்சித்திரப்பதுமைகளைப்போல அசைவற்றுநின்றிருந்தனர். அரசனும்தேவியும் நகர்வலம்புரிந்து அரண்மனைமுகப்பில்நிற்க, சிலமங்கையர்கள் பூரணகும்பங்கள்முதல் பற்பலவிதங்களாகிய திருஷ்டிகள்கழிக்க அரசன் ரதத்தைவிட்டும் அரசி சிவிகையைவிட்டு மிறங்கி அந்தப்புரஞ்சேர்ந்து தேகாயாசம் போக்கிக்கொண்டிருந்தார்கள். சேனைகளெல்லாம் தங்கள் தங்களிடம் புக்கிருந்தார்கள்.

பின்பொருநாள் அரசன் கொலுக்கூடத்திற்கு வந்து சிங்காதனத்தில் வீற்றிருந்து மந்திரிகளை நோக்கி யான் நகரத்தைவிட்டுப்போனநாள் முதற்கொண்டு நேற்றையவரைக்கும் அரசாக்ஷியில்நடந்த விவகாரங்களையும் கஜானாவிலிருக்கும் பொக்கிஷங்களின் கணக்குமுதலானதுகளையும் சொல்லுங்களென்றுவினவ, மந்திரிகளும்,ராயசர், சராப்பு முதலானவர்கள்சொல்லவும், கணக்குமூலியமாய் யாவற்றையும் அறிந்துகொண்டு தன்னைவிடமிகவும் நீதியாக அரசுசெய்துவந்தமந்திரிகளையும் ராயசர்முதலானவர்களையும் வெகுவாகக்கொண்டாடி அதிக உற்சாகத்துடன் அந்தப்புரஞ்சேர்ந்தான். உடனே மந்திரிகள்முதல்யாவருங் கொலுக்கூடத்தைவிட்டுத் தங்கள்தங்கள் அகஞ்சேர்ந்தார்கள். இந்தப்படியாகஅரசன் அனுதினமும்கொலுக்கூடம் சேர்ந்து சிம்மாசனத்தில் வீற்றிருந்து மனுநீதிவழுவாமல் மிகவும் தருமமாய் அரசுபுரிந்துவந்தான். இந்தப்படியாக அரசுபுரிந்துவருகிறபோது சதுர்த்தசிகடந்துமறுநாள்பருவம்வந்தபடியால் அத்தினம் சுபுத்திமாமுனிவர்சொல்லியபடி பிராமணர்கள் அதிதிகள் யேழை பரதேசிகள்முதலானோருக்கும் கோதான பூதான வஸ்திரதானசொர்னதானமென்னும் சோடசதானங்களும் அபாரமாகச்செய்து அந்தப்புரஞ்சேர்ந்து சுபுத்திமாமுனிவரைப்போல ஒருபதுமையொன்று செய்து அப்பதுமைக்குக் கும்பாபிஷேக முதலானதுகளை நடத்தித் தன்கைகளால் ஆடையாபரணங்களைச்சாத்தி மலர்மாலைசூட்டி தூப நைவேத்தியங்களீந்து சாஷ்டாங்கவந்தனஞ்செய்து பக்திசிரத்தையுடன்பாயாசத்தில் குளிகையைச்சேர்த்துத் தன்மனைவியாகிய மைனவதியை ஆசானுக்கு தெண்டனிடச்சொல்லி பாயசத்தை யீந்தான். அந்தவுத்தமியும் மானசீகத்தில் ஆசானது திருவடிகளை பக்திவினயத்துடன் துதித்துக்கொணடே பாயசத்தைப்புசித்துத் தினமும் யிடைவிடாமல் உட்காரும்போதும் யெழுந்திருக்கும்போதும் சர்வாவஸ்தை சர்வகாலத்திலும் ஆசானது திருவடிகளே தஞ்சமென்று தியானித்துக்கொண்டு கெர்ப்பவதியாகி மாதமொருசடங்காகப்பத்து மாதமும் பத்துசடங்குகளைச் செய்யச் சுபவார சுபதிதி சுபநக்ஷத்திர சுபயோக சுபகரண சுபக்கிரகங்கள்தங்கிய சுபலக்கினத்தில் சிரமமில்லாமல் மிகவும் அழகுவாய்ந்தவோர் ஆண்பிள்ளையைப்பெற்றாள். அப்பிள்ளையின்சுந்தரமானது சாமுத்திரிகாலக்ஷணத்தை யொத்திருந்தது.குழைந்தைபிறந்தசமாசாரத்தைதாதிகளால் அரசனறிந்து உடனே சாஸ்திரவிதிப்படி ஸ்நானஞ்செய்து இளங்கன்றுகளுடன்

கூடின உத்தமமான இரண்டாயிரம் பசுக்களையும், முதற்றரமாகவருஷத்திற்குமூன்றுபோகம்விளையும் வயல்களையும்கணக்கிடமுடியாதசொர்ணங்களையும்வேதவித்துக்களாகிய பிராமணோத்தமர்களுக்குத்தானங்கொடுத்துப் பரமானந்தமடைந்திருந்தான். கேட்டீர்களோ சித்தர்களே! என்ற நாபாஜிசித்தரைநோக்கி உத்தமசித்தர்வணங்கிச்சொல்லுகின்றார். எங்களையீடேற்றும்பொருட்டுக் குலதெய்வமாக யெழுந்தருளியஐயனே! இக்கதையைக்கேட்கக்கேட்க மிகவும் ஆனந்தமேலிட்டு பிரம்மானந்தம்பெருகி பரமானந்தத்தில்லயித்து தேகபரவசமாகின்றது. ஆகையால் இதனைச் சங்கிரகமாகச்சொல்லாமல் பூரணவிரிவாகச் சொல்லவேண்டும் சுவாமி! என்றுவேண்ட நாபாஜிசித்தர் மனக்களிப்புடன் சொல்லத்தொடங்கினர்.

கேளுங்கள் சகலசாஸ்திரங்களுங் கற்றவர்களே! சாதுக்களின் கிருபாநோக்கம்பெற்றவர்களே! எம்பெருமானருள்மாரி யுற்றவர்களே! சகலஞான சம்பத்தினையடைந்த சித்தர்களே! அரசன் அளவிறந்த தானங்களைச்செய்து அடங்காத ஆனந்தவாரியில்மூழ்கி யிருக்கிறபோது ஒவ்வொருநாளாகப் பத்துநாளுங்கடந்தபின் மன்னவன் மந்திரிகளையழைத்துத் தனக்குப்பிள்ளைபிறந்ததும், அப்பிள்ளைக்குநாமகரணஞ்செய்விக்கப்போவதையும் சர்வதேசத் தரசர்களுக்கும் விபரமாகத் தெரிப்பதுமன்றி நகரத்தையும் அலங்கரிக்கும்படி கட்டளையிட்டான். அந்தப்படியே மந்திரிகள் தேசதேசங்களுக்கும் புத்திரஜனனத்திருமுகமெழுதியனுப்பி நகரெங்குந் தண்டோராமூலமாய்க் குடிகளுக்கு வள்ளுவனைக்கொண்டு தெரிவித்து வீதிகள்தோறும் பந்தல் போடுவித்துப் பன்னீரில் பரிமளவஸ்துக்களைக்கலந்து வீதிதவறாமல் தெளித்து வாழை கமுகு முதலாகிய மாயிலைதோரணங்களும் மகரதோரணங்களும் நாட்டிப் பூரணகும்பங்கள் நிறுத்தி நறுமலர்மாலைகளைக்கட்டி எங்குபார்த்தாலும் மங்கலவாத்தியங்கள் கோஷிக்கவும், நகரெங்கும் பரிமளவாசனைவீசவும், குபேரனது அளகாபுரிக்காகிலும் மேலாக நகரலங்காரஞ்செய்து அரசர்கள் தங்குவதற்குத் தக்கவிடுதிகள் அமைத்துவந்து அரசர்கோமானுக்குமந்திரிகள்தெரிவிக்கத் திரிலோகசந்தனமகாராஜன் தாதிகளைவரவழைத்து உங்களரசிக்கும்இளவரசனுக்கும் சீக்கிரம் ஸ்நானமாகட்டுமென்று சொல்லியனுப்பிப் புரோகிதர்முதலானோருந் தயாராயிருக்கின்றார்களாவென்று வினவி நாமகரணத்துக்கு நேமித்தலக்கினத்தைதயெதிர்பார்த்திருந்தான்.

இவ்விடத்தி லிப்படி ஆடம்பரமாகவிருக்க மந்திரிகள் யெழுதி விட்டஜனனத்திருமுகம்ஒவ்வொருராஜனுக்குஞ்சேர்ந்தது. இத்தனை நாளைக்குப்பின் பூபாலருக்குப் பிள்ளைபிறந்தானென்று சந்தோஷத்தையடைந்து தங்கள் தங்கள் ரதகெஜதுரக பதாதிகளாகிய நால்வகைச்சேனைகளுடன் புறப்பட்டு தக்கவிடங்களிலிறங்கி ஆயாசத்தைப்போக்கிக்கொண்டு கௌடபங்காளதேசத்தைச் சேர்ந்தார்கள். அவர்கள் வரவையறிந்து மந்திரிகளெதிர்கொண்டுசென்று சகல உபசாரத்துடன் அழைத்துவந்து விடுதிகளிற்சேர்த்து சகலசாமக்கிரியைகளும் குறைவின்றியீந்து மந்திரிகள் சபாமண்டபத்தை யடைந்தார்கள். விடுதிகளைச்சேர்ந்தஅரசர்கள் சற்றிளைப்பாறி உடனேயாவரும் சகலாபரண பூஷிதர்களாக நடந்து கொலுக்கூடத்தில் சிம்மாசனாரூடனாகிவீற்றிருக்கும் அரசனைக்கண்டுவணங்கினார்கள். அரசனும் வணங்கவேண்டியவர்களுக்கு வணங்கி, உபசாரஞ்செய்ய வேண்டியவர்களுக்கு உபசாரஞ்செய்து அவரவர்களுக்குத்தக்க ஆசனங்களளித்து வீற்றிருக்கச்சொல்லி புரோகிதரைக்கொண்டு புண்ணியாவசனஞ்செய்து ஸ்தலசுத்தியான பின்பு தாதிகளால் இளவரசையெடுத்துவரச்செய்து புத்திரப்பேறடையும்படி கிருபைகூர்ந்த சுபுத்திமாமுனிவரை மனதில்தியானித்து சபையில் எழுந்தருளியிருக்கும் பிரம்மசாரிகள் பிராமணர்கள் சந்நியாசிகள் அதிதியப்யாகதிகள் முதலானோரையும் சுபுத்திமாமுனிவரென்றே மனதில் கருதி தாதிகள் கையிலிருக்கும் புத்திரனைவாங்கி உத்தமமாகவிளங்கும் சந்நியாசியின் கையிற்கொடுத்து பரப்பிரம்ம வஸ்துவுக்குச் சமமானதேககாந்தியும் சாந்தகுணமும் வகித்த எமதாண்டவனே! சிறுவனுக்குத் தங்கள் திருவாக்கினால் நாமகரணஞ் செய்விக்கும்படி கோருகிறே னென்று வணங்க அந்தசந்நியாசியும் பிள்ளைபிறந்த லக்கினம், திதி, வாரம், நக்ஷத்திரம், யோகம், கரணங்களும், கிரகங்களின் நட்பாக்ஷியுச்சம் முதலானதுகளையும் பரிசோதித்து சந்நியாசிகளும் பிராமணோத்தமர்கள் முதல் யாவத்துமான சாதுக்களும அக்ஷதைமலர்கொண்டு வாழ்த்திப் பிள்ளையின்பேரிற் றூவ, சிலர் வேதமந்திரங்களையுச்சரித்து ஆசிகூற, சிலர்பல்லாண்டுபாட, தாசிஜனங்கள் ஆட, மங்கலவாத்தியங்களின் கோஷங்கள் விண்ணுமண்ணுமதிர இத்தியாதி கூடங்களெல்லாம் கடலொலிபோல ஆரவாரிக்க முதியோராகிய சந்நியாசியானவர் அச்சிறு குழந்தைக்கு கோபிசந்தனமகாராஜ னென்று நாம மிட்டுத் தானும் அக்ஷதைமலர்களைக்கொண்டு பிள்ளையின்

பேரிற்போட்டு ஜயஜயவிஜயபவாவென்று மங்கலவாக்களித்து அக்குழந்தையைச் சந்நியாசியானவர் மன்னனிடத்திற் கொடுத்தார்.

அப்பால் அரசனும் புதல்வனைக்கையிலேந்தி உச்சிமோந்து முத்தமிட்டுப்பிறவித்தரித்திரனுக்குப் புதையல் அகப்பட்டதைப்போலவும், பிறவிக்குருடனுக்குக் கண்கள் தெரிந்ததைப்போலவும் ஆனந்தத்தையடைந்து புதல்வனை மார்புடனணைத்துப் பிள்ளையின் அவாமீறி அப்பாமகனே! அழகானமுகனே! ஒப்பிலாதவனே! ஒளிருமாதவனே! செப்புதற்கரிய செல்வமே! நலமே! இப்புவியேத்துமெழிலே! பொழிலே! துப்புளவடிவே! தூய்மறைமுடிவே! செப்பமே! திருவே! திவ்வியவுருவே! இவ்வுலகம் புரக்கவந்த கண்மணியேயென்றுபலவாகப் பாலகனைக்கொண்டாடித் தன்னைமறந்து அடங்காதவானந்தமடைந்து புறம்பேவிற்கும் தாதிகளிடம் பாலகனைக்கொடுத்து அந்தப்புரத்திற் கனுப்பிவிட்டு அங்கிருக்கும் யோகிகளுக்கும் விவேகிகளுக்கும் பிராமணோத்தமர் முதலானோருக்கும் தக்கபடிபரிசுகொடுத்து அனுப்பி அரசர்களையுபசரித்து மரியாதைசெய்து யாவருக்கும் புஷ்பம் சந்தனம் தாம்பூலாதிகளளித்துப் புத்திரோற்சவத்தை ப்பிரம்மோச்சவமாகச்செய்து கொண்டாடி மன்னர் மண்டலீகர்களைவிடுதிகளுக்கனுப்பி மந்திரிகள் சமேதனாக மன்னர் அந்தப்புரஞ்சேர்ந்து நவமணிகளைச்சொர்ணத்தினாற்பதித்ததொட்டிலில் பொற்சங்கிலிகளைப்பூட்டி அத்தொட்டிலில் பாலகனைச்சேர்த்து ஓசைகூட்டித்தாலாட்டித் துன்பங்களையோட்டிக்கண்களைநாட்டிப் பாலூட்டி நீராட்டிப்பாராட்டி மைதீட்டி ஆபரணங்கள்பூட்டி ஆலங்காட்டி அருமையாய்வளர்த்து அருங்கொழுந்துபோற்றளிர்த்து நாளுக்குநாட் செல்வமாகவளர்த்து வருகையில் ஸ்ரீராமர் பிறந்தபோது தசரதனும், கிருஷ்ணபகவான் ஜென்மித்தபோது வசுதேவரும் அடைந்த சந்தோஷத்தைப்போல திரிலோகசந்தனமகாராஜன் தேகமேலுமேலும் பூரித்து உற்சாகமிருந்து பிள்ளையைச்செவிலித்தாயிட மொப்புவித்துவெகுஜாக்கிரதையாக பாதுகாக்கும்படி கட்டளையிட்டு நாளொன்றுக்கு ஐந்து தடவைசென்று பாலகனைப் பார்த்துக்கொண்டுவந்தான். இந்தப்படி வெகுகட்டுதிட்டமாய் அன்புடன் போஷித்துவர வளர்ந்து ஒண்றிரண்டு மூன்று நான்கு ஐந்து வருடமாகவே புத்திரனைச்சகலகலைகளிலுந்தேர்ந்த உபாத்தியாயரை வரவழைத்து அவருக்குத்தக்கபடி பரிசுகளளித்துக் கற்பலகையைத்தருவித்துவாத்தியார்முன்னி

லேயில்வைத்து அடா புத்திரசிகாமணியே! என்னிருகண்மணியே! உபாத்தியாயர் சொற்படிநடந்து கல்வியைக்கற்று நீதிமானுவாய், ஆசானுக்கிணங்கி நீ நடவாதபக்ஷத்தில் நின்மனதில் கல்வி தரிக்க மாட்டாது. ஆகையால் நான் சொல்லும் சொற்களைமறவாமல்சதாகாலமும்ஆசானைவணங்கி அவர்மனங் களிக்கும்படிச்செய்து அவரிடத்திலிருக்கும் வித்தைகளனைத்தையும் கிரகித்துச் சிறந்த புத்திமானுகக் கடவாயென்று பற்பலநீதிகளையோதி ஆசானைநோக்கி ஓ விற்பத்தியிற்சிறந்த உத்தமவாத்தியாரே! எமது புதல்வனுக்குக் கல்வியையோதும், அதிலேதேனும்தப்புகள்நேரிடுமாயின்கண்டனைதண்டனைகள் செய்து விரைவில் இவனைக் கல்விமானுகச் செய்யுமையாவென்றுசொல்ல, உபாத்தியாயரும் அரசனை நோக்கித்தருமத்திற்சிறந்தபூபாலகரே! தங்களுடைய இஷ்டத்தைப்போல தேவரீர் குமாரருக்கு மிகவுஞ் சீக்கிரத்தில் கல்வியையோதி கவிசிரேஷ்டராகச் செய்கிறேன். எனது சாமார்த்தியத்தைப்பாரும் அரசர்கோமானே யென்று சொல்லி கற்பலகையையெடுத்து அதில் பலப்பத்திருல் முதலெழுத்துகளை யெழுதி மன்னன்குமாரரிடத்திற் பலகையையீந்து அவ்வெழுத்துகளையோதினுர். அரசகுமாரனும் உபாத்தியாயர் சொல்லியபடி உச்சரிப்பில் குறைவின்றிசொல்லி வாசித்துக்கொண்டு வந்தான்.

இந்தப்படியாக இளவரசன் வாத்தியாருக் கின்பம் பெருகும்படியாகக் கீழ்ப்படிந்து அடியேனுக் கடியேனுக நடந்துவந்தபடியால் குருவினருளுக்கம்பெருகிப் பத்துவயதுக்கெல்லாம் சகலகலைகளிலும்வல்லவனுகி யானையேற்றங் குதிரையேற்றம் தனுர்வித்தைமுதலானசகலவித்தைகளிலுந் தேர்ந்தவனுயிருக்க, அரசனும் மந்திரிகள் முதலானேரைக்கொண்டு தன்புதல்வன் கற்றிருக்கும் வித்தைகளனைத்தையும் பரிசைக்ஷசெய்து யாவத்து வித்தைகளிலுந் திறமிகுந்தவனுக விருப்பதையறிந்து சந்தோஷமிகுதியால் உபாத்தியாயருக்குத் தக்கபடி வெகுமதிகள்செய்து நகர்வலத்துடன் ஆசானைச்சொந்தவளவிற்சேர்ப்பித்தான். பின்பு இளவரசனுகிய கோபிசந்தனமகாராஜன் தினமும் குதிரையேறிக்கொண்டு வேடிக்கையாகக் காட்டிற்குச்சென்று கலைமான் முள்ளம்பன்றி முசல் முதலாகிய பலமிருகங்களை வேட்டையாடிக்கொண்டு வருவதும் மந்திரிகள் குமாரர்களுடன்சேர்ந்து சந்துசந்துகளெங்குந் திரிவதுமாகத் தன்னிஷ்டப்படியாக நடந்துவந்தான். இதையறிந்துஅரசன் குமாரனையழைத்து



அடாவென்னருமைக்கண்மணியே! புத்திரசிகாமணியே! எனதுகுல த்துக்கு திலர்தமாகவந்துதித்தகட்டிக்கரும்பே! மைந்தன்கலிதீர்க்கவ ந்த தெவிட்டாத வமுதே தந்தைவாக்கை மறுக்காமற்றாயைவெட்டி னபரசுராமரைப்போலவுந் தாய்வார்த்தையைத் தள்ளாமற் சகோதர ர்மனைவிகளைக்கூடின வேத வியாசரைப்போலவுங் குந்திதேவியின் வசனத்தைத்தவறாமற் றுரோபதையைக்கூடின பஞ்சபாண்டவர் களைப்போலவும், மறுகணைதொடுக்காமல் தன்னுயிரைக்கொடுத்த கர்ணமகாராஜனைப்போலவும் என்வார்த்தையைத் தள்ளாமல் பதில் மொழிசொல்லாமல் யானைசேனை பரிவாரங்களின் சகாயமில்லாமல் தனிமையாய் இன்றுமுதல் எங்கும்போகவேண்டாம். எங்காகிலும் போகவேண்டுமென்ற வெண்ணமுனக்குண்டாகில் அதையெனக்குத் தெரியப்படுத்துவையேயாகில் அதற்குத்தக்க பந்தோபஸ்துகள்செய் து அனுப்புகிறேன். அந்த கட்டுகாயிதாவுடன் செல்லுவையாகில் வேற்றரசர்கள் எதிர்த்தபோதிலும் உன்னைக் கவிந்துகொண்டுவருஞ் சேனைகளின் ஆரவாரத்தைக்கண்டு அவர்களுனக்குத் தக்கமரியாதை கள்செய்து வந்தித்துப்போவார்கள். அன்னியிலும் கட்டுகனத்துடன் காட்டிற்குச் சென்றபோதிலும் எந்தமிருகங்களினாலு முனக்கு யா தொரு அபாயமும் நேரிடமாட்டாது. இதனால் உனக்குமெத்தகௌ ரவமுண்டாகுமென்று பலவித நீதிகளையோதியும் இளவரசன்கே ளாமல் இளங்கன்று பயமறியாதுபோலவும் பனங்காட்டுநரி சலசல ப்புக்கஞ்சாதுபோலவும் மகரிஷியின் குளிகையின் பிரபாவத்தால் கிஞ்சித்தும் பயமின்றித் தன்னிஷ்டப்படித் திரிந்துகொண்டிருந் தான்.

இதைக்கண்டவரசன் தன்வார்த்தையைக்கேளாமல் மனம்போ னபடி நடக்கும் தன்குமாரன் விஷயத்தில் மிகவும் துக்கித்து நானெ ன்ன செய்வேன் யெத்தனைவிதத்தில் புத்தி சொல்லியபோதிலும் கேளாமல் தன்னந்தனியே திரிகிற புதல்வனுக்கு யெப்போது யெந்த மிருகத்தினாலோ ஆபத்துநேரிடுவது உண்மையெனத் தனக்குத்தா னேயோசித்து ஓ முனிபுங்கவரே! என்னருமைப்புதல்வனுக்கு யா தொருசங்கடமும் நேரிடாமற்படிகாத்து ரக்ஷிக்கவேண்டும். சுவாமி! முன்னம் பிரம்மராக்கதன் எடுத்துப்போன மைனவதிக்குயாதொரு துன்பமும் நேரிடாமற்காப்பாற்றி எனக்களித்த பரமஉபகாரியாகிய தேசிகரே! புத்திரப்பேறடையும்படி கிருபாநோக்கமளித்தபரமகுரு

நாதரே! தங்கள் கருணையால் அடியேனுக்குண்டாகிய சிறுபாலியனுக்குப் பலவிதமாகியநீதிகளை ஓதியுங்கேளாமல் தன்னிச்சையின்படித் திரிகிறான். அவன்மனதில் தேவரீரெழுந்தருளி திருத்துப்பாடுசெய்து நீதியுள்ளவனாகச் செய்வதுடன் எனக்குப்பின்னிந்த நகரத்தை யாளும்படிக் கிருபாநோக்கம்செய்யவேண்டும் என்றுகுலதெய்வமேயென்று பலவாறு ஆசானைத்துதித்து எந்தெந்தகாலத்தில் எவனெவன் எந்தெந்த கர்மங்களை யனுபவிக்கவேண்டுமோ அந்தந்தகர்மங்களை யவனவன் அனுபவித்தே தீரவேணும். அல்லாமல் விதியைவெல்ல தேவர்மூவர் மற்றியாவராலும ஆகாதென்றால் விதியைவிலக்கி நடக்க நம்மாலாகுமோவென்றுமனோதிடஞ்செய்திருந்தார். இப்படிக் இருக்கிறபோது இளவரசன் வழக்கப்படி யொருநாள் குதிரையேறிக் கொண்டு காட்டிற்குச்சென்று வேட்டையாடி பலமிருகங்களைக்கொன்று வேசாறி அங்கிருந்த ஓர் சோலையிலிறங்கி தாகமருந்தி மரத்தடியில் விடாய்தீரப்படுத்துக் கொண்டிருக்கிறபோது சிலயானைகள் கூட்டமாகக்கூடி அச்சோலைக்குள்ளிருக்கும் தடாகத்திற்குவந்து தண்ணீர்குடித்துக் கரையேறி அருகுவிடாய்தீர மரத்தடியில் படுத்துக்கொண்டிருக்கும் ராஜகுமாரனைக்கண்டு கோபமிகுந்துபெரிந்துபொரிந்து முகங்கரிந்து கண்கள்சிவந்து பிரளயகாலாக்கினியைப்போலச்சீறிக்கிட்டிவருவதையுணராமல் ராஜகுமாரன் அதிகநித்திரையிலிருக்க அங்கு யானையொன்றுவந்துதன் தும்பிக்கையினால் ராஜகுமாரனைப் புரட்டிப்பார்க்கையில் இராஜகுமாரன் திடுக்கிட்டெழுந்து இடையிலிருக்கும்மந்திரவாளையுருவி யானையின் தும்பிக்கையை வெட்டியெறிந்தான். அதிலிருந்து உதிரம்பெருகுவதையும் பாராமல் யானையானது தந்தங்களினாலே இராஜகுமாரனைக்குத்திக்கீழேதள்ளுகிறபோது ராஜகுமாரன்நமது தந்தைசொல்லிய வாக்கியத்தை மறுத்துமனதிச்சையின்படிநடந்ததாலல்லவோ நமக்கித்தனைகஷ்டம்நேரிட்டதென்றுமிகுதி விசனப்பட்டுயானையின் ஆங்காரத்தைக்கண்டு திகைத்திருக்கிறபோது ஆசானது பூரணகடாக்ஷத்தினால் ஓர்யோசனையொன்றுராஜகுமாரனுக்குண்டாகியது. அதுயாதெனில், பாலசிறுவருக்குத்தி இந்தயானையை மடிக்கவிட்டால் மற்றயானைகளெல்லாம் ஒன்றுசேர்ந்து நம்மைக்கொல்லுமென்பதில் சந்தேகமில்லையென்று அங்கிருந்து லகுவாயோடிகுதிரையின் இடையில் மாட்டியிருக்கும்பாணாவாளையெடுத்துக்கொண்டுகோபதீப்தனாகி ஆக்கிரமித்துரோதனாய்க்காலாக்கினிருத்திரனைப்போலப் பற்களை நறநறவெனக்கடித்து மீசைகள்படபடவென

த்துடிக்க விரைவாகவோடிவந்து ஓர் மரத்தின்மேலேறிக் கிளைமீது நின்றுகொண்டு யானையின் மஸ்தகம் பிளந்துபோகும்படி ஓங்கிபாலாவினால் குத்தினான். அப்படி குத்திய பாலாவானது யானையின் மஸ்தகத்தைப் பிளந்து கொண்டு முகவாய்க்கட்டையி லுருவியது. அதனால்யானையானது வீறிட்டுக்கொண்டு பூமியின்மேல்பர்வதாகாரமாய் விழுந்து பிராணனைவிட்டது. இதையருகிலிருந்து பார்த்துக்கொண்டிருந்த யானைக்கூட்டங்களுக்கு மனந்தாளாமல் யானைகளெல்லாந் திரளாகக்கூடி இராஜகுமாரன் ஏறியிருக்கும் மரத்தினடியில் வந்து சூழ்ந்துகொண்டு தும்பிக்கைகளினால் அம்மரத்தின் கிளைகளையொடித்தும் சல்லிவேரும் அற்றுப்போகும்படி மரத்தைச்சாடுவதுமாகப் பலகொடிய செய்கைகள் செய்துகொண்டிருப்பதைக்கண்ட இராஜகுமாரன் சினமிகுந்து தன்னுடைய வில்லைவளைத்துக் குணத்தொனிசெய்து அநேக கோரபாணங்களை வில்லிற்றொடுத்து விட்டான். அந்தப்பாணங்களானது வில்லினின்றும் விடுபட்டு மின்னல் இடிமுழக்கங்களுடன் வந்து யானைக் கூட்டங்களின்மேல் விழுந்து சில யானைகளின் துதிக்கையை வெட்டின. சிலயானைகளின் மஸ்தகங்களைப்பிளந்தன. சிலயானைகளின் தந்தங்களை முறித்தெறிந்தன. சில யானைகளின் கால்களைவெட்டியெறிந்தன. சிலயானைகளின் தேகம்பிளவுற்று உதிரம்பெருகி நதியைப்போலப்பரவச் சிலயானைகள் பயந்தோடியொளிக்க, காளி கூளி ஜாகினி டாகினி முதலானதுகளுக்கு விருந்துசெய்து இராஜகுமாரன் மரத்தைவிட்டுக்கீழிறங்கி இனி எங்காகிலுந் தப்பித்தவழி யொளித்திருக்கின்றதோ வென்ற சந்தேகத்தினால் நான்குதிக்கிலும் சுற்றிச்சுற்றிப் பார்த்துக்கொண்டு வருகிறபோது வானத்தை யளாவிய ஓர் அரசமரத்தில் வெகுநாளாக வசித்துக்கொண்டிருந்த பிரம்மராக்ஷதன் இராஜகுமாரனைக்கண்டு சந்தோஷங்கொண்டு நகைத்து நமது பாக்கியமேபாக்கியம். வெகுகாலமாகக் கோரிக்கொண்டிருந்த நரமாம்சபக்ஷணம் இன்று நமக்குக் கிடைக்கும்படி பகவானுடைய நிர்ஹேதுகத்தியாயமான கடாக்ஷம் உண்டாயிற்று. இதுவல்லவோ ஜெகதீசனது பரமகருணை. கேவலமானவனான மானிட மாம்சத்தைக் கிருபைசெய்யாமல் உத்தமக்ஷத்திரிய குலதிலகனான இராஜகுமாரனை எனக்குணவாகும்படி அனுகூலப்படுத்தின ஜெகதீசனது உதாரகுணத்திற்கு யானென்ன கைம்மாறு செய்யப்போகிறேன்? இங்குமனிதசஞ்சாரமில்லாத இப்பெருங்காட்

டில் இவ்வரசகுமாரன் யாதுகாரணமாய் இங்குவந்தான்? நமக்கு ஆகாரமாகுமபடிக்கே இவ்விடத்திற்கு வந்தானென்பதற்குஞ் சந்தேகமேயில்லை. முன்னம் நாமென்னபுண்ணியஞ் செய்தோமோ! தன்கடையாகவேநமக்குப்புசிப்புக்கிடைக்கின்றது. என்றுதனக்குத்தானே பலவாறுயோசித்துக்கொண்டுபிரம்மானந்தத்துடனிருந்தபோது, இராஜகுமாரன் சமீபித்து வந்துபோவதையறிந்து பிரம்மராக்கதன் ஆரடாபோகிறவன்? என்றுதன் சற்றேவந்து நின்று யான்சொல்லுமொழியைக் கவனித்துக்கேட்டு என்னுடைய பசிதீர உணவாகச் சீக்கிரம்வாடா. அப்படிவராமல் என்சொல்லைத் தட்டிப்போவாயாகில் உன்னை எளிதில்விட்டு விடுவேனென்று யோசிக்காதேயென்று சொல்லிக்கொண்டே அரசமரத்திலிருந்துகிளம்பி இராஜகுமாரன் முன்னே குதித்துப் பற்களை நெற நெறவென்று கடித்து மீசைகள் துடிக்கக் கடுஞ்சினமடைந்து அண்ட முகடு பிளந்ததோவென் றெல்லோரும்படி ஆர்ப்பரித்துஅடாபயலே! நானழைக்க அழைக்கஎன்வார்த்தையைச் சிறிதுஞ் சட்டைபண்ணாமல் மிகவுந்துரிதமாக யேதோபெரிய காரியத்தை உத்தேசித்துப்போகிறவனைப்போலத் தோன்றும்படிப் போகிறாயா? உனக்குண்டாகிய இறுமாப்பை இன்னுஞ் சற்றுநேரத்தில் ஒழிக்கின்றேன் பாரடாவென்று ஆக்ருஷத்துடன் தன்னிருகரங்களையும் நீட்டி இராஜகுமாரனைப்பிடித்து விழுங்குதற்கு யத்தனித்தான். அப்போது இராஜகுமாரன் கடுத்திமாமுனிவர் அளித்தருளியகையினாலும் அப்பெரியோரளித்த வரப்பிரசாதத்தினாலும் உதித்தவனாதலால் பராக்கிரமமிருந்து பிரம்மராக்கதன்பிடித்த பிடியைத்தட்டிவிட்டு இடையிலிருக்கும் சந்திராயுதத்தை உருவிக்கொண்டு பிரம்மராக்கதனை வெட்டமுயன்றான். அதைக்கண்ட பிரம்மராக்கதன் நடுநடுங்கி நாவுலற தேகம் வாட ஐயா இராஜகுமாரனே! உமக்குயான் செய்த அபசாரத்தை மன்னித்து என்விண்ணப்பத்தைக் கேட்கும்படி சரண்புகுந்தேன். என்னைக்காப்பாற்றி ரக்ஷித்தருளும் ஐயனேயென்று தீர்க்கதெண்டனிட்டு எழுந்து இளவரசே! முற்பிறப்பில் யான் பிராமணன். யாகமொன்றுசெய்து அதில் மந்திரலோபங் கிரியாலோபம் உண்டாகியதால் எனக்கிந்த பிரம்மராக்கதஜென்மம் சம்பவித்தது. இவ்வுருவத்துடன் வெகுகாலமாக இந்த அரசமரத்தில்வசித்துக்கொண்டிருந்தேன். இன்று அக்கிரமமாய் உன்னைப்பிடித்து விழுங்க முயன்றபடியால் நினதுஸ்பரிசம் பட்டமாத்திரத்தில் எனக்குப் பூர்வக்கியானமுண்டாகியது. இந்தமகிமையைப்பற்றி உம

மால் எனது பிரம்மராக்கதவடிவம்நீங்கி முன்னமிருந்த பிராமணரூபம்வருமென்று நம்புகின்றேன். ஆகையால் தயவுசெய்து என்குற்றத்தை எண்ணுமல் பூர்வஉருவம் வரும்படி கடாக்ஷம்பண்ணவேண்டுமென்று வெகுவாக வேண்டிக்கொண்டான்.

இப்படி தன்னைவேண்டிக்கொள்ளும் பிரம்மராக்கதன்மீது தனக்கிருந்த கோபம் நீங்கித் தயைபிறந்து தன் தாய்தந்தைகளை நினைந்து பலவாருகத்துதித்து அங்கிருந்த திருத்துழாயைப்பரித்து இந்த் பிரம்மராக்கதனுக்கு முன்னமிருந்த பிராமணஜென்மம் தந்து ரக்ஷிக்கவேண்டுமென்று துதித்துக்கொண்டே துளசியைப்பிரம்மராக்கதன் கரத்திலளித்தான். பிரம்மராக்கதனும் அத்திருத்துழாயை பக்திசிரத்தையுடன் உட்கொண்டான். உடனே அவனுக்குபிரம்மராக்கதஉருவம்நீங்கி முன்னிருந்தபிராமணரூபம்உண்டாகி இராஜகுமாரனை வாழ்த்திப்போயினன். பின்பு இராஜகுமாரன் சோலைகளையெல்லாம் பரிசோதித்துக்கொண்டுவர அங்கொருசோலையில் இரண்டானைகள் ஒளித்துக்கொண்டு இராஜகுமாரன் எங்கேவந்து நம்மையும் மடிக்கிருனோவென்ற பயமிகுதியால் வெகுஜாக்கிரதையாகப் பார்த்துக்கொண்டேயிருந்ததுகள். அவ்விரண்டு யானைகளையுங்கண்ட இராஜகுமாரன் கடுஞ்சினங்கொண்டு குதிரையின்மீதிருந்தபடி பாலாயினலோரானையைக்குத்திவீழ்த்தினன். மற்றோரானைகண்டுபயந்து தன்பிராணனைக்காப்பாற்றிக்கொள்ளும் விஷயத்தில் துணிவுகொண்டு அரண்டுபிரண்டோடி அக்கிருக்கு மலைச்சாரலில் புகுந்துகொண்டது. இராஜகுமாரனும் விடாமற்பின்ருெடர்ந்து ஓடுகிறபோது அந்தமலையின்குகையில் குட்டிபோட்டிருந்த புலியானது நரவாசனை யடிப்பதையுணர்ந்து குகையைவிட்டு வெளிப்பட்டு பாய்ந்துவருவதைக்கண்ட இராஜகுமாரன் பயப்படாமல் திடச்சித்த முடையவனுகி பாலாவினல் எதிர்நோக்கிக் குத்தினன். அக்குத்தானது புலியினிடையில் அசகாயமாய்ப்பட்டபடியால் புலி கீழேவிழுந்து புரண்டெழுந்து ஓடத்தலைப்பட்டது. இராஜகுமாரனும் புலியைவிடாமற் பின்ருெடர்ந்துகுதிரையை வேகமாகவிட்டுக்கொண்டு போனன். கேட்டீர்களோ சித்தர்களே என்று நாபாஜிசித்தர் பின்னுஞ் சொல்லத்தொடங்கினர்.

இவ்வாறு புலி முன்னும் இராஜ குமாரன் பின்னுமாக வெகுதூரம் ஓடுகிறபோது குதிரைக்குத் தேகமெல்லாம் வியர்வையொழுக கால்கள்சோர நாவைத்தொங்கவிட்டுப்பெருமூச்செறிய நட

க்கசக்தியற்று திடீரென்று கீழேவிழுந்து காய்களையுதறிக்கொண்டு உயிர்விட்டது. இராஜகுமாரனும் குதிரைமேலிருந்து லகுவாய் குதித்துக் குதிரை இறந்துபோனதைக்குறித்து வெகுவாகபிரலாபித்து அருகிலிருந்த பள்ளத்தில் குதிரையையிழுத்துப்போட்டுப்புதைத்துவிட்டு ஓர்மரத்தடியிலுட்கார்ந்து "தந்தைசொன்மிக்க மந்திரமில்லை" என்னும் பெரியோர்வாக்கியத்தின்படி நமது தந்தைசொல்லிய புத்தியைக் கேளாததால் நமக்கிப்படிப்பட்ட ஆபத்துகள்நேரிட்டும் உயிருடனிருப்பது தந்தைதாயார்செய்தபுண்ணியவசனமோ? அல்லது எந்தப்பெரியோர்களின் கிருபையோ இனிநாமிப்படி யிளங்கன்று பயமறியாததுபோலப் பெரியோர்கள்வாக்கைமறுத்துத் தன்னந்தனியே இஷ்டப்படி நடந்தால் நமதுயிருக்கே சேதம் வருவதுமன்றி உலகத்தோரும் பந்துஜனங்களும் மந்திரிப் பிரதானிமுதல் யாவரும் தந்தையின்சொல்லைக்கேளாத தறுதலையாகுமிவனென்று நம்மை தூஷிப்பார்கள். ஆகையால் பெரியோர்கள்சொல்லை யின்றுமுதல் குருவாக்கியத்தைப்போலெண்ணிநடப்பதே மேன்மையாகுமென்று தனக்குத்தானேயோசித்து அவ்விடத்தைவிட்டெழுந்து நகரத்தை நோக்கிப்பொழுதுபோகிறமட்டும் நடந்தும்நாட்டைக்காணாமல் காட்டில்தானேதிரிந்துவேசாறிவிடாய்ப்பட்டுபசிமிகுந்து அதைத்தணிக்கத்தக்க யோசனை யொன்றுந்தோன்றாமல்கலங்கி மனம்வாடிகாடாந்தகாரமான இருள்மூடிக்கொண்டதால் வேறெங்குபோகவழிதெரியாமல் அங்கிருந்த ஓர் மரத்தடியிற்படுத்து நித்திரைபிடியாமல் பொழுது விடிகிறபரியந்தம் பசியின்கொடுமையால் நித்திரைவராமல எண்ணாதெல்லாமெண்ணிமனம்புண்ணாகிவிடியற்காலமானவுடனே யெழுந்து அருகிலிருக்கும் காணாற்றில் காலைக்கடனை முடித்துக்கொண்டு கானகத்திலுள்ள மரங்கள்தோறும் புகுந்து புகுந்து பார்த்துச் சிலவிளாங்கனிகளைப் பறித்துப் புசித்துப் பசியாறித் தன்னகரத்துக்குப் போகவழியறியாமல் யாரையாகிலுங்கேட்டுத் தெரிந்துகொள்ளலாமென்றாலும் மனிதசஞ்சாரமில்லாத காடாகையால் இதற்கென்ன செய்வேன் விதியேயென்று பிரலாபித்து முடிவில் தெய்வம்விட்ட வழியாகட்டுமென்று கருதி தெய்வத்தின்மேற் பழியைப்போட்டு அங்கோர் வழியைக்கண்டு அவ்வழியேநடந்து காய்கனிகளைப்புசித்துப் பசியாறுவதும், இரவுவர்தவுடன் மரத்தடிகளிற்படுத்து நித்திரை செய்வதும், பொழுது விடிந்த மாத்திரத்திலெழுந்து நடப்பதுமாகக் காலத்தைப்போக்கிக்கொண்டு நடந்தான்.

இவ்வண்ணமாக இராஜகுமாரன் தன்னகரத்தைச் சேருமார்க்கத்தைவிட்டு வழிதப்பிப் பத்துநாள்பிரயாணஞ்செய்து பதினோராநாள் கால்கள்சலித்து நடக்கச் சக்தியற்று தேகவலிமிகுத்து முட்கள் தைத்ததினாலும் கற்களடிபட்டதனாலும் அடிபெயர்த்து வைக்கக்கூடாமல் அதிகசிரமத்தினால் பொறுக்கமுடியாத சங்கடப்பட்டுக்கொண்டு "முற்பகல்செய்யில் பிற்பகல்விளையும்" என்ற ஔவையார் வாக்கியப்படி நான் முன்ஜென்மத்தில் எந்த பெரியோர்களைச் சங்கடப்படுத்தினேனோ அந்தபாவம் அநுபவிக்கும்படி இந்த ஜென்மத்தில் அது நம்மை வந்தணுகாமல் விடுமோ? பாவியாகிய எனக்குஞ் சுகமனுபவிக்கநேரிடுமோ? என்னைப்போலுங் கொடியபாவி இவ்வுலகிலுமுண்டோ? யாருமற்ற அனாதையைப்போல இக்காட்டில் தவிக்கின்றேனே! ஓ தெய்வமே! இதுயான் முன்னஞ்செய்த ஊழ்வினையோ? ஓம் நமோ நாராயணா! அபயம். அச்சுதா! பச்சைமேனியனே! அபயம். ஆயனே! செங்கனிவாயா! அபயம். புருஷோத்தமா! பத்மநாபனே! அபயம். எங்குநிறைந்தபரிபூரணா! அபயம். புவிக்குள்ளாதிகாரணா! அபயம். நாரதாதிகள் பாராயணா! அபயம். பக்தர்கள் பவநிவாரணா! அபயம். தொண்டர்களேத்தும் தூயனே! அபயம். அண்டர்கள்போற்றுமையனே! சரணம். கொண்டல்மேனி குளிர்மெய்யனே! அபயம். பஞ்சாயுதந்தரித்த கையனே! அபயம். படியுளோரேத்தும் பலபத்திரா! அபயம். அடியார்கள்போற்றுந் தேவகிபுத்திரா! அபயம். இரணியனைவென்றயெந்தையே! அபயம். தருணமெனையாளென்றந்தையே! அபயம்அபயம் அபயமென்றிந்தப்படி ஓலமிட்டு ஓவென்றிரஞ்சிக் கதறும் முறையானது அக்காட்டில் அநேகதவசிகளுக்கு முதல்வராகிய சுபுத்திமாமுனிவருடைய திருச்செவியிற் கேட்டமாத்திரத்தில் அம்முனிவர் திடுக்கிட்டுத் தன்யோகதிருஷ்டியினால் பார்த்துத் தன்னுடைய அருளினாலுதித்த இராஜகுமாரனென்றறிந்து தனக்கு ஏவல்செய்யும் யானையை அழைத்து அபயம் அபயமென்று முறையிட்டுக்கதறும் இராஜகுமாரனை முதுகின்மேல் தாங்கிக்கொண்டு வரும்படி கட்டளையிட, அக்கட்டளையின்படி அந்தயானையானது சென்று நடக்கவும் எழுந்திருக்கவும் உட்காரவும் சக்தியில்லாமல் படுக்கையிலிருந்துகொண்டே கோவென்று புலம்புகிற இராஜகுமாரனை தும்பிக்கையினாலெடுத்து முதுகின்மேல் வைத்துக்கொண்டு மாமுனிவரது ஆசிரமத்தைநோக்கி வருகிறபோது இராஜகுமாரன்மிகவும்பயந்து பத்து

தினத்திற்குமுன்னம் நாம் யானைக்கூட்டங்களை அடித்துக்கொன்றோமே அந்தயானைக்கூட்டங்களி னின்றும் தப்பியோடி ஒளித்து நம்மைக்கொல்லப் பின்றொடர்ந்து நாம் மெலிந்துகிடக்கும் சமயம் பார்த்து இந்த யானையானது நம்மைஎடுத்து முதுகின்மேல் வைத்துக்கொண்டுபோகிறதே இத்தனைநாளாய் நம்மைமடிக்க வஞ்சம்வைத்திருந்த இது நமதுயிரை வாங்காமல் விடுமோ? தன்னினங்களையெல்லாம்கொன்ற நம்மேல் இதற்குவிரோதம் நீங்குமோ? நாமினிபிழைப்பது அரிதே. ஆகிலும் இன்னொருசந்தேகமிருக்கிறது. அதுயாதெனில், எதற்கும் சக்தியற்றுக்கிடந்த நம்மை இந்தயானையானது அங்கேதானே எளிதிற்கொன்றுவிடலாமே. அப்படிக்கிக்கொல்லாமல்தன் முதுகின்மேல் நம்மைத்தாங்கிக்கொண்டு போவதால் ஏதோ விசேஷமிருப்பதாகத் தோன்றுகிறது. அல்லாமல் சுபசகுனங்கள் அனேகமுண்டாகிறது. இந்த நல்ல சகுணங்களைக்குறித்து யோசிக்கையில் இங்கு நமக்கோர் மகாத்துமாவின் சேவைகிடைப்பதாகத் தெரிகிறது என்று இராஜகுமாரன் தனக்குத்தானே யோசித்துக்கொண்டு போகிறபோது யானையானது இராஜகுமாரனை மாதவசிரேஷ்டர் முன்னம் விடுக்க, முனிவரைக்கண்ட ராஜகுமாரன் அவரை வலம்வந்து சாஷ்டாங்கமாகப்பணிந்து கண்ணீர்விட்டழுதுகடவுளேயெனத்தொழுது பாதங்களில்நயனங்களையணிந்து பூமியில்விழுந்து புரண்டெழுந்து வாய்விட்டிரைந்து மனம்புழுங்க அயர்ந்து கண்ணீராறுய்ப் பெருகவிட்டழுது இருகரங்களையுஞ் சிரமேற்குவித்துதொழுதுநிற்கும் இராஜகுமாரனைநோக்கி முனிவர் சொல்லுகின்றார்.

கேளாய் இராஜகுமாரனே! பக்தர்கள்போற்றும் பகவானுனவர் இத்தலந்தன்னி லின்புடன்பிறந்தார், கோல விராமனுய்க் குறைபலவடைந்தார், சீதையாற்றுன்பஞ் சிந்தையிலடைந்தார், சங்கரஹத்தியால் ஜகமெலாந்திரிந்தார், பங்கயன்தலையிழந் தங்கமொந்திருந்தார். இப்படிஊழ்வினையானது திரிமூர்த்திகளையே விடாமற்சேர்ந்து துக்கமடைந்திருக்க நீ அடைந்ததுக்கம் அணுவில் பதினுயிரத்தொருகூறுமோ? அன்றியும் பூர்வகர்மம் உன்னைவிடுமோ? அனுபவித்தே தீரவேண்டும். மேலும் உலகத்தில் யாவராயிருந்திடினும் ஜனகமகாராஜனைப்போல நன்மைதுன்மை இரண்டினையுஞ் சமமாகவே அனுபவிக்கவேண்டும்; இப்படி யனுபவிப்பதே உத்தமபுருஷர்களுக்கு லக்ஷணம். இதைவிட்டு நன்மைவந்தபோது சந்தோஷிப்பதும் தீமைவந்தபோது துக்கப்படுவதும் அதமபுருஷர்களுக்கு இயல்பெ

ன்பதுபோல உத்தமனாகிய திரிலோக சந்தனமகாராஜன் வயிற்றிற் பிறந்த நீ இப்படி அதமபுருஷர்களைப்போல சிந்திக்கத் தகுமா? இத்தனைகஷ்டமும் உனக்கு நேரிட்டதற்குக்காரணம் தந்தையின் மொழியைத்தடுத்து நடந்ததனாலேயாம் என்று பலநீதிமொழிகளையோதி இளைப்புத்தீர உணவாதிகளைக்கொடுத்து மூன்றுநாள் தன் ஆசிரமத்தில்வைத்துக்கொண்டு பெரியோர்களுக்குத்தாழ்ந்து சிறியோர்நடக்கவேண்டிய தருமத்தைப்போதித்து சந்தோஷிக்கச்செய்திருந்தார்.

இந்தப்படியாக இராஜகுமாரன் சுபுத்திமாமுனிவர் ஆச்சிரமத்தில் பலநீதிவாக்கியங்களைக் கேட்டுக்கொண்டிங்கேயிருக்க, அங்கே நகரத்தில் பத்து பதின்மூன்றுநாளாய் குமாரனைக்காணாமல் இராஜன் அடாஎன்னருமைப்புதல்வனே! நீ எங்கேபோனாயப்பா! என்சொல்லைக்கேளாமல் எந்த கானகத்திற்குப்போய் மிருகத்தின்வாயிற்சிக்கிமடிந்தாயோ! எவ்வண்ணம் நொந்தாயோ! அடா என்கட்டிக்கரும்பே! இந்தகொள்ளைக்குத்தானோ முனிவரிடம் குளிகையைப் பெற்றதும் வளர்த்ததும் இந்த நகரத்தை நீயாளுவாயென்று நம்பி மிகு சந்தோஷமடைந்திருந்தேனே நீ எப்படி மாண்டுபோனாயோ அப்போதென்ன நினைத்துக்கதறினையோ? அருமையாகப் பெற்றுவளர்த்துச் சீராட்டிய நின தன்னையின் வயிற்றில் நெருப்பையிட்டாயே நம்பியிருந்த எங்களைநட்டாற்றில் விட்டதைப்போல கைவிட்டையேஉன்னைவிட்டு இவ்வுலகில் ஒருநிமைப்பொழுதேனும் உயிர்தரித்திருப்போமோ? மகாமுனிவர் ஆசீர்வாதபலனும் பொய்த்துப்போயிற்றேயென்று பலவிதமாகப் பரதவித்தார். மைனாவதியும் வெகுவாகப் புலம்பியழுதாள். “கடந்தஞானியுங் கடப்பரோ மக்கண்மேற்காதல்’ என்பதற்கொப்ப “புத்திர துக்கம் நிரந்தரம்” என்பதுபோலத்தினமும் புத்திரனைநினைந்து நினைந்துருகி மெலிவடைந்திருந்தார்கள். இந்தத்துக்கத்தைப் பார்க்கக்கூடாதவர்களாகிய மந்திரிப்பிரதானிகள் பலநாடுகளுக்கும் காடுகளுக்கும தூதர்களை அனுப்பித்தேடி எங்கும் இராஜகுமாரனைக்காணாமல் தளர்வடைந்தும் தைரியத்தைவிடாமல் அரசனுக்குத் தேறுதல் சொல்லிக்கொண்டிருந்தார்கள். இங்கு இவ்வண்ணமிருக்க அங்கேமுனிவரது ஆசிரமத்திலிருக்கும் இராஜகுமாரன் எழுந்து முனிவரை வலம்புரிந்து தெண்டனிட்டு ஓ சுவாமி அடியேன் அரண்மனைவிட்டுவந்து பதின்மூன்றுநாளானதால் என்னைப்பெற்ற தாயுந்தந்தையும் என்னைக்காணாமல் வெகுவாய் பிரலாபித்து வாடுவார்கள்; இன்னுமிரண்டுநாளைக்குள் யான்சென்று முகங்

காட்டாவிடில் தங்களுயிரை மாய்த்துக்கொள்ளுவார்கள். ஆகையால் கிருபைகூர்ந்து நாயேனுக்கு விடைதரவேண்டும் சுவாமி என்று வணங்கிநிற்கும் இராஜகுமாரனை வாழ்த்தித் தனக்குத் தொண்டுசெய்திருக்கும் யானையை அழைத்து இச்சிறுவனை யுன்முதுகின்மீது தாங்கிக்கொண்டுபோய் கௌடபங்காள நகரத்திற்கருகில்விட்டுசீக்கிரம் இங்கே வருவாயென்று கட்டளையிட அந்தப்படியே யானையும், இராஜகுமாரனை முதுகின்மீ தேற்றிக்கொண்டு விரைவாக நடந்து போகும்போது இராஜகுமாரனுக்கு நித்திரைவந்தபடியால் கண்ணை மூடிக்கொண்டு தூங்கிவிழுவதையறிந்து யானையானது இதுநல்ல சமயமென்றுன்னி ஆகாயமார்க்கமாய்க் கிளம்பிக் கண்ணிமைக் கொட்டுவதற்குள்ளாக கௌடபங்காளதேசத்தினருகிலிருக்குஞ் சோலையிலிறங்கி உபாயத்தினால் இராஜகுமாரனையெழுப்ப இராஜகுமாரன் திடுக்கிட்டுக் கண்ணைவிழித்துப்பார்த்துயானை நகரத்திற்குச் சமீபத்தில்வந்து நிற்பதை யுணர்ந்து இதுவென்ன ஆச்சரியம் நாம் நகரத்தைச்சேர வெண்ணிப் பலநாளும் காடெல்லாந்திரிந்து திரிந்து வே சாரியும் நகரத்தையடைய வழிதெரியாமல் கதறிக்கொண்டிருக்க அப்போது இந்தயானைவந்து நம்மையெடுத்து முதுகின்மேலேற்றிக் கொண்டுபோய் முனிவரிடத்தில் விட்டது. அம்முனிவரால் பசிதாகந்தணிந்து விடைபெற அம்மகாத்மா இந்த யானையின்மீதேற்றியனுப்ப இங்குவந்துசேர்ந்தோம். இத்தனை விரைவில்நாம் நகரத்தையடைந்தது அப்பெரியோருடைய மகிமையேயென்றுகருதி முனிவரிருக்குந் திசையை நோக்கி நமஸ்கரித்து யானையைவிட்டிறங்கி யானையைவலம்வந்து பணிந்து தன்னகரத்தைநாடி நடந்தோரடிதைத்துத் திரும்பிப்பார்த்தபோது யானையைக் காணாததால் வியப்புற்று முனிவரைத் துதித்துக்கொண்டே நடந்து அரண்மனையைச் சேர்ந்தான். இதுசங்கதியைத் தூதர்களறிந்து மகாராஜனுக்குத் தெரிவித்தார்கள். இராஜனும் உயிரிழந்த கூட்டில் மறுபடியும் உயிர்புகுந்ததைப்போலவும், நெடுநாளாய் வியாதியினால் பீடிக்கப்பட்டவனுக்குத் தக்க ஔஷதத்தை உபயோகித்த மாத்திரத்தில் நோய்நீங்கி தேகம் சொஸ்தமடைந்ததைப்போலவும் அரசனுக்குத் தூதர்சொல்லிய வசனங்களென்னும் அமிர்தம் செவியின்வழியாகப் புகுந்து நாவில் மதுரம்பெருகி மனதிலுதித்த புண்ணறி தேகத்திற்கு ஆனந்தமூண்டாகிப் புதல்வன் வந்ததைத் தெரிவித்த தூதர்களுக்குத் தக்க பரிசளித்து அனுப்பிவிட்டு திடீரென்றெழுந்து அந்த

ப்புரத்திற்குச்சென்று காணாததைக் கண்டதைப்போலவும் நெடுநாளாய் தேசாந்திரம்போனவன் வரக்கண்டதைப்போலவும் குமாரனைக் கண்டு தேகம்பூரித்து அடா குழந்தாய்! எனது குலம் விளங்கவந் துதித்த விளக்கொளியே! இத்தனைநாள் எங்குபோயிருந்தாய்? எங் கேபோய்த் திரிந்தபோதிலும் அரண்மனைக்குவந்து அன்னம்புசித்து அந்தப்புரத்தில் நித்திரைசெய்யும் நீ இத்தனைநாளாக எங்கே புசித் தாய்? எங்கே நித்திரை செய்தாய் என்னகாரணத்தால் நகரத்தைவி ட்டு அன்னையையும் என்னையும் மறந்திருந்தாய்? எப்படிமனந் துணிந்தாய்? யாரிடத்திலுஞ் சொல்லாமற்போவது தகுதியோ? சக லதருமமுந்தெரிந்த நீயும் இப்படிச் செய்யலாமோ? நாங்கள் நீ எங் கேபோனாயென்று தேடியலைவது? அடா என்கண்மணியே! இன்று முதல் இப்படிச்செய்து எங்களுயிரை வாட்டாதே. இப்படிச்செய் வதாலுனக்கு கௌரவம் வரமாட்டாதேயென்று மன்னவன்கூற, மைனாவதி புதல்வனைநோக்கிச் சொல்லத்தொடங்கினாள்.

அடா என்மகனே! அழகானமுகனே! குலந்தழைக்கவந்தசுத னே! புத்திரதிலகனே! ஒருநாளேனும் அந்தப்புரத்தைவிட்டு அய லிடத்தில் நித்திரை செய்யாத நீ பதின்மூன்றுநாட்களாய் எங்குபு சித்து எங்குசயனித்து எப்படியிருந்தாய்? நின் தந்தையின்மனம் புண்ணாகும்படி நீ மனம்போனவண்ணந் திரிவது தருமமோ? இத ற்குத்தானாயாகயெக்கிய தானதருமம் திவ்யக்ஷேத்திரம் திவ்யதீர்த் தங்கள் முதலாகிய நற்கருமங்களைச்செய்தும் அரிதாகிமுடிவில் தவ சிரேஷ்டராகிய சுபுத்திமாமுனிவரது கிருபையினால் உன்னைப்பெற் றுவளர்த்தது? உன்னால் நாங்கள் நற்பதம்பெறுவதற்கன்றோ இத்த னை கஷ்டமுப்பட்டது? இதை நீ கிஞ்சித்தும் எண்ணிப்பாராமல் வளர்த்தகடா மார்பிற்பாய்ந்ததுபோல் பெற்றவர்கள்சொல்லைக்கேளா மல் இஷ்டப்படி நடப்பது அறிவுடையநின்போன்ற சிறுவர்களுக்க ழகாமோ? மாதா பிதா குரு தெய்வம் என்பதுபோல மாதுர் பிதுர் வாக்கியபரிபாலஞ்செய்த ஸ்ரீராமரைப்போலவும், பெரியோர்கள்வாக் கை மறுக்காமல் சிரோபூஷணமாகக்கொண்டு நடந்த தருமந்தன ரைப்போலவும், இன்றுமுதலேனும் நின்தந்தையின்சொற்படி நடந் து நல்லகீர்த்தியை யடையாயப்பாவென்று பல நீதிவசனங்களை யுரைத்து எனக்குற்ற புத்திரகலியைத் தீர்க்கவந்த செல்வமே! நீ இத்தனைநாள்போயிருந்த இடந்தானெது? அதை நாங்களறியும் படிச் சொல்வாயப்பாவென்று இனிமையாய் மொழிந்த அன்னை

தந்தைகளை நோக்கி நாணமடைந்து குற்றவாளியும், மாமியார்முன் மருகியும், ஆசானுக்குமுன் மாணாக்கனும், புருஷனுக்குமுன் விபசாரியும் நடுங்குவதுபோல இராஜகுமாரன் அரசன்முன் கிடுகிடென்று நடுநடுங்கிப் பூனைபோலொடுங்கி வாய்குளறி நாத்தடுமாறி இருவருக்குந்தெண்டனிட்டு வணங்கி என்னைப்பெற்ற தாய்தந்தையர்களே! யானறியாமற்செய்த குற்றத்தை மன்னித்து என்னை ரட்சிக்கவேண்டுமென்று வேண்டிக்கொண்டு, தான்போனதுமுதல் அரண்மனையிற்சேர்ந்த பரியந்தம் ஒன்றொளியாமல் நடந்த சவிஸ்தாரம் யாவும் சொன்னான். அதைக்கேட்டு அரசனும் அரசியும் சந்தோஷமடைந்து முனிவருடைய கிருபையினாலும் அவர்சொல்லிய புத்தியினாலும் நமது புத்திரன் வழிப்பட்டு நடந்து இனி சுகப்படுவதற்குத் தடையில்லையென்று ஆனந்தமடைந்திருந்தார்கள். அது முதல் இராஜகுமாரன் ஆசான்சொல்லியவண்ணம் தாய்தந்தையர்களுக்கு வணங்கி யிணங்கி அவர்கள்சொல்லைக் குருவார்த்தையாகவெண்ணிப் பக்தியாக நடந்துவந்தான்.

இவ்வாறு இராஜகுமாரன் மாமுனிவர்சொல்லிய வண்ணம் தாய் தந்தையர்களின் இஷ்டப்படி நடந்துவருகிறபோது பால்யம் மாறி யௌவனம்வந் தணுகியபின் மகாராஜன் தன்மனைவியை நோக்கிப் பெண்ணே! நமது குமாரனே வயதில்மூத்தான். ஆகையால் இனி சீக்கிரம் அவனுக்கு விவாகம் நடத்தவேண்டுமென்று யோசிக்கிறேன். உன்கருத்தென்ன? நமதுகுலமரபில் தக்கபெண் எங்கேயிருக்கிறது சொல்லென்ன, உத்தமஸ்திரீயாகிய மைனாவதி நீடித்த ஆலோசனைசெய்து ஓமணவாளரே! பட்பிரதேசத்தரசன் கன்னிகையாகிய குமுதவதியென்னும் பெண்மணி நமது புதல்வன் அழகுக்குத்தக்கவள். அக்கன்னிகையைப்பேசி விவாகஞ்செய்தால் மிகவும் நலமாயிருக்குமென்று சொல்லினள். இதைக்கேட்ட அரசன் அப்படியே யாகட்டுமென்று ஒத்துக்கொண்டுகொலுக்கூட்டத்திற்கு வந்து மந்திராலோசனைசெய்து முதல் மந்திரியுடன் சிலசேனைகளையுங்கூட்டி அக்கன்னியைப்பேசி முடித்துக்கொண்டுவரும்படியாகத் திட்டஞ்செய்து அனுப்பினான். மந்திரியும் அரசன்சொற்படி சேனைகளுடன்சென்று பட்பிரதேசத்தைச்சேர்ந்து அங்கோர் சோலையிலிறங்கித் தன்வரவை அரசனுக்குத் தெரிவித்தான். தூதர்களால் மந்திரி வரவையறிந்த பட்பிரதேசத்தரசன் சகல மங்கலவாத்தியங்களுமுழங்க எதிர்கொண்டுசென்று மந்திரிக்குத் தக்க மரி

யாதைகள்செய்து அழைத்து வந்து தகுதியான விடுதியிற்சேர்த்து வேண்டியவஸ்துக்களையுதவி புசித்தானபின்பு மந்திரியைக்கொலுகூடத்திற்கழைத்துப்போய் ஆசனந்தந்து யோகக்ஷேமங்களை விசாரித்துப் பிறகு அரசன் ஐயா மதியிற்சிறந்த மந்திரியே! எங்கள்மேல் கிருபைகூர்ந்து மெத்தப்பிரயாசையுடன் இங்கு வந்தகாரணம் யாதோ அதைத்தெரிவிக்க வேண்டுமென்று வினவிய அரசனை நோக்கி மந்திரிமொழிபலுற்றான். மநுநீதிதவறாமற் செங்கோல்செலுத்தும் ஓ அரசனே! எங்கள் மகாராஜனுக்கு அருமையாகப்பிறந்த இளவரசாகிய கோபிசந்தன மகாராஜனுக்கு உமதுபுதல்வி குமுதவதியைத் திருமணஞ்செய்விக்க எண்ணங்கொண்டு எமதரசன் எங்களைத்தங்களிடஞ்சென்றுபேசி முடிவுசெய்துகொண்டு வரும்படியனுப்பினர். இந்தசுபகாரிய விசேஷத்தை முடிப்பது மேலான தருமமாகையால், அரசன் இஷ்டப்படி தங்களிடம்வந்தேன். எமதிளவரசனுக்குஉமது கன்னிகையாகிய குமுதவதியைக்கொடுத்து விவாகஞ்செய்விப்பதற்குத்தங்களுக்கு விருப்பந்தானோவென்று கேட்ட மந்திரியைநோக்கிப் பப்பிரதேசத்தரசன் சொல்லுகின்றான்.

கேளும் புத்தியிலும் யுக்தியிலும் யூகையிலுஞ்சிறந்த மந்திரியே! உமதிளவரசனுக்கு எனது கன்னிகையைக்கொடுத்து விவாகஞ்செய்விக்க எனக்குப் பூர்ணசம்மதியுண்டெனினும், பெற்றவளுடையமனதையும் அறிந்தல்லவோ சொல்லவேண்டும்? பதறாதகாரியஞ் சிதறாதென்பதுபோல, அவசரப்படாமல் சற்றுநிதானித்தால் உமதிஷ்டப்படியே செய்விக்கிறேனென்று தாழ்மைசொல்லி விடுதிக்கு அனுப்பிவிட்டு அரசன் திடீரென்றெழுந்து அந்தப்புரத்திற்குச் சென்று மனைவியையழைத்து ஓ பெண்மணி! கௌடயங்கார தேசத்தரசன் புதல்வனாகிய கோபிசந்தனமகாராஜனுக்கு நமதுகன்னிகையாகிய குமுதவதியைக் கேட்கிறார்கள். உனது கருத்தென்னவென்றுவினவ, அம்மங்கைஉடனே ஓர் தாதியையனுப்பி சமஸ்தானசோதிடரை வரவழைத்து மாப்பிள்ளையின் ஜாதகத்தைக் கொடுத்து இதைப்பரிசோதித்துச் சொல்லுமென்ன, சோதிடரும் அந்தஜாதகனது திசாபுக்தி அந்தரம் அந்தராந்தரம் முதலியவற்றையும் யூகித்து அரசனையும் அரசியையும்நோக்கி இந்த ஜாதகன் அதிககாமி; நூறு மனைவிகளுடையவன்; சிலகாலம் அரசாகூடிசெய்திருந்து முடிவில் ஓர் ராசானுடைய கிருபாவிசேடத்தால்சகலசங்கத்தையும் ஒழித்துப்

பரதேசிகோலம்பூண்டு ஜீவன்முக்தனாவான் என்றுசொல்லக்கேட்ட அரசி அரசனைநோக்கி மகாராஜனே! நூறு பெண்டிருடையவனுக்கு நமது கன்னிகையைக்கொடுப்பதனால் இப்பெண் ஒருசமயம் கண்ணீர்விட்டழும்படியாகநேரும். இதன்றிசிலநாளில் பரதேசியாய் விடுவானென்பதால், அப்போது இப்பெண்ணை நாம் பார்த்துப்பார்த்து துக்கப்படவேண்டிவரும். ஆகையால் இந்தஜாதகனுக்கு நமதுகன்னிகையைக் கொடுக்கத்தக்கதன்றென்றாள். இவ்வசனத்தைக்கேட்ட அரசன் அடி பெண்ணே! இந்த ஜாதகனுக்கு நமது கன்னிகையைக் கொடுக்கமாட்டோமென்று நாம்சொல்வோமானால் அந்த மன்னனுக்கு நம்மேல் விரோதம் நேரிட்டு இந்த முகாந்தரத்தைக்கொண்டு அவ்வரசன் நம்மீதுபடையெடுத்துவந்து யுத்தஞ்செய்து நம்மைப்பராஜியாக்கிவிடுவானாகையால் காலதேசவர்த்தமானம், தன்பலம், எதிரியின் ஆற்றல் இவைகளை ஆலோசித்து ஒருகாரியத்தில் முயற்சிசெய்யவேண்டும். ஆதலால் எதிரி பலத்தவன் என்று தெரிந்திருந்தும் இதையோசிக்காமல் நாம் கன்னிகையை கொடுக்கமாட்டோமென்று சொன்னால் உடனே நமக்குக் கெடுதியுண்டாகும். அல்லாமலும், இந்த ஜாதகனுக்கு நமது கன்னிகை பட்டமகிஷி யாவதனால் நமது பெண்ணுக்கு யாதொருகுறையும் நேரிடமாட்டா. என்வார்த்தையை மறுக்காமல் கொடுக்கச் சம்மதிப்பையாகில் நான் இன்னுஞ் சிலநாளிந்தநாட்டை அரசாண்டுகொண் டிருக்கிறேன். கொடுக்கமாட்டேனென்பையாகில் இன்றே யான்நாட்டைவிட்டுக் காட்டிற்குச் சென்று பகவானைத்தியானித்திருந்து மேலானபதவியை யடைகிறேன். இது உண்மையான வார்த்தையென்று நம்பக்கடவையென்று சொல்லி வைராக்கியசித்தனாகி யிருந்தான். இதைக்கண்ட அரசி நாயகன்மனதுக்கிசைந்து நடவாதவனிதையும், ஆசான்சொற்படி நடவாதசீஷனும், தந்தைதாய்க்கிணங்கி நடவாதபுதல்வனும், எஜமானுக்கு அடங்கி நடவாதசேவகனும், ஆண்டைக்கிதமாக நடவாதபடியாளும் பயன்படமாட்டார்களென்னும் முதியோர் வாக்கியத்தின்படி நாமும்நமது கணவனுக்கிசைந்தொழுகாவிடில் பலரும்நம்மை விபசாரியென்று நிந்திப்பார்கள் ஆகையால் மன்னவனிஷ்டப்படி நடப்பதே நமக்குக் கீர்த்தியாமென்று தனக்குத்தானே யோசித்தவளாகி அரசனைப்பணிந்து ஓ நாதா! "எண்ணறக்கற்றும் எழுத்தறவாசித்தும்பெண்புத்தி பின்புத்தி" என்பதுபோல பேதமைப்புத்தியால் ஏதோசிலமொழிகள்தங்களுக்கெதிருத்தமாகப்பேசினேன். இதற்குக்காரணம் மதியின்

மையேயாம். ஆகவே எனதுகுற்றத்தை மன்னித்து அடியாள்மேல் கிருபைகூர்ந்து தங்களிஷ்டப்படியே நடத்துமென்று வேண்டிக் கொள்ள, அரசன் களிகொண்டு அந்தப் புரத்தைவிட்டுக் கொலுக் கூடத்திற்குவந்து வேவுகாரர்களால் கௌடபங்காளதேசத்துமந்திரி யை வரவழைத்து ஆசனத்திலிருக்கச்செய்து எனது கன்னிகையை உனது இளவரசனுக்குக்கொடுத்து மணம்புரிவிக்கச் சம்மதித்தேன். இச்சங்கதியை உமது அரசனுக்குத் தெரிவித்து இந்த சுபகாரியத் தை நடத்திக்கொள்ளச் சொல்லுமென்றான். மந்திரி அரசனைநோக்கி மன்னவனே! சிலபந்துக்களறிய நிச்சயதாம்பூலம் மாற்றிக்கொள்ளு வோமென்றான். அங்ஙனமேயாகுகவென்று பந்துக்கள்புரோகிதர்கள் முதலானோரையும் வரவழைத்து மனசாக்ஷிக்குவிரோதமின்றி சபை யோரறிய அரசன் எனது புதல்வியை உனது இளவரசனுக்கே கொடுக்கச்சம்மதித்தேன். இது சத்தியவார்த்தை என்றுசொல்லிக் கொண்டே தாம்பூலத்தையெடுத்து மந்திரிகையிற்கொடுத்தான். மந் திரியும் எனது இளவரசனுக்கே உனதுகன்னிகையை நாயகியாகக் கொள்ளுவோம். இதுசத்தியம் என்று தாம்பூலத்தையெடுத்து அர சன்கையிற்கொடுத்தான்.

இவ்வண்ணம் கௌடபங்காளதேசத்து மந்திரியும் பப்பிரதே சத்தரசனும் ஒருவருக்கொருவர் தாம்பூலமாற்றிக்கொண்ட பின்னர் புரோகிதர்முதலானோருக்குத்தக்கபடிபொருளளித்து பந்துக்களுடன் புசித்துச் சந்தன புஷ்பதாம்பூலாதிகளைத்தந்து அவரவர்களுக்கு வி டையளித்தனுப்ப பந்துக்களும் அரசனிடம் விடைபெற்றுத்தங்கள் தங்கள்விடுதிபோய்ச்சேர்ந்தார்கள். மந்திரியும்பப்பிரதேசத்தரசனிட த்தில் விடைபெற்றுக்கௌடபங்காளதேசத்தைநோக்கிச்சென்று பரி வாரங்களுடன் நகரத்தையடைந்துகொலுக்கூடத்திற்குவந்து அரச னைக்கண்டுவணங்கித்தான்போய்வந்தசங்கதியையறிவிக்கஅவன் அட ங்காமகிழ்ஷியடைந்து சபையைவிட்டெழுந்து அந்தப்புரத்தையடை ந்து மைனாவதியைநோக்கி ஓ பெண்ணே! நீ சொல்லியவண்ணம் நம து மந்திரியைப் பப்பிரதேசத்துக்கனுப்பி அவ்வரசன்பெண்ணைப்பே சிகெட்டிசெய்துகொண்டு வரும்படியாக அனுப்பினேன். அந்தப்ப டியே மந்திரியுஞ்சென்று கன்னிகையைப்பேசி முடிவுசெய்துகொ ண்டு வந்துசேர்ந்தான். இனி நமதுபுதல்வனுக்கு மணஞ்செய்விக்கத் தடையென்ன வென்றான். மைனாவதியும் அரசனைப் பணிந்து மன்னவனே! எல்லாவற்றிற்கும் தாங்களே கர்த்தாவாக விருந்

தும் சுதந்திரமில்லாத அடியாளைச் சோதிப்பதும் நீதியாமோ? தங்களிஷ்டப்படியே சீக்கிரம் நமது புதல்வனுக்கு மணஞ்செய்விக்க யாதொருதடையுமில்லை என்ற மனைவியின் வணக்கவிணக்க சாந்தமொழிகளுக்குச் சந்தோஷித்து அந்தப்புரத்தைவிட்டுக்கொலுக்கூடத்திற்குவந்து மந்திரியை அழைத்து புரோகிதரைக்கொண்டு முகூர்த்தநாள்குறித்துப்பெண்வீட்டுக்கும் மற்றராஜாதிராஜர்களுக்கும் ஓலையெழுதிவிட்டு நகரத்தை அலங்கரித்து விடுதிகள் ஏற்படுத்தி விவாகத்திற்குவேண்டிய சாமக்கிரியைகளெல்லாஞ் சேகரித்துச் சர்வசித்தமாயிருமென்று கட்டளையிட்டான். அக்கட்டளையின்படியே மந்திரியும் முகூர்த்தநாள்வைத்து பப்பிரதேசத்தரசனுக்கும் மற்றுமுள்ள பூபாலர்களுக்கும் மணவோலையெழுதிவிட்டு நகரெங்கும் பந்தலிட்டு வாழை-கமுகு முதலான பலவித மரங்களைக்கட்டி பரிமள மலர்மாலைகளை எங்கும்பரப்பிப் பூப்பந்தலிட்டு அரசர்கள் தங்குவதற்கு விடுதிகள்பலவேற்படுத்திச் சாமக்கிரியைகள் ஒன்றேனுங் குறைவின்றிசேகரித்துச்சர்வசித்தமாக விருந்தான்.

மந்திரியானவன் எழுதிவிட்ட ஓலைகள் ஒவ்வொரு தேசத்தரசருக்குங் கிடைத்து ஓலைவாசித்து மிகுந்த சந்துஷ்டர்களாய்த் தங்கள் தங்கள் ரதகஜதுரகபதாதிகள் சகிதமாய்ப் புறப்பட்டுவந்துகௌடபங்காள தேசத்தையடைந்து மந்திரிகள் உபசரிக்க விடுதிகளில்தங்கியிருந்தார்கள். பப்பிரதேசத்தரசனும் மணவோலையைக்கண்டவுடன் வெகுவாகச்சந்தோஷித்துத் தன் சேனைபரிவாரங்களுடன் கன்னிகையையும் அழைத்துக்கொண்டுவந்து அந்நகரத்திற்கருகில் ஓர் சோலையிலிறங்கித் தன்வரவை வேவுகாரர்களால் தெரிவித்தான். அதைக்கேட்ட திரிலோகசந்தன மகாராஜனும் ரதகஜதுரகபதாதிகள் சூழ மங்கலவாத்தியங்கள் கடலொலிபோல் கோஷிக்க எதிர்கொண்டு சென்று சகலமரியாதைகளுடன் அழைத்துவந்து தக்கவிடுதியிற் சேர்த்து மந்திரியை அழைத்து ஓ மதிமந்திரி! இந்த மகாராஜனுக்கு வேண்டிய வஸ்துக்களைத் தடையின்றித்தந்து உபசரிக்கக்கடவாயென்று ஆக்கியாபித்து அரண்மனைக்குவந்து ராஜஸ்திரீகளையும் தாதிகளையுங்கூட்டிச் சகலமேளவாத்தியங்களும் முழங்கும்படிச்சென்று பரியமிட்டுக் கன்னிகையை அழைத்துவந்து நலங்கிட்டுத் தாதிகளால் அக்கன்னிகைக்கு ஸ்நானாலங்காரங்களைச் செய்யும்படி திட்டஞ்செய்து தன்புதல்வனுக்கு நலங்கிட்டு ஸ்நானஞ் செய்வித்து ஆடையாபரணங்களை யலங்கரித்துச் சுபலக்கினத்தில் வேதியர்கள்

ஆசீர்வதிக்க பிராமணஸ்திரீகள் மங்கலம்பாட பக்தர்கள் பல்லாண்டு கூற வித்துவான்கள் வாழ்த்த நல்லசுபலக்கினத்தில் கோபிசர்தன மகாராஜன் பப்பிரதேசத்தரசன் புதல்வியின் கண்டத்தில் மாங்கலிய ஞ்சூட்டினன். பின்பு பிராமணர்கள் முறையே ஓமமுதலான சடங்குகளை நடத்தி முடிவுசெய்யக்கண்ட பெரியஅரசன் கோதானம் பூதானமுதலாகிய சோடசதானங்களும் பிராமணர்களுக்கு எண்ணில்லாமலளித்து தேசஅரசர்களைத் தக்கபடி உபசரித்துத்தம்பதிகளுக்குத் திருஷ்டிகழித்துப் பள்ளியறையிற்சேர்த்து கண்ணாரக்கண்டு மகிழ்ச்சியடைந்திருந்தான்.

இந்தப்படியாக திரிலோக சந்தனமகாராஜன் தன்குமாரனுக்கு மூன்றுமாதம்பிரம்மோத்ஸவத்தைப்போல திருக்கல்யாணமகோத்ஸவத்தைநடத்தி, வந்திருக்கும் அரசர்கள் யாவருக்கும் அவரவர்கள் அந்தஸ்த்துக்குத்தகுந்தபடி சன்மானமளித்துவிடைகொடுத்தனுப்பிவிட்டுத்தம்பதிகளுக்காக நூதனமாய் அந்தப்புரம் ஒன்றுகட்டி அதிலவர்களைக் குடியேற்றி வெகுபிரியத்துடன் அவர்களையும் அரசையும் பாதுகாத்துவந்தான். பிறகு தம்பதிகள் ரதியும் மதனும்போலவும்,இந்திராணி இந்திரன்போலவும்,நகமுஞ்சதையும்போலவும்,உடலும் உயிரும்போலவும் பிரியாமல் இகபோகங்களை அனுபவித்துக்கொண்டு சுகமாயிருந்தார்கள். ஒருநாள் இராஜகுமாரன் வேடிக்கையாகக் குதிரையின் மிதேறிக் கொண்டு நகரத்தைவிட்டு வெளிப்போகிறபோது சில நற்சகுனங்கள் தோன்றக்கண்டு இதென்ன நமக்கென்றுமில்லாதநற்சகுனமாகின்றதே! இதற்குக்காரணம்யாதோ ஒன்றும்தெரியவில்லையே என்று தான்கண்ட சகுனக்குறிகளை யோசித்துக்கொண்டே வெகுதூரம்போய் அங்கொரு ஆலமரத்தைக்கண்டு அதன் உயரத்தையும் விசாலத்தையும் பழுத்துப் பலவர்ணங்களா யிருக்குங் கனிகளையும் அக்கனிகளைப்புசித்துப் பசியாறுகின்ற பஞ்சவர்னக்கிளிகளையும் அக்கிளிகள் ஆணும்பெண்ணுங் கூடிக்குலாவி சப்திக்கிற இனியமொழிகளையுங்கேட்டுச் சித்தசஞ்சலமுண்டாகிக் காமவிகாரமேலிட்டுச் சகிக்கக்கூடாதவனாகி நாமென்ன அறிவுகெட்டு மனைவியைவிட்டுத் தனித்து நெடுந்தூரம் வந்துவிட்டோமே வந்தஇடத்தில் ஆச்சரியப் படத்தக்க ஆலமரத்தைக்கண்டதும் அதில் பேடைகளுடன் கூடிவிளையாடும் கிளிகளைப்பார்த்தும் காமநோய்கொண்டோமே! இதைத்தடுக்க முடியவில்லையேயென்

றுதன்மனைவியை நினைந்து நினைந்து காமாக்கினியினுல் தகிக்கப்பட்டு மெய்சோர்ந்து நினைவுதடுமாறி அம்மரத்தடியில் விழுந்துகிடந்தான். அப்போது சூரியன் மேற்றிசைபோய் மறைந்தான். உடனே கிருஷ்ணபக்ஷத்தின் அந்தகார இருளானதுவந்து அங்கு மூடிக்கொண்டது. அக்காட்டிலுள்ள பலவித துஷ்டமிருகங்களும் வெளிப்பட்டு பேரிடிகளைப் போல தொனிக்கும் ஓசையினுலும் மதயானைகள் வீறிட்டுகொர்ஜிக்கும் ஒலிகளினுலும் அக்காடானது சமுத்திர கோஷடத்தை யொத்திருந்தது. இவ்வோசையினுல் ராஜகுமாரன் மூர்ச்சைதெளிந்துஎழுந்து உட்கார்ந்து கடும்பசியினுல் களைமேலிட்டு உட்கார சக்தியற்று மறுபடியும் படுத்திருந்தான். நடுராத்திரியானவுடன் அவ்வர்லமரத்திலிருந்து சித்துபுருஷன் ஒருவன்வெளிப்பட்டுவர அவன் பின்னே தொண்ணூற்ருென்பது ராஜகன்னிகைகள் ஒருவர்பின்ஞெருவராகப் பின்ருெடர்ந்து வருவதைக்கண்ட இராஜகுமாரன் எழுந்து உட்கார்ந்து அக்கன்னிகைகள் தரித்திருக்கும் ஆபரணங்களின் நடுவில் வைத்திழைத்திருக்கும் நவரத்தினங்களின் ஒளியினுல் அனேகசந்திரர்கள் உதயமானதுபோல அந்தகாரத்தைப்போக்கி அக்காடெங்கும் பிரகாசம் நிறைந்திருந்தபடியால் இராஜகுமாரன் அக்கன்னிகைகளின் வடிவழகைப்பார்த்து இவர்களென்ன இந்திரபட்டணத்தில்வசிக்கும் ரம்பை, ஊர்வசி, மேனகை, திலோத்தமைகளென்கிற நான்கு ஸ்திரீகளும் இத்தனையுருவம் பெற்றுவந்தார்கள் போலத் தோன்றுகின்றதே. இவர்களுடைய சௌந்தரியங்களை எவ்வண்ணம் புகழ்ந்துகொண்டாடுவது? இவர்களுக்கிணையாக எந்த ஸ்திரீகளையுஞ் சொல்லத்தகாது. ஆகையால் இவர்களுக்கு இவர்களே ஒப்பாவார்கள். என்று அவர்கள் வடிவழகினில் பிரமித்து அசைவற்றிருந்தான். இப்படியிருக்கும் இராஜகுமாரனைக்கண்ட ராஜகன்னிகைகள் யாவரும் மோகமேலிட்டு மன்மதன்கணைகளால் துயரெய்தி இராஜகுமாரனைக்கூடி காமத்தை பொழிக்கவேணுமென்ற இச்சையுடையவர்களாகிச் சித்துபுருஷனது பயத்தினுல் சமயம் நேரிடாததைப்பற்றி மனவாட்டமடைந்து இராஜகுமாரன் மீதே தங்கள் பார்வையை வைத்தவர்களாகிச் சித்துபுருஷன் பின்சென்ருர்கள். அப்போது சித்துபுருஷன் அங்கிருக்கும் ஓடைக்கருகிற்சென்று ஸ்நானஞ்செய்து அனுஷ்டானுதிகளை முடித்துக்கொண்டு கரையேறி ஓர்மரத்தடியிற்சென்று ஜெபஞ் செய்துகொண்டிருந்தான். அந்தச்சமயத்தில் தொண்ணூற்ருென்பது கன்

ன்னிகைகளில் ஒருத்தி தைரியமுடையவளாகச் சித்துபுருஷனுக்குத் தெரியாமல் ஓடிவந்து ராஜகுமாரன் திருவடியில்விழுந்து தெண்டனிட்டெழுந்து கைகட்டி வாய்பொத்திநின்று மனிதசஞ்சாரமில்லாத இந்தக்காட்டில் தனித்து ஏகாந்தமாயிருக்கின்ற நீர் முகவாட்டத்துடன் வீற்றிருக்குங் காரணம்யாது? நீர் தேவனோ அல்லது மனிதரோ அடியாள் தெரிந்துகொள்ளும்படி சிறிதும் ஒளியாமல் தங்கள்வரலாறுமுழுமையுஞ் சொல்லவேண்டுமென்றுநயந்துகேட்கும் கன்னிகையைநோக்கி இராஜகுமாரன் சொல்லுகின்றான்.

கேளும்வடிவழகில் ரம்பையைநிகர்த்த சுந்திரி! இக்காட்டிற்கு வெகுதூரத்தில் கௌடபங்காளதேசமென்றோர் நகரமுண்டு. அந்நகரத்தையாளும்திரிலோகசந்தனமகாராஜனதுபுதல்வன்யான். என்பேர் கோபீசந்தன் இளவரசன். இன்றுகாலையிலெழுந்து அந்தப்புரத்தைக்கடந்து குதிரைலாயத்திற்குவந்து இக்குதிரையின்மீதேறி வேடிக்கையாய் குதிரையைநடத்திக்கொண்டேவந்து இங்கடைந்து இந்த ஆலமரத்தின் விந்தையையும் இதில்பஞ்சவர்ணக்கிளிகள் கொஞ்சிவிளையாடிக் கூடிச்சுகிப்பதையும் கண்ட எனக்குக் காமவிகாரமேலிட்டு மனைவியைநினைந்து வருந்தி காமாக்கினியைத் தணிப்பதற்கு இங்கொருவரும் காணப்படவில்லையே என்று வாட்டமடைந்திருக்கும் என்கண்முன் யாரோ சிலபெண்கள் தோன்றினார்கள். அவர்களில் நீயொருத்தி என்மீது மையலாகி வந்தனை இதுவே எனது வரலாற்றின் உண்மை. இனியுனது வரலாற்றைச் சொல்லக்கடவையென்ன இராசகுமாரனை நோக்கி அக்கன்னிகை சொல்லலுற்றாள்.

கேளும் எனதாசைநாயகனாகிய கோமானே! தெற்கே புளிந்ததேசமென்றோர்நகரமுண்டு; அந்நகரத்தையாளும் காஞ்சனமேகியென்னும் அரசனுக்கு வெகுநாளாய் பிள்ளையில்லாக்குறையால் பெரியோர்கள் யார்வந்தபோதிலும் அவர்களை வழிபட்டுக் கோரிய உணவாதிகளைக்கொடுத்து சந்தோஷமுறும்படி வெகுவிநயமாகப் பாதுகாத்து வருவார். இப்படியனேக சாதுஜனங்களை பகவத்சொரூபமாகப்பாவித்துப் பணிவிடைசெய்வதில் சிறிதும் மனஞ்சலியாத உத்தமகுண சீலனிடம் கருணைவள்ளலெனும் உத்தமசாதுவானவர் எழுந்தருளக்கண்ட அரசன் எதிர்கொண்டுசென்று அழைத்துவந்து ஆசனத்திலிருத்திஷோடச உபசாரங்களையுஞ்செய்து ஓ! ஸ்வாமி தங்கள் திருவடிபட்டு இந்நகரம் புனிதமாய்விட்டது. தங்களைச்சேவி



த்த அடியேனும் பாவனனுய்விட்டேனென்று இனியமொழிகளை ப்பகர்ந்து தனக்குப்பிள்ளையில்லாக்குறையை அந்தச் சாதுவின்பாலு ரைக்க அவரும் சந்தோஷித்து அரசனுக்கு ஓர் மந்திரத்தையுபதே சித்து இம்மந்திரத்தை இரவும்பகலும் இடைவிடாமல் தியானித் துக்கொண்டிருப்பாயாகில் உனதுகனவில் ஒருதிவ்வியபுருஷன்தோ ன்றுவார்; அவருக்கு வந்தனைவழிபாடுகள்செய்து உனக்குவேண்டிய வரத்தைக் கேட்பாயாகில் அந்தப்படியே திவ்வியபுருஷன் வரம ருளிமறைவார். அந்தவரத்தின்பலனையடைந்து சுகஜீவியாயிருக்கக் கடவாயென்று ஆசிகூறிச்சென்றூர். பிறகு காஞ்சனமேதகியென்னும் அரசன்கருணைவள்ளலென்னும் பெரியோர் தனக்குபதேசித்துச்செ ன்றமந்திரத்தைச்சர்வகாலசர்வ அவஸ்தையிலும் தியானித்துக்கொ ண்டிருக்க ஓர் நாளிரவில் அரசன் நித்திரைசெய்யக்கனவில் திவ்வி யபுருஷன்தோன்றி மகாராஜனே என்னையுத்தேசித்து தியானித்த காரணம் யாதோ அந்தவரத்தைக்கேளும் தடையின்றித் தருகிறே னென்ன, அரசன் மகாத்துமாவே எனக்குச்சில பிள்ளைகள்உண்டா கும்படி வரந்தரவேண்டும் என்றுவேண்ட திவ்வியபுருஷன் அரச னைநோக்கி ஓமகாராஜனே நீர் ஒருபிள்ளையைக்கேட்டிருந்தால் ஆண் குழந்தையொருவன்பிறந்து இந்நாட்டையாளுவான். அப்படிகேட் பதைவிட்டு சிலபிள்ளைகள் உண்டாகும்படி வரந்தரவேணுமென்று கேட்டபடியால் உனக்குப் பெண்பிள்ளைகள்தொண்ணூற்றென்பது பேர்கள் ரூபவதிகளாக உதிக்கக்கடவர்களென்று வாழ்த்தி மறைந் துபோயினர். பின்பு திவ்வியபுருஷன் அளித்தவரத்தின்படி யாங்க ள்தொண்ணூற்றென்பதுபேர்கள் பெண்பிள்ளைகளாக அவதரித்து மிகவும் பிரியமாய்ப் போஷிக்கப்பட்டு கன்னிகைப்பருவமடைந்து நாங்கள்கன்னியாமாடத்திலிருக்கிறபோது இந்தசித்துபுருஷன் வந்து அரசனிடத்தில் சிலசித்துகளை விளையாடினன். அதைக்கண்ட எங் கள்தந்தை வியப்புற்று ஐயா சித்துபுருஷரே உமக்கென்னவேண்டும் கேளும் தடையில்லாமல் தருகிறேன்எனக்கூற, சித்துபுருஷன் எமது தந்தையைநோக்கி ஓ அரசனே! நான்கேட்பதை மறுக்காமல்தரு கிறேனென்றசொல்லிய உமதுவாக்குப் பிசகாது அளிக்கவேண்டும். அப்படிக்கி யான் கேட்டதைக்கொடாமல் வார்த்தையைப் புரட்டு வாயாகில் உனது நகரம் வெந்து நீறுய்ப்போகும்படி சபிப்பேன். இதில் எள்ளத்தனையும் பிசகமாட்டேன் என்னசொல்லுகிறுயென்ன,

அரசன்பயந்து நடுநடுங்கி சித்துபுருஷரே! நீ ரெதைவிரும்பிக்கேட்டபோதிலும் அதை அவசியந் தருவனேயல்லாமல் சொல்லிச் சோர்வடையமாட்டேன். இதைச்சத்தியமென்றுநம்புமையாவென்றுஉறுதிமொழிகூறிய அரசனைநோக்கி சித்துருபுஷன் சொல்லியதாவது, ஓஅரசனே! நீர் அருமையாகப்பெற்றதொண்ணூற்றொன்பதுகன்னிகைகளையும் எனக்குத் தரவேண்டுமென்று கேட்டான். இப்படிக்கேட்ட மொழியானது எனது தந்தையின்செவியில் நாராசத்தைக்காய்ச்சிவிட்டதுபோலாகி உயிர்பிரிந்ததைப்போல மெய்சோர்ந்து நாவரண்டு பெருமூச்சுவிட்டுத் தெளிந்து இக்கொடுமைக்கு நானென்ன செய்வேனென்று ஏங்கித்தளர்ந்து செய்வதொன்றும் அறியாமல் சித்துபுருஷனை நோக்கி ஓ ஐயா மகானுபாவரே! எனது நாடுநகரம் யானைசேனைபரிவாரங்களுடன் என்னுயிரைக்கேட்கினும் தடையின்றித்தருகிறேன் பெற்றுக்கொள்ளும். கன்னிகைகளைமாத்திரங்கருதாமல் மன்னிக்கும்படி வேண்டுகிறேனென்று பணிந்து வெகுவாகப் பிரார்த்தித்தும் சித்துபுருஷன் ஒப்புக்கொள்ளாமல் கடுஞ்சினமடைந்து ஓஅரசனே நீசொல்லியசத்தியவசனத்தின்படிக்கொடாமல் மறுத்துப்பேசும் அசத்தியனாயினை. ஆகையால் உன்முகத்தைப் பார்த்தபோதிலும் மகத்தானபாதகம்வந்து சம்பவிக்கும் என்றுசொல்லிச் சினந்து பற்களை நெறநெறவென்றுகடித்து மீசைதுடிக்க அடாபாவி நீஎனக்குத்தருகிறேனென்று சொல்லியகன்னிகைகளைத்தவிர்த்து நாடும்யானைசேனை பரிவாரங்களும் கொடுக்கிறேனென்று சொற்சோர்வடைந்த உனது கன்னிகைகளும் வெந்துநீறாகும்படிச் செய்கிறேன் பாருமென்று சொல்லித் தனக்குச்சித்திபாகி அனுபவத்திருக்கும் அக்கினிமந்திரத்தை யுச்சரித்தான். அம்மந்திரபலத்தால் மாயையாய் அக்கினியானது அரசனது அரண்மனையைப்பற்றி யெரிக்கத் தலைப்பட்டது. அதைக்கண்ட அரசன்பயந்து கன்னிகாமடத்திலிருந்த தொண்ணூற்றொன்பதுபேரையும் அழைத்து சித்துபுருஷனுக்களித்து ஓசுவாமி! யான் தங்களுக்குச்செய்த அபசாரத்தைமன்னித்துத் தங்களிஷ்டப்படி இக்கன்னிகைகளை யழைத்துச்செல்லுமென்றுபணிய, சித்துபுருஷன் சந்தோஷித்து அரண்மனையில்பற்றிய அக்கினியைத்தணித்து அரண்மனை முன்போலிருக்கும்படி கிருபைசெய்து அரசனே நான்போய்வருகிறேனென்று சொல்லிவிடைபெற்றுத் தொண்ணூற்றொன்பது கன்னிகைகளையும் அழைத்துக்கொண்டுவந்து இந்த ஆலமரத்தின்பொந்தில் வைத்துக்காப்பாற்றுகி

ஞன். அன்றுமுதல் நாங்கள் தொண்ணூற்றொன்பதுபேரும் மனித சஞ்சாரமில்லாத இந்தக்காட்டில் இந்தசித்துபுருஷனால் வெகுபிடுக் கண்களை அனுபவித்துக்கொண்டிருக்கின்றோம். இன்றும்மைக்க ண்டமாத்திரத்தில் பிரிந்துபோன உயிர் மீண்டும் வந்ததைப்போல வும் ஆபத்காலத்தில் அமிர்தத்தைக்கண்டதுபோலவும் மிகவும் மகி ழ்ச்சியடைந்தோம். இதுவே எங்கள்வரலாறு. இனிஎங்களை இச்சிறை யினின்றுமீட்டு ரக்ஷிக்கும் மணவாளர் உம்மையன்றி வேறில்லை என்பதற்கு எள்ளளவும் சந்தேகமில்லை. ஓ கோதிலாதகுணத்தினையு டைய அரசர்கோமானே! இக்காரியத்தில் முயன்று அந்தச்சித்து புருஷனைவென்று வெளிப்படுத்திஎங்களைத் தங்களுக்குநாயகிகளாகச் செய்துகொள்ளும். கீர்த்திப்பிரதாபத்தினையுடையமன்னர்மன்னனே என்றுசொல்லி அழுதுபுலம்புங் கன்னிகையைப்பார்த்து பரிதாபம டைந்து ஓ கன்னிகையே! நீ பயப்படவேண்டாம். உன்மனதின்ப டியே கொடியதுஷ்டனாகிய சித்துபுருஷனைக்கொன்று சகோதரிகளு டன் உன்னையும் மணம்புரிகிறேன். இதுசத்தியமென்று நம்பக்கட வாய். இந்தவாக்குத் தப்பமாட்டேனென்ற இராஜகுமாரனைநோக்கிக் கன்னிகையானவள் பின்னுஞ்சொல்லத் தொடங்கினாள்.

கேளும் எங்களுயிருக் குயிராய்த்தோன்றிய அரசனே! அந்த சித்துபுருஷன் அஷ்டமாசித்திகளிலுந்தேர்ந்தவன். மிகவும்மாயவாதி. அவனைத்தந்திரத்தினால் வென்றால் வெல்லலாமேயன்றி எதிர்நின்று யுத்தஞ்செய்துஜயிப்பது அரிதாகும். ஆகையால் நாளைபகல் அவன் நித்திரைசெய்யுஞ் சமயம்பார்த்துநான்வருகிறேன். அப்போதுஎன்பி ன்னாகத் தாங்கள்வந்து வாளினால் அவனைவெட்டியெறிவதே மிகவும் சுலபமான தந்திரம். இப்படிச் செய்யாமல் வேறு விதத்தில் அவன் மடியமாட்டான் என்பது திண்ணம். என்றுசொல்லிய கன் னிகையை நோக்கி இராஜகுமாரன் ஓ பெண்ணே! நீ சொல்லியதந் திரப்படி அவனைக்கொல்வது எம்போலொத்த அரசருக்குத் தரும மன்று. சுத்தவீரனாகியும் க்ஷத்திரியகுலத்திற் பிறந்தவனாகியும் இரு க்கும் பராக்கிரமதீரபுருஷன் எதிரியின் நேரில்நின்றே யுத்தஞ்செ ய்துவெல்லுவான். அப்படிவெல்ல சக்தியற்றவனாகவிருந்தால் எதி ரியின்கையால் மாண்டுபோவதே உத்தமபுருஷலக்ஷணம். இதுமனு தருமசாஸ்திரவிதி. இப்படிப்பட்ட தருமசாஸ்திரவிதியைக்கடந்து நீசொல்லியபடி அதருமத்துக்குட்பட்டு அவனைக்கொல்லுவதால்வீர த்தன்மை எனக்குண்டாமோ? வீரலக்ஷ்மியின் கிருபையும் பெரி

யோர்களது அருளும் பெற்றபோன் அப்படிச் செய்ய மனத்துணிவடையமாட்டேன். ஓ சிறந்த அழகினைவாய்ந்த வனிதையே ! மீண்டும் இப்படிப்பட்டவார்த்தையை என்செவியில்போடாதே. இப்படிச்செய்வது மகாபாதகமாம். அந்த சித்துப்புருஷன் மறுபடியுந்திரும்பி இந்தமார்க்கமாகத்தானே வரவேண்டும்? அப்போது எனது ஆற்றலை உன்கண்களால் பார்க்கப்போகிறாய் என்றுசொல்லி அக்கன்னிகையைச் சகோதரிகளிடம் சேரும்படி அனுப்பிவிட்டு இராஜகுமாரன் சித்துபுருஷன்வரவை எதிர்பார்த்துக்கொண்டிருந்தான்.

இங்கே இராஜகுமாரன் இப்படியிருக்க, அங்கேசென்ற கன்னிகைதன்சகோதரிகளைக்கண்டு தான்ராஜகுமாரனிடஞ்சென்றதுமுதல் வந்துசேர்ந்தவரையில் நடந்தவற்றை யோதக்கேட்டுக் கன்னிகைகள்யாவரும் கனவிற்கண்டபொருள் நனவில் கிடைத்ததைப்போலாம் இராஜகுமாரன் சித்துபுருஷனைவென்று ஜெயமடைவதென்றெண்ணி யிருந்தார்கள்; அதில் சில கன்னிகைகள் நாம் முன் ஜென்மத்தில் நல்லபுண்ணியஞ் செய்திருப்போமேயாகில் பகவான் கிருபையால் இராஜகுமாரன் இந்த சித்துபுருஷனை வெல்லுவது அருமையோ ஆனல் இப்போது சிலநன்னிமித்தங்கள் காணப்படுகிறபடியால் சித்துபுருஷனை இராஜகுமாரன்வென்று நம்மை இச்சிறையில் னின்று விடுவித்து மணம்புரிந்து கொள்வாரென்று நம்பத்தக்கதாகவிருக்கிறதென்றும் பேசிக் கொண்டிருந்தார்கள். இதற்குள் சித்துபுருஷன் பூசைமுடித்துக்கொண்டு எழுந்திருந்துஓடையிலிறங்கி வஸ்திரங்களைத் தோய்த்தெடுத்துக்கொண்டு ஆலமரத்தை நோக்கி வழக்கப்படி கன்னிகைகள் தன்பின்றொடர்ந்து வரத்தான் முன்னதாக நடந்துவந்தான். இப்படிவருகிற சித்துபுருஷனை இராஜகுமாரன்கண்டு வெகுண்டுசினமிகுந்து ஆரடா நீ இந்த அவாந்திரமானகாட்டில் ஒருவனே தொண்ணூற்றென்பது ராஜகன்னிகைகளுடன் சஞ்சரித்துக்கொண்டு திரிகிறவன்? உன்னையும் இக்கன்னிகைகளையுஞ் சீர் தூக்கிப்பார்க்கையில் நீ கிழக்குரங்குக்கு நிகராயும் கன்னிகைகள் ரதிதேவிக்குநிகரான அழகுவாய்ந்தவர்களாயும் பிரகாசிக்கிறார்கள். இப்படிப்பட்ட வடிவம்பொருந்திய கன்னிகைகள்உனக்கெப்படியகப்பட்டார்கள்? இதையோசிக்கையில் இவர்களை நீ மோசஞ்செய்து வஞ்சகமாய்க்கொண்டு வந்ததாகக் காணப்படுகின்றது. மனச்சம்மதியாய் இத்தனைபேர்களும் ஒரேமனதாய்க்கேவலமாகியஉன்பின் வருவார்களோ? வரமாட்டார்கள். ஆகையால், நீ இவர்களை வஞ்சித்துக்

கொண்டுவந்தாயென்பதற்குச்சந்தேகமேயில்லை. உனக்கும்இவர்களுக்குமுள்ள தாரதம்மியத்தை யோசித்துப்பார்க்கில் இவர்களுக்கு நீ தந்தையைப் போல மூப்புத்தசையையடைந்திருக்கின்றாய். அன்னிய மாதர்களைக்கண்டால் மதாவைப்போலவும் அல்லது தமக்கைதங்கைகளைப்போலவும் எண்ணிநடப்பது உத்தமபுருஷலக்ஷணமென்று பலநூல்களுங் கூறுகின்றதால் நரைத்துவயதுசென்ற கிழவனாகிய நீ இதைச்சற்றேனுங்கவனியாமல் அதமனிலும்அதமனாகி இப்பருவகன்னிகைகளை மனைவிகளாக்கிக்கொள்ளஎண்ணிய அடா பஞ்சமாபாதகா! இக்கொடியகுற்றத்திற்காளாகிய உன்னைத்தண்டிப்பதவசியமாயிருந்தும் எனக்கு ஏதோஉன்விஷயத்தில் பரிதாபமுண்டாகிறபடியால் நீ செய்த குற்றத்தை மன்னித்தேன். இனியாகிலும் மரியாதையாய் இக்கன்னிகைகளை அழைத்துக்கொண்டுபோய் தாய்தந்தையர்களிடத்தில்விட்டு உன்னிச்சையின்படி செல்லுவாயென்று மொழிந்தான்.

இந்தப்படியாக இராஜகுமாரன் சொல்லியமொழிகளானது சித்துபுருஷனது செவியில் நாராசத்தைக் காய்ச்சிவிட்டதைப்போலாகி சித்துபுருஷன் பதபதைத்து விநிர்விநிர்த்து மீசைகள்துடிக்க பற்களை நெறநெறவென்றுகடித்து இராஜகுமாரனைநோக்கி அடாபயலே! கத்தரிக்காய்க்குக் கால்கைகள் முளைத்ததைப்போல ஒட்டைஜாணுமில்லாத சிறுவனாகிய நீயா என்னை தண்டிக்கிறவனும் மன்னிக்கிறவனுமாவாய்? பனங்காட்டுநரி சலசலப்புக்கஞ்சாதுபோல, நினது உருட்டு மிரட்டுக்கு யான் பயப்படுவேனென்றெண்ணாதே. வயதிலும் புத்தியிலும் ஞானத்திலும் எனக்காகிலும் நீ மேற்பட்டவனாகவிருந்தாலல்லவோ யானுனது சொல்லைக்கேட்டு அவ்வண்ணம்நடப்பதற்கு? "சிறுபிள்ளை பயமறியா"தென்னும் பழமொழிப்படி நீயறியாத்தனத்தினால் ஏதேதோ வாயில்வந்தபடி பிதற்றிவிட்டாய். யானையாகிய யெனக்கு நீ கொசுவுக்குச் சமானமாயிருப்பதால் உன்னோடுயெதிர்த்துப் போர்புரிவது தருமமல்லவென்றெண்ணி நின்மீதுவெனக்குண்டாகியகோபத்தையடக்கி உன்னைமன்னித்துவிட்டேன். இனியாகிலும் மறுவார்த்தை பேசாமல் இவ்விடத்தைவிட்டுத் தப்பிப்பிழைத்தோடிப்போ. இல்லாவிடில் அற்பமாகப் பேசிய நினது நாவையறுத்து பருந்துக்கிரையாகச்செய்வேன் நிமிஷநேரமேனும் இங்குநிற்காதே. ஓடிப்போடாவென்று சொல்லிய சித்துபுருஷனுடைய கொடியமொழியானதுகூடிசரத்தைப்போல இராஜகுமாரன்செவியிற்

பட்டமாத்திரத்தில் கோபமேலிட்டுக் கண்களிரண்டுஞ்சிவந்து அடா சித்தா! நீ வயதில்மூத்தனாகி நரைத்தகிழவனாகியும் இருப்பதே யன்றி புத்தியிலும் விவேகத்திலும் வித்தையிலும் மேம்பாடு டையவனாவாயோ? வெங்கலம் ஓசையிடுவதைப்போலக் கனகம் ஓசைசெய்வதுண்டோ? அதுபோல நீ அற்பனாகையால் தொண்டையைக்கிழித்துக் கொள்ளுகிறாய். உனக்கு அந்தியத்தில் நற்கதிகிடைக்கும்படியான நீதிகளையோதினேன். இதையோசித்து நல்வழியிற் செல்லும்படியானதைவிட்டுப் புத்திகெட்டு என்னை இராஜகுமாரனென்றுமதியாமல் அற்பமாகப்பேசியநின்னுவையறுக்கிறேன் என்திராணியைப்பாரடா இன்னுஞ் சற்றுநேரத்தில்காட்டுகிறேன் ஓடிப்போகாமல் நில்லடாவென்றுசொல்லி யிடையில்தரித்திருந்த வாளாயுதத்தையுருவிக் கையில்பிடித்து ஓங்கிவெட்டப் போகையில் சித்துபுருஷன் தன்னுருவமாறிச் சிங்கரூபம்பெற்று ராஜகுமாரனைக்கொல்லத் துணிந்தபோது இராஜகுமாரன் முன்னம் சுபுத்திமாமுனிவர் அருளினாற்பெற்ற மந்திரபலத்தினால் கண்டபேரண்டபக்ஷி யுருவம்பெற்று சிங்கத்தின்முதுகின்மேற்பாய்ந்து நகத்தினால் மஸ்தகத்தைப்பிளக்கும்போது சிங்கவுருவங்கொண்ட சித்துபுருஷன் பிராண பயங்கொண்டு ஓலமிட்டு கர்ஜிக்கிறபோது இராஜகுமாரனாகிய கண்டபேரண்ட பக்ஷி சித்தனாகிய சிங்கத்தைநோக்கித் தானென்னுங்கெர்வங் கொண்டதரமறியாமூடா! அரசகுலத்தைக்கெடுக்கவெண்ணின குடிகேடா இதோ ஒருநிமிஷத்திலுன் பிராணனைப்போக்கி நாய்நரிகழுகு முதலானவைகளுக்கு விருந்தாகச்செய்கிறேன். நீ உன்னுயிரைக் காப்பாற்றிக்கொள்ளும் வகையைத் தேடிக்கொள்ளடா! அஷ்டமாசித்திகளிற்றேர்ந்த உனதுவஞ்சகமும் மாயையும் என்னிடம் செல்லாதடாவென்று சொல்லிக் கொல்ல முயன்றபோது சித்துபுருஷன் பதறிக்கதறியழுது புலம்பி இராஜகுமாரனுக்குத் தயாள முண்டாகும்படியாக சில அபிநயங்களைக்காட்டி மாலை நைகாட்டி அதைரியத்தையோட்டி பிரமிக்கும்படிக்காட்டிச் சுயரூபமெடுத்து மேகமண்டலத்திற்சென்று மறைந்துகொண்டு இராஜகுமாரனை நோக்கி அடா ஞானமில்லாத பேதைக்கொப்பான மென்புத்திக்காரனே! மன்மதனுக் கொப்பான நினதுதேககாந்தியையும் இளமைதங்கிய வயதையும் தைரிய வீரியபராக்கிரமத்தையும் நேரில்கண்ட யெனதுமனம் உன்னைக்கொல்லச் சம்மதிக்கவில்லை; கண்டபேரண்டபக்ஷி யுருவங்கொண்டு நீ யென்னை மாய்க்கவெண்ணின நின்னைக்கொல்ல எனக்குரோ

ஷம் பிறக்கவேண்டும். யென்றுதனை கோபமேனும் உதிக்கவில்லை; இதையோசிக்கையில் நினதுற்காலமென்றே தோன்றுகிறது. எனக்குக்கோபம் ஜனிக்குமாகில் இன்னும் நீ பிராணனுடனிருப்பையோ? என்னுடையகடுமைக்குட்பொறுப்பையோ? மாயையைத்தடுப்பையா வேதனையைப்பொறுப்பையா இது என்னகாரணமோ தெரியவில்லை. இம்மட்டிலாகிலும் இவ்விடத்தைவிட்டு ஓடிப்போகிறாயா அல்லதின்னும் என்னுடன் போர்புரிந்து மடியப்போகிறாயா உன்கருத்தென்ன சொல்லு மென்று சித்தபுருஷனைநோக்கி இராஜகுமாரன் சொல்லத்தொடங்கினன்.

அடா பெரியோரைப்போல ஞானமார்க்கங்களை வாசா கைங்கரியமாகப்பேசும் பேயனே! என்னைவெல்லசக்தியற்று பயந்துஓடிமேகமண்டலத்தி லொளித்துக் கொண்டதல்லாமல் என்னைக்கொல்ல ரோஷமுங்கோபமும் பிறக்கவில்லையென்றும் இம்மட்டில் ஓடிப்பிழைத்துப்போவென்றும் வாயில்வந்தபடி ஏதேதோ பிதற்றிச் ஞானைப்போலப்பினற்றுகிறாய்! நாம்மேகமண்டலத்தில்ஒளித்திருக்கிறோம் நம்மையிவன் என்னசெய்ய வல்லனாகுமென்று கர்வியாதே! இம்மேகமண்டலத்திற்கு வருவது எனக்கோர் அருமையல்ல. அதற்குமேல் இன்னமிருக்கப்பட்ட அண்டகடிக்குகளுக்குச் சென்று நீ ஒளித்துக்கொண்டபோதிலும் உன்னை உயிருடன் விடுவேனென்றுகனவிலும் எண்ணாதே. இதோ யின்றையொரு நொடிக்குள்ளாக நின்னை எமபுரத்தை யடையச் செய்கிறேன். முன்னம் யேதேதோ சிலமாய்கைகளைக்காட்டி யென்னைமயக்கி வஞ்சித்துஓடியொளித்துக் கொண்டாய். யானும் நீயறுதுபுலம்பியதற்குச் சகிக்கக்கூடாததயானமடைந்தவனாகி உன்னை விட்டுவிட்டேன். அதைநீயோசிக்காமல்நீத்தனைப்போல ஏதேதோவாயில்வந்தபடி உளறுகிறாய்; இந்தக்கண்டகத்தில் நினதுபிராணவாயுவைப் பிரிக்காமல் விடுகிறதில்லை யென்று சொல்லி இராஜகுமாரன் கன்னிகைகளெல்லாம் அம்மரத்தடியிலிருக்கச்செய்து சற்குருநாதனைப்போற்றி வாழ்த்தி ஆகாயத்திலினம்பிமேகமண்டலத்திற்குச்சென்று அங்குஒளித்திருக்கும் சித்தபுருஷன் கையைப்பிடித் திழுத்து பூமியிற்கொண்டுவந்து நிறுத்தி மல்லுத்தஞ்செய்துவென்று முடிவில் வாளையுருவிக்கொண்டு வெட்டப்போகையில்சித்தபுருஷன்நடுங்கிக்கோவென்றுகதறியபடிமுறையோ முறையோவென்றோலமிட்டழுது இராஜகுமாரனை நோக்கி ஐயா ராஜகுமாரனே! அறிவீனத்தினால் யான் செய்தகுற்றத்தையும்

பிதற்றிய அற்பமொழிகளையும் எண்ணமல் மன்னித்துப் பிராண பிச்சை கொடுத்து என்னை ரக்ஷிக்கவேண்டுமையாவென்று சரண டைந்தான். இப்படிக் கண்ணீருங்கம்பலையுமாகச் சரணம்புகுந்த சித்துபுருஷனுக்கு இராஜகுமாரன் அபயஸ்தம்தந்து ஐயாசித்துபு ருஷனே! இக்கன்னிகைகளன்றி வேறுயாதேனும் உனக்கு வேண் டியவைகளைக்கேள் தருகிறேனென்ற இராஜகுமாரனைநோக்கிச் சித்து புருஷன் சொல்லுகின்றான்.

கேளுமையா இராஜகுமாரனே! இக்கன்னிகைகள் யாதொரு பற்று மறியாதவர்கள். இவர்களையான் மணஞ்செய்து கொள்ளத்த குந்தநாளும் லக்கினமும் பொருந்தாமையால் இதுபரியந்தம் யான் இவர்களைவெகுபத்திரமாயும் அன்னியர் கண்களுக்குப் படாமலும் பாதுகாத்துவந்தேன். இவர்கள் விஷயத்தில் நீசற்றுகிலும் அவநம்பி க்கையில்லாமல் இவர்களை நீ விவாகஞ்செய்து கொண்டு சுகித்திரும்; யானே யாருமற்ற பரதேசியாகையால் எனக்கு வேண்டியதொன்று மில்லை. பிராணனுடன் என்னைக்காப்பாற்றி விட்டதே மேலாகியபத வியை யீந்ததற்கொப்பாகியது என்றுசொல்லி அந்தவாலமரத்தின் பொந்தில் வைத்துக்கொண்டிருந்த அனேகமாயிரம் நவரத்தினங் களை யெடுத்து இராஜகுமாரன் முன்வைத்து இந்த ரத்தினங்களை வைத்துக்கொண்டு அனுபவிக்கத்தக்க திவ்வியபுருஷர் நீரேயன்றிக் காடுகளிலும் மலைகளிலும் சஞ்சரிக்கத்தக்க சித்தனுகிய யெனக்கு ஈதென்னத்திற்கு? வேண்டியதில்லை சுகமாயெடுத்துக்கொண்டு போ மையாவென்று பலவித உபசாரவார்தைகளைச்சொல்லி இராஜகுமார னுக்குச் சந்தோஷமுண்டாகும்படிச்செய்து இராஜகுமாரனிடத்தில் விடைபெற்றுக்கொண்டு மனதுக்கிசைந்தபடி போயினன்.

பின்னர் இராஜகுமாரன் அந்த ரத்தினங்களையெடுத்துப் பகுந் து கன்னிகைகளுக்கீந்து அவர்களையழைத்துக்கொண்டு தன் நகரத் தைநோக்கி நடந்தான். இங்கிப்படியிருக்க, நகரத்தின் பள்ளியறை யில் படுத்திருந்த இராஜகுமாரத்தி நித்திரை நீங்கி யெழுந்து பா ர்த்துத் தன்கணவனைக்காணமல் எங்குபோனரோ தெரியவில்லை யே, போகிறவிடத்தை நமக்குத்தெரிவிக்காமல் போகமாட்டாரே இதென்னமோ ஆச்சரியமாகவிருக்கிறதேயென்று ஆலோசித்துத்தா திகளைக்கொண்டு தன்கணவன் சொல்லாமல் நடுராத்திரியில் எழுந்து எங்கேயோபோனர் இப்போது மத்தியானமாகியும் வரக்காணமே

யென்று அறிக்கைசெய்தாள். நடுராத்திரியில் நித்திரைவிட்டெழுந்து சொல்லாமற்போன தன்புதல்வன் மத்தியானமாகியும் வாரானுமேயென்று தாதிகள் சொல்லக்கேட்ட அரசன்திடுக்கிட்டு அருகிலிருக்கும் மந்திரிகளைநோக்கி ஓ மதியிற்சிறந்த அமைச்சர்களே! தாதிகள் சொல்லியதைக்கேட்டீர்களோ! மிகவும் புத்திசாதுர்யத்தில் தெளிவடைந்தவனாகிய எனதுகுமாரன் என்னிடஞ் சொல்லாமல் எங்கும்போகமாட்டானே. பெரியோர்கள் விஷயத்தில் ஊழியனைப்போலவும் ஆசானிடத்தில் சிஷனைப்போலவும் புருஷனிடத்தில்மனையாளைப்போலவும் அரசனிடத்தில்சேவகனைப்போலவும்கீழ்ப்படிந்து தானென்ற அகங்காரமற்றுப்பாதந்திரமாகநடக்கும்நற்குணங்களெல்லாந் திரண்டோர் குருவாயமைந்த உத்தமனாகிய எனது புதல்வனைத் தேடி யழைத்துவாருங்களென்று ஆக்கியாபித்தான். அந்தப்படியே மந்திரிகள் நான்குதிக்குகளாகிய கிழக்கு மேற்கு தெற்கு வடக்கு என்னுந்திசைகளைநோக்கிச் சிலபரிவாரங்களுடன் இராஜகுமாரனைத் தேடிக்கொண்டு சென்றார்கள். இதில் மேற்றிசையைநோக்கிச்சென்ற இரண்டாவது மந்திரியானவன் நகரத்தைக்கடந்து நெடுந்தூரஞ்சென்று மத்தியான மானவுடன் அங்கோர்சோலையில் பரிவாரங்களுடன் தங்கி அன்னபானாதிகளைப் புசித்துச் சற்றுநேரம் இளைப்பாறி பிரயாணப்படுகிறசமயத்தில் இராஜகுமாரனும் கன்னிகைகளுடன் அங்கு வந்து சேரக்கண்டமந்திரி இராஜகுமாரனை வணங்கி அரசன் தன்னையனுப்பிய காரணத்தையறிவித்தான். இதைக்கேட்டு இராஜகுமாரன் தான்போனதுமுதல் கன்னிகைகளுடன்வந்து அங்குசேர்ந்த வரையில் நடந்த விருத்தாந்தம் யாவையும்தெரிவித்து அதைவிட்டுப்பிரயாணப்பட்டு கன்னிகைகளை யானைகளின்மீதும் சிவிகைகளின்மீதும் டோல்களின்மீதும் ஏற்றி அவர்களுக்குக் காவலாகக் காற்படைகளைநேமித்து வெகுஜாக்கிரதையாக நகரத்தைநோக்கி நடந்து நகரத்துக்கருகிலிருக்கும் சோலையில்தங்கினார்கள். அப்போது மந்திரி சேவகனொருவனையழைத்து இராஜகுமாரனைஅழைத்துக்கொண்டுமந்திரி நமதுபட்டணத்துக்கிடையிலிருக்கும் சோலையில்தங்கியிருக்கிறார்களென்று மன்னனுக்குத் தெரிவித்துவாவென்றுஏவினான். அந்தப்படியே சேவகனுஞ்சென்று ராஜசபைமுன்னின்று வேந்தனுக்கு அறிவித்தான். இதைக்கேட்ட அரசன் பரமாநந்தமடைந்து அந்தப்புரத்திலிருக்கும் மனைவியுடன் மருமகளையும் அழைத்துக்கொண்டு சகலபரிவாரங்களும் தன்னைச்சூழ்ந்துவர மங்களவாத்தியங்கள் முழங்க

பேரி பூரி தாரை முதலானதோற்கருவி துளைக்கருவிகளுங் கோஷிக்கக், கட்டியங்கூற, பெண்கள்பாட, மாதராட, பூசுரர்கள்ஆசீர்வதிக்க, குடிகள் கப்பணம்வைத்துவணங்கவந்து சோலையைக்கிட்டி மகனையும் கன்னிகைகளையுங்கண்டு பூரித்து வணங்கின குமாரனை வாரித்தழுவி, தெண்டனிட்ட கன்னிகைகளைவாழ்த்தி மந்திரியினால் தன் குமாரன்போய்வந்த காரணத்தையறிந்து சந்தோஷித்தனாகிக்கன்னிகைகளைச் சிவிகையிலேற்றித் தான் ரதாருடனாகிநிற்க மந்திரியும் இராஜகுமாரனும் யானையின்மீதேறிச் சகல மேளவாத்தியங்களுங்கடலொலிபோலமுழங்க நகரத்தைவலமாக வருகிறபோது இராஜவீதிகளிலுள்ள வீடுகளின் உப்பரிகைகளின் மீதிலிருந்தும் மேடைகளிலிருந்தும் சாளரங்களிலிருந்தும் ஸ்திரீகள் இராஜகுமாரனைப்பார்த்து மையலாகிச் சிலர் சாமுத்திரிகாலக்ஷண சாஸ்திரத்திற்சொல்லியவடிவழகும் இந்த ராஜகுமாரனுக்கு நிகராகுமோ என்பார் சிலர்; திரண்டுருண்ட முழங்காலுக்கு நிகர் இந்த ராஜகுமாரன்முதுகில் தாங்கிக்கொண்டிருக்கும் அக்ஷய தூணியையொக்குமென்பார் சிலர்; திரண்ட பெருந்துடைகளிரண்டுக்கும் திசையானைதுதிக்கையும் இணையாகமாட்டாதுஎன்பார் சிலர்; இடையோ கண்டவர்கள் மனதை உருக்கிவார்க்குமென்பார் சிலர்; மார்புக்கிணையாகும் பூமியென்பார்சிலர்; கழுத்துக்கு சமம்கமுகாகுமென்பார் சிலர்; பாந்த புஜங்களுக்கோ மேருமலையும் நாணுமென்பார் சிலர்; இந்த கோலத்தைப் பார்க்கவேணுமென்றால் நம்மிரண்டுகண்கள் போதுமோ பதினாயிரங்கண்களல்லவோ வேண்டுமென்பார் சிலர்; இரண்டுகபாலமும் பளபளென்று மின்னும் கண்ணாடியையொத்திருக்கிறதென்பார் சிலர்; சதகோடி சந்திரர்களுக்கு நிகராகமுகாரவிந்தம்விளங்குகிறதென்பார் சிலர்; தன்னைச்சரணமடைந்து அடுத்தவர்களுக்கு அளவிறந்தபதியும் நிதியுந்தருகின்ற கருணைநயனவிலாசமென்பார் சிலர்; பவளவாயும் புன்னகையுடைய மந்தகாசமும் விளங்குஞ் சுந்தரமே சுந்தரமென்பார் சிலர்; நவமாகிய மலையின்மீதுவிழும் பொன்னருவியையொத்தபூணூல்மார்பினிற் புரளுகின்றதென்பார் சிலர்; நிகரற்றவில்லையும் இந்த உருவத்தையும் யெழுத மன்மதனாலும் ஆகுமோ என்பார் சிலர்; தாமரையிலையையொத்த திருமேனியின் அழகென்பார் சிலர்; நெற்றியில்விளங்கும் சிந்துரரேகையும் வளர்ந்த நெற்றியின் விஸ்தாரமும் நவரத்தினங்களிழைத்த திருமுடியின் சுகமேசுகமென்பார் சிலர்; ஆரகேயூரகடககங்கணமுதலிய ஆபரணங்களின் ஒளி மின்னலைப்பழிக்கின்ற

தென்பார் சிலர்; அந்தியைப்போலொத்தநிறத்தினையுடைய ஆடையின்பிரகாசமே பிரகாசமென்பார் சிலர்; இடையிலிருந்த ஆடைநழுவித் தங்களைமறந்து சித்திரப்பதுமைபோல நிற்பார் சிலர்; மேடையைவிட்டு இராஜகுமாரனைத்தழுவ ஓடிவந்து பெருத்த ஜனக்கூட்டத்தைக்கண்டு அருகிற்போவதற்குக் கூடாமல் நின்றார்கள் சிலர்; கன்னிகைகளைக்கண்டு மயல்கொண்டு கட்டித்தழுவ ஆவல்கொள்ளுவார் சிலர் இராஜகுமாரன்தொண்ணூற்றொன்பதுகன்னிகைகளையும் ஒரேகாலத்தில் கொண்டுவந்த திறமேதிறமென்பார் சிலர்; இக்கன்னிகளைமீட்டுக்கொண்டுவந்த இவனதுஉறமே உறமென்பார்சிலர்; இக்கன்னிகைகளை ஒருத்தியைப்பார்த்தால் மற்றொருத்தியைப்பார்க்கவேண்டுவதே யில்லையென்பார் சிலர்; இந்தக்கன்னிகைகள் தொண்ணூற்றொன்பதுபேரும் இராஜகுமாரனுக்கு மனைவிகளாகப் பூர்வம் என்னநோன்புநோற்றார்களோ வென்பார் சிலர்; இவர்கள் பண்ணின பாக்கியமே பாக்கியமென்பார் சிலர்; இந்தப்படி அந்நகர வாசிகளெல்லாம் பலவாறுபேசிக்கொண்டாட அரண்மனையந்தப்புரத்தின்வாசல் முகப்பில் சுமங்கலியப்பெண்கள் மங்கல ஆலத்திகளெடுக்கத் தொண்ணூற்றொன்பது கன்னிகைகளுஞ் சிவிகையைவிட்டிறங்கி அந்தப்புரஞ் சேர்ந்திருந்தார்கள்; மன்னனும் மகனும் அந்தப்புரஞ்சேர்ந்து போஜனமுதலாகியதும் அருந்தி இளைப்பாறி அரசனும் இளவரசனும் சபைக்குவந்து சிங்காதனத்தின்மீதுவீற்றிருந்தார்கள். அப்போது மந்திரியானவன் அரசனைவணங்கி எமதிறைவனே! அந்தப்புரத்திலிருக்கும் ராஜகன்னிகைகளின் வரலாற்றை அவர்கள் தந்தையாகிய அரசனுக்குத்தெரிவித்து அவனபிப்பிராயத்தையறிந்து அவர்களைத் தங்கள் குமாரருக்கு மணம்புரிவிக்கவேண்டிய தவசியமாயிருப்பதால் தேவரீர் சித்தத்துக்குத் தெரியப்படுத்தினேன். இதற்குத்தங்கள் சித்தமெப்படியோ அப்படிநடக்கச்சித்தமாகவிருக்கிறேனென்று கூறிய மந்திரியின் சாதுரியமொழிகளுக்கு அரசன் சந்தோஷித்து மந்திரியைநோக்கி அரசன் சொல்லுகிறான். காரியாகாரியங்களை ஆராய்ந்து சமயோசிதமறிந்து தெளிவாக உரைக்கும் ஆழ்ந்தமனதினையுடைய மந்திரியேகேளும் இக்கன்னிகைகளை நமதுகுமாரன்கொண்டுவந்த விவரத்தை ஓலையில் தெளிவாகவெழுதி தூதுவனிடமனுப்பி அரசனை இங்கு வரும்படியாக முயற்சிசெய்யுமென்று ஆக்கியாபித்தான். அந்தப்படியே மந்திரியும் தெளிவாக ஓலையையெழுதி யோர் தூதனிடத்தில் தந்து அதன் விவரத்தைச்

சொல்லி யனுப்பினான். அவ்வண்ணமே தூதனுஞ்சென்று கொலுக்கூடத்தையடைந்து ஓலையைஅரசனிடத்தளித்தான். அரசனும் அவ்வோலைச்சுருளை வாங்கிப்பிரித்து அதில் வரைந்திருப்பதை வாசித்துணர்ந்தமாத்திரத்தில் வெகுநாளாய்க் காணாததைக் கண்டதைப் போலவும் பிராணவாயுவுநீங்கிய பிரேதத்துக்கு ஔஷதசேவை செய்தமாத்திரத்தில் உயிருண்டாகியதைப் போலவும் புத்திரிகள்மீதுண்டாகிய அன்பினால் சோகமடைந்திருந்த அரசன் இனியில்லாத சந்தோஷமடைந்து மந்திரிகளை நோக்கி யான் கௌடபங்காளதேசத்திற்குச்சென்று புதல்விகளைப்பார்க்கவேண்டு மாதலால் சீக்கிரம் பரிவாரங்களைச் சித்தப்படுத்து மென்று ஆக்கியாபித்து விட்டு அந்தப்புரத்திற்குச் சென்று மனைவியைநோக்கி நமது குமாரத்திகளை கௌடபங்காளதேசத்தரசன்புதல்வனாகிய கோபீசந்தனமகாராஜன் சித்து புருஷனிடத்திலிருந்து மீட்டுக்கொண்டுவந்து தன்னந்தப்புரத்தில் வைத்திருப்பதாகப்பெரியஅரசன் ஓலையெழுதித் தூதன்வசம் அனுப்பியிருக்கிறான்; ஆகையால் அவர்களைப் பார்க்கவேண்டுமென்ற அபேக்ஷை எனக்கு மிகவும் உண்டாயிருப்பதால் யான்போய் பார்த்து வருகிறேன் உன்கருத்தென்னவென்றுவினவிய அரசனைநோக்கி அரசிசொல்லுகிறாள்.

கேளும் எனது பிராணநாயகரே! அன்று சித்துபுருஷனுடன் புத்திரிகளை மனமாரக்கூட்டி அனுப்பிய உமக்கே அவர்களைப்பார்க்கவேணுமென்ற ஆவல் மெத்தவும் உண்டாகியிருக்கிறபோது பத்து மாதஞ்சுமந்து பெற்றுவளர்த்த அடியாளுக்கு எவ்வளவுபிரியம் இருக்கும் இதையோசித்துப்பாராமல் தாங்கள்மட்டிலும்போய்ப்பார்த்து வருவதுதருமமோ? தருமமல்லவே. அடியாளையும் அழைத்துக்கொண்டுபோய் அவர்களை எனக்குக்காட்டியழைத்துவந்தால் மெத்தவும் தங்களுக்குப் புண்ணியமுண்டாகும் என்று சொல்லிவணங்கிய மனைவியையும் அழைத்துக்கொண்டு அந்தப்புரத்தைவிட்டு வெளிப்பட்டு அரண்மனை கோட்டைகளைத்தாண்டி அரசியை சிவிகையின்மீதேற்றித் தான் ரதாரூடனாகி சகலமங்கலவாத்தியங்களும் முழங்க யானைசேனை பரிவாரங்கள் சூழ்ந்து நடக்கச்சென்றுமார்க்கத்தில் தங்கவேண்டிய இடங்களில்தங்கி கௌடபங்காளதேசத்தை யடைந்து அங்கோர் சோலையில்தங்கித் தன்வரவை அரசனுக்குத் தெரிவித்தான். அரசனறிந்து மந்திரியையனுப்பி அழைத்துவரும்படி உத்திரவுசெய்ய அந்தப்படியே மந்திரியெதிர்கொண்டுசென்று அழைத்

துவந்து சபாமண்டபத்தில் சேர்த்துத் தக்க ஆசனத்திலிருக்கச்செய்தான்; வழக்கப்படி அரசன் கொலுக்கூடத்திற்குவந்து சிங்காதனத்தில் வீற்றிருந்தான். அப்போது இவ்வரசனெழுந்து அவ்வரசனை வணங்க மன்னவன் இவனைத்தழுவி க்ஷேமங்களை விசாரித்துப் பின்னர் அந்தப்புரத்திற் கிவனையழைத்துப்போய்கன்னிகைகளிருப்பிடத்தைக்காட்டினன். இவனங்குசென்று கன்னிகைகளைக்கண்டழ கன்னிகைகள் இவனைக்கண்டழ இவ்வண்ணம் ஒருவரொருவராய்த் தந்தையைக்கண்டழுது புலம்பி முடிவில் தந்தையினால் தேறினவர்களாயிருந்தார்கள். இதுபோலவே அரசியையும் கௌடபங்காளதேசத்தரசி அழைத்துப்போய் கன்னிகைகளைக் காட்டினள். அவளுங் கன்னிகளைக்கண்டு அடிமக்களேயென்றோலமிட்டழகன்னிகைகளும் அன்னையைக்கண்டழுது புலம்பி வாடினார்கள். அரசியும் அவர்களைத்தேற்றி சந்தோஷவார்த்தைகளைப்பேசி உற்சாகமுண்டாகும்படிச் செய்திருந்தாள். கேட்டீர்களோ சித்தர்களே! ஐயனடியை யென்றும் விடாது துதிக்கும் பத்தர்களே! சத்தியசீலபரித்தர்களே! என்மனதுக்கினிய நற்றவர்களே! இனி மேற்சொன்ன கன்னிகைகளுக்கும் கோபிசந்தனமகாராஜனுக்கும் திருக்கல்யாண வைபவத்தைச்சொல்லுகிறேன் கவனமாகக்கேளுங்களென்று நாடாஜிசித்தர் உத்தமசித்தர்முதலானோரைநோக்கிப் பின்னுஞ்சொல்லத்தொடங்கினர்.

அதன்பின்பு இராஜகுமாரன் தந்தையும், கன்னிகைகளின் தந்தையுந் திருமணத்துக்காக வேண்டிய நன்மொழிகளைப்பேசி முடிவு செய்துகொண்டு தேசதேசங்களுக்குந் திருமணவோலை யெழுதிவிடுத்து நகரத்தையலங்கரித்து வந்தராஜாக்களை நன்குமதித்துத் தோற்கருவி துளைக்கருவி முதலான மங்கலவாத்தியங்கள் முழங்கப் பூசுரர்கள் ஆசீர்வதிக்க சுமங்கலியஸ்திரீகள் மங்கலம்பாட இராஜகுமாரன் கன்னிகைகளின் கழுத்தில் மங்கலியஞ்சூட்ட புரோகிதர் ஓமச்சடங்குகளைத்தும் முடித்து அதிதி அப்பியாகதப்பிராமண புரோகித வஷ்டபாதேசிகள் முதலானோருக்கும் கோதான பூதான வஸ்திரதான கன்னிகாதான அன்னதான மென்றாஞ் சோடசதானங்களும் அபரிமிதமாகச்செய்து தம்பதிகளுக்கு அயினிகழித்து மணப்பந்தலைப்பிரதக்ஷிணஞ்செய்வித்து அறையிற் கொண்டுபோய்ச்சேர்த்துப் பெரியோர்கள் தம்பதிகளை சுகித்திருக்கும்படி வாழ்த்தினார்கள். இத்தப்படியாகத் தொண்ணூற்றொன்பது கன்னிகைகளுக்கும் தொண்ணூற்றொன்பது முகூர்த்தம் நடத்தி புதிதாக ஒன்றிபுரம்பத்தி அதற்ப

அதில் இவர்களைக் குடியேற்றி இனிது வாழ்ந்திருக்கக்கண்டு மகிழ்வடைந்திருந்தார்கள். இப்படியிருக்க திருமணத்திற்குவந்த மன்னர் மண்டலீகர்களனைவரும் அரசனிடம் விடைபெற்றுத் தங்கடங்கள் பதிசேர்ந்தார்கள். கன்னிகைகளின் தாய்தந்தையர்களும் விடைபெற்றுத் தங்கள் நாட்டையடைந்து சுகித்திருந்தார்கள். இராஜகுமாரனும் நூறுமனைவிகளையுங் கலவியிற்கூடி யாதொரு குறைவுமின்றி இகபோகங்களை யனுபவித்துக்கொண்டு மகிழ்வடைந்திருந்தான்.

இவ்வண்ணமாக இராஜகுமாரன் ஒவ்வொரு மனைவியுடன் ரதியும் மதனும்போலவும், மலரும்மணமும்போலவும், கரும்பும் உருசியும்போலவும், பாலும் சுவையும்போலவும், உயிருமுடலும் போலவும் பிரியாது நூறுமனைவிகளுடனும் முறைப்படி கூடிவாழ்ந்திருந்தான். இப்படிக்கிருக்கிறபோது மைனாவதிக்கு இரண்டாவதுபுத்திரி பிறந்து நாளுக்குநாள் செல்வமாக வளர்ந்து பத்துவயதாகியிருக்கக் குந்தலதேசத்தரசன் புதல்வனாகிய கேதுமாலன் என்கிற இராஜகுமாரனுக்குக் கொடுத்து மணமுடித்துச் சகலசீரும் நடத்தியனுப்பினான். இத்தம்பதிகளும் தங்களூரையடைந்து தேவேந்திரனும் இந்திராணியும் போல இனிது வாழ்ந்திருந்தார்கள்.

இங்கே கௌடபங்காள தேசத்தையாளும் திரிலோகசந்தன மகாராஜனுக்கு பாலியயௌவன கௌமாரமென்னும் மூன்றுதசையுங்கடந்து நான்காவதாகிய மூப்புத்தசையடைந்து தேகந்தளர்ந்து வலியற்றுநடக்கவும் உட்காரவும் கூடாமலிருக்கும் தன் தேகஸ்திதியையறிந்து மந்திரிகளை யழைப்பித்துத் தனக்குண்டாயிருக்கும்அசக்தியைத் தெரியப்படுத்தி என்னாலிந்த அரசாக்ஷியாகிய பாரத்தை இனிதாங்குவதற்கு முடியாது. அரசாக்ஷிசெய்யுந் திராணிஎன்குமாரனுக்கிருப்பதாலும் நல்லசுபமுகூர்த்தம் ஒன்றுபார்த்து அம்முகூர்த்தத்தில் என்குமாரனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்து என்கண்ணாற் பார்த்திறக்க வெண்ணமுடையவனாகவிருக்கிரேன்; மேலும்இந்ததேகம் நீர்மேற் குமிழியையொத்தது. இதுநிலைபெற்றிராது. இதற்குக் கண்ணைமூடித்திறப்பதற்குள்ளாகஜெனனமரணமுண்டாயிருப்பதால் அநித்தியமானதென்று சாஸ்திர சம்பன்னரான பெரியோர்கள் இதன்விஷயத்திலாசைவைத்து அழியாமல் என்றும் நித்தியமாயிருக்கும் பரவஸ்துவைத் தியானித்து ஜனனமரணமில்லாத பதவியையடைகிறார்கள். ஆனகையாலிந்த தேகத்தைவிட்டு ஆத்துமாபிரிந்து

போவதற்குமுன் என்குமாரனுக்குமகுடாபிஷேகஞ்செய்துஎன்சுமையை அவன்தலைமேல்வைத்துச் சகலபற்றையுமொழித்துப்பகவானைத் தியானஞ்செய்திருந்து முடிவில்மேலானபதவியைப் பெருகிறேனென்று சொல்லிய அரசனது மொழிகளைக்கேட்ட மந்திரிகள் ஆலோசித்து சமஸ்தான சோதிடரைக்கொண்டு பட்டாபிஷேகத்திற்கு முகூர்த்தநாள் குறித்துக்கொண்டு அதற்குவேண்டிய சாமக்கிரியைகள் யாவற்றுஞ்சேகரித்து வைத்துக்கொண்டு அரசனுக் கறிவித்தார்கள். இதைக்கேட்டு அரசன் இனியில்லாத பரமாநந்தமடைந்து மந்திரிகளைநோக்கி ஓ மந்திரிகளே! நமது புதல்வனுக்கு இச்சுபகாரியம் நடத்தப்போகிற விவரத்தைச் சகல அரசர்களுக்கும் பந்துக்களுக்குந் தெரியப்படுத்துவதுடன் நகரத்தைஅலங்கரித்து திவ்யதீர்த்தங்களையுஞ் சேகரித்துவையுங்களென்று ஆக்கியாபித்தான். மந்திரிகள் அரசன் சொல்லியபடி தேசதேசங்களுக்கெல்லாம் ஓலைகளெழுதித் தெரியப்படுத்தி நகரத்தை யலங்கரித்து காசிமுதலான திவ்யதேசங்களின் தீர்த்தங்களைக்காவடிகளி லெடுப்பித்துவரச் சகல வஸ்துக்களுந் தயார்செய்து வைத்து அரசனுக்குத் தெரிவித்து குறித்தமுகூர்த்தலக்கினத்தை யெதிர்பார்த்திருந்தார்கள்.

அப்போது ரதகஜதுரகபதாதிகளாகிய நால்வகைச் சேனைகள் சூழ அரசர்களனைவரும்வந்து கௌடபங்காளதேசத்தை யடைந்தார்கள். அவர்கள்யாவரையும் மந்திரிகளழைத்துவந்து தக்கவிடுதிகளிற் சேர்த்து வேண்டிய வஸ்துக்களையுதவி ஆதரித்தார்கள். இந்தப்படியாக மந்திரிகள் அரசன் உத்திரவின்படி யாவற்றையுஞ் சித்தப்படுத்திஅரசர்களுக்கும் மரியாதைசெய்து முகூர்த்தலக்கினஞ் சமீபித்த மாத்திரத்தில் ஜெயபேரிகை வெங்கலபேரிகைமுதலான சகலமங்கல வாத்தியங்களுங் கோஷிக்கும்படிச்செய்து அரசனிடத்தில் வந்து பணிந்து பட்டாபிஷேகத்திற்குக் குறித்த லக்கினம் நெருங்கிவிட்டதென்று நவிலக்கேட்ட அரசன் ஆசாரியன் முதலான பெரியோர்களை யழைத்துப் பூசித்துத் தக்க ஆசனத்திலிருத்தி பரமகுருவாகிய சுபுத்திமா முனிவரைநினைத்து அவரைப்போலச்செய்திருக்கும் விக்கிரகத்திற்குத்திருமஞ்சனமுதலானசோடசோபசாரங்களை நடத்தி தூபதீப நைவேத்தியங்களைத் தந்து பிரதக்ஷண நமஸ்காரம் புரிந்து வெகுவாகத்தோத்திரஞ்செய்து ஓ சுவாமி! தேவரீர்அருளாற் பிறந்த புதல்வனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்விக்கமுயன்றேன். இத

னலவனுக்கு யாதொருகுறைவும் நேரிடாமல் இதுபரியந்தம் காத்த துபோல இனிமேலுங் காப்பாற்றி ரக்ஷிப்பதுமதுபாரமென்று சொல்லி இணங்கிவணங்கியங்கிருந்தும் சபாமண்டபத்திற்குவந்து நவரத்தினங்க ளிழைத்த பட்டாபிஷேகமண்டபத்தில் குமாரனையிருக்கச் செய்து ஆசாரியர்முதலான பெரியோர்களால் வேதோக்த பூர்வகமாகக் காசிமுதலான திவ்வியதேசத் தீர்த்தங்களைக்கொண்டு அபிஷேகஞ்செய்வித்து நூதனமாகியும் சித்திர விசித்திர மாகியும் விளங்கும் பட்டாடைகளையுடுத்தி நவரத்தினாபரண கடககங்கண ஆரகேயூரமுதலாகிய ஆபரணங்களை அணிவித்து மணம்பொருந்திய மலர்மாலைசூட்டி வேதியர்கள் வேதமந்திரங்களையோதி அக்ஷதைகளால் ஆசீர்வதிக்கப் பெரியோர்கள் பலலாண்டுகூற சகல அரசர்களும் பந்துக்களும் குடிகளும் நவிலும் ஜெயஜெயசப்தம் கடலொலியொக்க ஆசாரியர்கைகளால் திருமுடியை கோபீசந்தன மகாராஜன் சிரத்திற்றரித்துப் பல ஆசிகள்கூறி அழைத்துவந்து சிங்காதனத்தின்மீது வீற்றிருக்கச்செய்து ஆசாரியர் தனக்குரிய ஆசனத்தின்மீதிருந்தார். உடனே மந்திரிகள் எழுந்து கோபீசந்தன மகாராஜனுக்கு வணங்கினார்கள். தண்டத்தலைவர், அணித்தலைவர், படைத்தலைவர், வியூகத்தலைவர்களும் முறைமையவணங்கினார்கள்; பாடகர்கள் பண்பாடினார்கள்; ரம்பை, ஊர்வசி, மேனகை, திலோத்தமைகளுக்கு நிகரான தாசிகளாடினார்கள்; கட்டியர் எச்சரிக்கைபேச பிரதானிகள் கவரிவீச வெகு உல்லாச விலாசத்துடன் கோபீசந்தன மகாராஜன் கொலுவீற்றிருந்தான்.

இந்தப்படியாகச் சகலரும் தன்னைவணங்கச் சிங்காதனத்தின்மீதிருக்கும் புதல்வனைத் திரிலோகசந்தன மகாராஜன் கண்குளிரப் பார்த்துப் பலவிதமாகவாழ்த்தி ஆநந்தக்கண்ணீர்சொரிந்து ராஜசூயயாகத்தில் தருமநந்தனர் தானங்கொடுத்ததைப்போல அளவில்லாத யானைகளும் கணக்கிடமுடியாத குதிரைகளையும் பருவதாகாரமான பொன்குவியலையும் கன்றுகளுடன் உத்தமமாகிய அளவிறந்தகோக்களையும் எண்ணிக்கையில்லாத கன்னிகைகளையும் ஆகாயத்தையளாவிய வஸ்திரப்பொதிகளையும் நிகரில்லாத பலபூமிகளையும் எத்தனைபேர்கள் வரினும் இல்லையென்னாத பிரசாதங்களையும் இன்னும் பற்பல தானங்களையும் அபாரமாகத்தந்து அரசர்கள் பந்துக்கள் முதலானோருக்கும் விருந்துசெய்து அவரவர்களுக்குத் தக்கபடி சன்மானம

ளித்துவிடைதந்தனுப்ப யாவரும் விடைபெற்றுத் தங்கடங்கள் நகரத்தையடைந்தார்கள்.

கேட்டீர்களோ சித்தர்களே! இனி திரிலோகசந்தனமகாராஜன் சகலத்தையும்வெறுத்துப் பராபரவஸ்துவைத் தியானித்து மேன்மையாகிய பதவியையடைந்த விருத்தாந்தத்தையுஞ் சொல்லுகிறேனென்று தன் குருசுவாமியைத் துதித்துச் சொல்லத்தொடங்கினார்.

கேளுங்கள் சித்தர்களே! இவ்வண்ணமாகத் திரிலோகசந்தனமகாராஜன் தன்குமாரனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்து அரசர்களுக்கு விருந்தளித்து சன்மானமீந்து விடைதந்து அனுப்பித்தன்புதல்வனையழைத்து ராஜநீதிகளையுந் தந்திரங்களையும் பலவாகவுதிச்செங்கோலையளித்துச் சர்வசங்க பரித்தியாகஞ் செய்து பரிசுத்தமனத்தனாகி ஏகாந்தஸ்தானத்தில் கிருஷ்ணாஜனத்தின்மீது வீற்றிருந்துகொண்டு தன்மனைவியாகிய மைனாவதி உபசரிக்கப் பரம்பொருளாகிய விராட்புருஷனை இடைவிடாது அல்லும்பகலுந் துதிசெய்துகொண்டிருந்தான். எப்படியெனில், யோகீஸ்வரர்களது மனதுக்கும் வாக்குக்கும் எட்டாத அகோசரனாகிய புருஷோத்தமனே உனக்கு வந்தனம்! வேதங்கள் ஆநந்தம் பிர்ம்மானந்தமென்றும் இரண்டையுங்கண்டு பரமாநந்தமாகிய நினது திருவடியைத் தேடித்தேடி யலைந்து காண்பதரிதென்று மருண்டவேதாதீதனே உனக்குவந்தனம்! இப்படிப்பட்டதென்று மனதில் நினைப்பதற்கும் வாக்கினால் சொல்லுவதற்கும் அரிதாகிய பரப்பிரம்மத்தினிடத் திருந்துண்டாகியது சுஷேப்தி அவ்வந்தகாரத்துக்கு நிகராகிய அவ்யக்தமென்று சொல்லும் மூலப்பிரக்ருதியென்றும் அதிலிருந்துண்டாகியது ராஜசதாமச சாத்மீகமென்னும் மூன்றுகுணங்களென்றும் அதில் சிரேஷ்டமாகியது சாத்மீகம் அதிலிருந்து பிரதிபலித்த பிரம்மமே பகவானென்றும் சொல்லப்படும். அப்படிப்பட்ட சுத்தசத்துவகுணப் பிரபுவாகிய உனக்குவந்தனம். இந்த உத்தமமாகிய குணத்தினையுடைய உனது நாபீகமலத்திலிருந்தும் பிரமன்பிறந்து அவனால் அதல-விதல-சுதல-ரசாதல-தராதல-மகாதல-மென்று சொல்லப்பட்ட கீழுலகங்கள் ஏழும் பூலோக-புவர்லோக-தபோலோக-பிதுர்லோக-மகாலோக-ஜனோலோக சத்தியலோகங்களென்னும் மேலுலகங்கள்ஏழும் ஆகபதினான்குலோகங்களையும் சராசரங்களும் அண்டபிண்டபிரம்மாண்டங்களும்உன்

டாகியது நிரூபமாகவிருக்கும்போது பிரம்மமென்றும், சுவரூபத்துட னிருக்கும்போது விஷ்ணுவென்றும் சொல்லப்படும். அப்படிப்பட்ட விஷ்ணு சொரூபத்திற்கு வந்தனம். விஷ்ணுபரப்பிரம்ம சொரூபமெ ன்று வேதங்கள் முறையிடுவதால் அப்படிப்பட்ட விஷ்ணுவே ஆதி தெய்வமென்று பெரியோர்களால் துதிசெய்யப்படுவதால் ஆதிதெய் வமாகிய உனக்குவந்தனம்செய்கின்றேன். இதுவுமின்றி, ஆதியில்ஜல ரூபமாகப் பிரகாசித்தபடியால் நாரமென்றும், அயனமென்றும், நம என்றும் மூன்று பிரிவாகிய நாராயணனைக்குறித்து வந்தனம்செய்கி றேனென்று இந்தப்படியாக பற்பலவிதங்களாய் தோத்திரஞ்செய்து கொண்டு நாலைந்து வருஷகாலம் இருந்து முடிவில் நாராயணனைத்து திசெய்து கொண்டே திரிலோக சந்தன மகாராஜன் பரமபதம டைந்தான்.

அவர் தம்மனைவியாகிய மைத்ரேயி உடல்பதறி ஆ பிராணநா தா! என்று பெருமூச்சுவிட்டு பூமியில்விழுந்து மூர்ச்சையடைந்து பிரேதத்தைப்போற்கிடந்து சின்னேரத்தில் மூர்ச்சை தெளிந்தெழு ந்து முகத்திலும்மார்பிலும் அறைந்துகொண்டு கோவென்றழுதுபுல ம்பலாயினள். ஓ எனதருமைக் கண்ணாளரே! உடலுமுயிரும் போல மிகுவாஞ்சையாய் கூடிக்கலந்திருந்த பிரியநேசரே! உடலாகிய என் பேரில்வைத்திருந்த ஆசையையொழித்து இந்தக்கட்டைஎத்தனைநா ளிருந்தபோதிலும் ஒருநாளைக்குவிழுந்து அழிந்துபோகும். இதைநம்பி நேசித்திருப்பதில் பிரயோசனங் கிஞ்சித்துமில்லையென்று வெறுப்படைந்து கட்டையாகிய அடியாளைத் தனியேவிட்டுப் பிரிந்து நீர்மாத்திரம் போவதுஞாயமோ? வெகுநாளாய்க்கூடி வாழ்ந்திருந்து அடியாளுடன் ஒருவார்த்தையேனுஞ் சொல்லாமற்போவது நீதிவா னாகிய தங்களுக்குத் தருமமோ? இதென்னவர்மமோ? அல்லதுமுற் பிறப்பில் யான்செய்த கர்மமோ? எனக்குப் பிராணபதமாயிருந்த நீர் என்னைவிட்டுப் பிரிந்துபோனபின்புநானிருந்துவாழ்வது எனக்கொரு வாழ்வா? அப்படிவாழ்வதுதாழ்வேயல்லாமல் அணுவளவுமேன்மை யில்லையே. ஐயோஎனக்கு இனியார்கெதி இதையோசிக்கையில் என் னெஞ்சம்புழுங்கிக் கொதிக்கின்றதே? எவ்வாறு உயிர்பெற்றிருப்பேன் "காவலுடனே பாவையர்க்கழகு" என்னும் ஔவைவாக்கியத்தின்படி காவலுடனிருப்பதல்லவோ மங்கையர்களுக்கு அழகு: காவலற்றபின் மங்கைகளுயிருடனிருப்பது அழகல்லவென்று பலமுதியோர்களும் சொல்லியிருப்பதால் இனி இவ்வுலகத்தில் அரைநிமிஷமேனும் உயிர்

ளைந்துக்கொண்டிருப்பேனே கண்ணாளனே! என்று கதறி மனஞ்சி
தறிக் கண்ணீர் ஆறாய்ப் பெருகியோட புரண்டழுகிற ஓசையானது
புதிய அந்தப்புரத்தில் வசிக்கும் மருமக்கள்மாரெல்லோரும் கேட்டு
இதென்ன நமது மாமியின் அழுகுரல் கேட்கிறதே என்று திடுக்கிட்
டுத் தங்களிடத்திலிருக்கும் தாதிகளைக்கூவி யரண்மனை யந்தப்புரத்
தில் ஒற்றையழுகுரல் கேட்கிறது அதென்னசங்கதியென்று விசா
ரித்து வாருங்களென்று அனுப்பத் தாதிகளும் அந்தப்புரத்தைநோ
க்கிப்போகிறபோது நடுவழியில் எதிர்கொண்டுவருந்தாதிகளைக்கண்டு
அந்தப்புரத்தில் என்னவிபரீதம்? அழுகுரலோசை கேட்கின்றதே
யென்று அவர்களைநோக்கிவினவ, அதற்கு அவர்கள் பெரியமன்னன்
மரணமடைந்தபடியால் அரசியழுகிறாளென்று சொல்லக்கேட்ட தா
திகள் அழுதுகொண்டேசென்று சாவுசமாசாரத்தைச்சொன்னமாத்தி
ரத்தில் மருமக்கண்மாரனைவரும் குய்யோமுறையோ வென்று கூவி
யழுதுகொண்டே இராஜகுமாரனுக்குத் தெரிவிக்க, இராஜகுமாரன்
மனைவிகள் நூறுபேருடன் அந்தப் புரத்துக்குள் வந்த மாத்தி
ரத்தில் மைனாவதி திரைக்குள்ளேபோய் மறைவா யிருந்துகொ
ண்டு புலம்பலுற்றாள். அப்போது இராஜகுமாரன் மரணமடைந்த
தந்தையைப்பார்த்துப் பலவிதமாக உருகிவாடிச்சோகித்து முடிவில்
மந்திரிகள் தேற்றத்தேறி பிரேத சம்ஸ்காரத்திற்கு வேண்டிய சா
மக்கிரிகைகளைச் சேகரிக்கும்படி ஆக்கினைசெய்து தந்தையைப்பார்
த்துப்பார்த்து விசனப்பட்டுக்கொண் டிருந்தான். மருமக்கண்மார்
நூறுபேருந் திரைக்குள்ளாகச்சென்று மாமியைக்கட்டியழுது புல
ம்பிய கோஷ்டமானது என்னொருநாவினாற் சொல்லிமுடியாது; இந்
தப்படியாக அழுதுபுலம்பித் தங்களுக்குத்தாங்களே தேறினவர்களா
கிய ஒவ்வொருவருந்தனித்தனியே மாமியைத் தேற்றியும் தேறாமல்
பிணம்போல அசைவற்றுக் கிடப்பதையறிந்து என்னபிரமாதம்
விளையுமோவென்று சந்தேகித்தவர்களாய் வெகுஜாக்கிரதையாக மா
மியைச்சுற்றிக்கொண்டு காத்திருந்தார்கள். இந்தப்படி யோரிரவும்ப
கலுங் காத்திருந்து மறுநாள்சாயந்திரஞ் சில நீதிமொழிகளைப் புக
ன்று மாமீ! நீரிப்படிப்புலம்புவதால்வரும்பயன்யாதேனுமுண்டோ?
மரித்தவர் பிழைத்துவருவாரா? வரப்போகிறதில்லை, ஏன் வீணாக
துக்கப்படுகிறீர்? நாங்களெல்லாமிருக்க உமக்கென்ன குறை? அன்றி
தங்கள் குமாரனுமக்கோர் குறைவுண்டாகும்படிச் செய்யமாட்டார்.
தாய்மனம் நோகச்செய்த அரசர்களும் உலகத்திலுண்டோ? என்றி

ந்தப்படி பல நயமொழிகளைப்புகன்று தேற்றத்தேறினவளாய்ச் சற்று நேரமிருந்து மறுபடியும் விசனப்பட்டுக் கொண்டிருந்தாள். இதற்குள் மந்திரிகள் சகலவஸ்துக்களையுந் தயார்செய்து அரசனுக்கறிக்கை செய்தார்கள். உடனே அரசன் ஸ்நானஞ்செய்து பிரேதத்துக்குச் செய்யவேண்டிய சடங்குகளனைத்தையுஞ்செய்து முடித்து எடுப்பித்துக்கொண்டுபோய் தக்கவிடத்திற்சேர்த்து தகனசம்ஸ்காரங்கள் யாவும் நடத்தியாயிற்று. பின்னர் கருமாதிகாரியங்களையுஞ்செய்துமுடித்துச் சுகமாக ராஜரீகஞ்செய்திருந்தான்.

இப்படிக்கிருந்த இவனுக்கு இடையில் குணங்கெட்டுக் காமாந்தகாரனாகி ஸ்திரீலோலனாய் கொலுக்கூடத்திற்கு வராமலும் ஈன்மைத் துன்மைகளை விசாரிக்காமலும் தன் தாயாருடைய சுகதுக்கங்களைக் கருதாமலும் ஸ்திரீகளுடைய மாய்கையென்னுங் கடலில்மூழ்கிக் கரையேறவகையறியாமல் "செய்தவமறந்தாற் கைதவமாகும்" என்னும் வாக்கியத்தின்படி ஆசான்செய்த நன்றியைமறந்தபடியால் முற்பிறப்பில் தான்செய்த கைதவத்தையுமிழந்து துர்க்குணங்களிற்சிறந்து கொடியபாதகனாகி யிருந்தான். இவனிப்படிக் கிருப்பதையும் மன்னவன் மடிந்துபோனதையும் மைனாவதி நினைந்துருகி வாட்டமடைந்துகொண்டு இதுவேசிந்தையாய்கலக்கப்பட்டிருந்தாள். இதைத் தாதிகளறிந்து வேண்டிய நயவசனங்களைக்கூறியும் மன்னவன்மேலிருக்குஞ்சிந்தை மாறாதவளாய்க் கண்ணைக்காக்கும் இமையைப்போலவும், சேனையைக்காக்கும் தளகர்த்தனைப்போலவும் இன்னாட்டைக்காத்து ரக்ஷித்துக்கொண்டிருந்த தருமப்பிரபுவே! என்குலவிளக்கே! என்னுருயிரே! என்தேனே! அரசர்குலக்கோனே! என்றிந்தப்படி பைத்தியம்பிடித்தவனைப்போல இடைவிடாமல் சிந்தித்துக் கொண்டே உப்பரிகையின்மீது உலாவியிருந்தாள். இவ்வண்ணஞ் சிலநாளிருக்கிறபோது ஒருநாள் வழக்கப்படி உப்பரிகையின்மீது உலாவிக்கொண்டே வடதிசையைநோக்கினாள். அங்கொருகாட்டில் மகாத்மா ஒருவர் கட்டைகளையொடித்துச் சுமையாக்கட்டித் தலையின்மீது வைத்துக்கொண்டு நகரத்தைநோக்கிவர அவ்விறகுசுமையானது அந்தச்சாதுவின் தலையைவிட்டு சாணுயரங்கிளம்பி அந்தரமாக அவருடன்கூடவே வருவதைக்கண்டு மைனாவதி ஆச்சரியமடைந்து இவரிவ்வுலகத்திலுள்ள சாமானியமனிதரைப்போல்பவரன்றுமகானுபாவராகக்காண்கின்றார். இவரது திருமேனியோ சொர்ன்னத்தைப்போலப் பிரகாசிக்கின்றது; அன்றி நேத்திரத்தின் நீக்ஷியும் முழங்காலுக்

குக்கீழேதொங்குகிற கைகளும் தாமரைமலரையொத்தபாதங்களும் மற்றுமுள்ள அவயங்களைப்பற்றி யோசிக்கையில் சாமுத்திரிகா சாஸ்திரத்திற்சொல்லியபடி சகலலக்ஷணங்களும் பொருந்தி முதிர்ந்தவயதுடையவராயிருந்தும் எவ்வொருபுருஷனைப்போல விளங்குகிறார். அன்றி இவருடைய தலையின்மேல் வைத்துக்கொண்டுவந்த விறகுசுமையினினம்பி சாணுயரத்திலெழும்பிஅந்தரமாகச்சாயையைப்போல விடாது அவருடன்கூடவேவருகின்றது. இந்தமகிமை அவரிடத்திலிருப்பதால் அவரை முக்தாத்துமாவென்றெண்ணத்தகுமென்றுகருதி அவர் வந்து தங்குகிறவிடத்தைக் கவனமாகப் பார்த்துக்கொண்டிருந்து பொழுதுபோனவுடன் பலவிதகனிவகைகளும்கற்கண்டு திராக்ஷைப் பசும்பால் முதலியவைகளும் சேகரித்து ஓர் பொற்றட்டில்வைத்து நித்திரைசெய்துநடுராத்திரியில் எழுந்து கனிவகைகளடங்கிய பொற்றட்டைக் கையில் தாங்கிக்கொண்டு நூலேணியைவிட்டு அவ்வேணியைப்பற்றிக்கொண்டிறங்கி அம்மகாத்துமாவிருக்குந் திசையைநோக்கி நடந்துசென்று பொற்றட்டை அவர் முன்வைத்து பயபக்தியுடன் அவர்திருவடியில்விழுந்து சாஷ்டாங்கமாக தெண்டனிட்டு விநயமாகவெழுந்து கைகூப்பிநின்றாள். அப்படிநிற்கும் மைநாவதியைநோக்கி ஜாலந்தர நாதர் ஓ அம்மணீ ! நீ யாரம்மா! உன்னைப்பார்த்தால் இந்நகரத்தரசன் மனைவியைப்போலகாண்கின்றது. உன்வரலாறுயாது சொல்லுமென்ன, அதற்கு மைநாவதி ஜாலந்தரநாதரைநோக்கிச்சொல்லத்தொடங்கினள். கேட்டீர்களோ பக்தர்களும் ஜீவன்முக்தர்களுமாகிய சித்தர்களே ! இம்மைநாவதி ஆசாரியரிடம் உபதேசம்பெற்றுக்கொள்ளும்விதத்தை நானென்னவென்றுசொல்லுவேன்? ஆகிலும் ஆசானது திருவடியைச்சிந்தித்து மனத்துள்வைத்துக்கொண்டு சொல்லுகிறேன். கேட்பீராகவென்று குருபாதங்களை வந்தித்துச்சிந்தித்துச் சொல்லத்தொடங்கினர்.

கேளுங்கள் சன்மார்க்கத்திலிச்சையுற்றவர்களே! பெரியோர்கள் தம் அருளைப் பெற்றவர்களே ! சாதுக்கள் சரிதையைக்கேட்க அன்புற்றவர்களே ! வேதசாரவித்தகர்களே ! மகாபதிவிரதையாகிய மைநாவதிஜாலந்தரநாதரை இறைஞ்சிவணங்கி ஓ சுவாமி! அடியாளிந்நகரத்தையாண்டிருந்த அரசனதுமனைவி. என்பேர் மைநாவதியென்று சொல்லுவார்கள்; எனக்கோர்குமாரனும் ஒருபுத்திரியும் உண்டு; இவ்விருவருக்கும் கலியாணம் நடந்துவிட்டது. குமாரனுக்குப்பட்டங்கட்

டிய பெலாளெக்கெல்லாம் என துகணவன் மரித்துப்போயினர். அவர் இறந்துபோனபின்பு சிலநாள்பரியந்தம் குமாரன் இராஜநீதிதவருமல் அரசுபுரிந்திருந்து பின்பு தருமத்தைவிடுத்து அதருமத்துக்குட்பட்டுப்பெண்கள் மாயையில்விழுந்து காமாந்தகாரனுகி இராஜநீதியைக் கடந்து துஷ்டகுணமேலிட்டு கொலுக்கூட்டத்திற்குப் போகாமல் அரசகாரியத்தை மந்திரிகள் வசமாக்கி நிமைப்பொழுதேனும் மனைவியைவிட்டுப் பிரியாமல் அந்தப்புரமே கெதியாயிருக்கிறன். இப்படிப்பட்ட துர்க்குணத்தையுடைய பாதகனைத்திருத்தி ஆட்கொள்ளும்பொருட்டு எழுந்தருளுவீரென்று தங்கள் திருவடியைப்பிடித்து வேண்டிக்கொள்ளுகிறேன் என்று வினயமாகப்புகன்றமைனுவதியைநோக்கி ஜாலந்தரநாதர்சொல்லத்தொடங்கினர்.

கேளும் உத்தம அரசன்மனைவியாகியமைனுவதியம்மணீ! "தானுகக்கனியாதகாயைத் தடிகொண்டடித்தாற் கனியுமோ" அப்படியல்ல வென்று கனிந்த போதிலும் அது மதுரமாயிராது. அதுபோல நானே வலியச்சென்று உன் குமாரனுக்கு இதோபதேசங்கள் செய்தபோதிலும் யௌவனசேஷ்டையால் அனுவளவேனும்புத்தியிற்படாது. பட்டபோதிலும் குணத்தைத்தரமாட்டாது. பெரியோர்களையடுத்து அவர்களுபதேசத்தைப்பெற்று ஜீவன்முக்தனுகி யுலகத்திலிருக்கவேணுமென்றவைராக்கியந்தனக்குத்தானேயுண்டாகி தீவிரத்தையடைந்து எம்போலியரிடத்திற்கு வருவானேயாகில் அப்படிப்பட்டவனையும் பன்னிரண்டுவருஷகாலம் பரிக்ஷைசெய்து தக்கவனுயிருக்கில் அவனுக்குபதேசஞ்செய்விக்கும்படி வேதங்கள் முறையிடுகின்றன. மேற்கூறியபடி பன்னிரண்டுவருஷம் பரிக்ஷைசெய்யாமல் துஷ்டனுக்கு உபதேசஞ்செயதால் உபதேசஞ்செய்த ஆசானும் உபதேசிக்கப்பெற்ற சிஷனும் ரௌரவாதி நரகத்தையடைவார்களென்று வேதங்கள் கூறுகிறபடியால் உன்குமாரன் துர்க்குணமுடையவனென்று நீயேசொல்வதால் அப்படிப்பட்ட துஷ்டனுக்குப்போதித்தலால் அவஸியந்தோஷம்வந்து சம்பவிக்குமென்பதில் சந்தேகமேயில்லை. பக்குவப்பட்டவனுக்குப்போதிக்கவேண்டுமேயல்லாமல் அபக்குவருக்குப்போதிக்கக்கூடாது. ஆகையால்என்மீது ஆயாசம்கொள்ளாமல் சென்று உனது புத்திரனுக்குப் பலவிதநீதிகளையோதிப் பெண்கள் மயக்கையறுத்து இராஜரீகத்தில்புத்திசெல்லும்படியாகச் செய்து அவன் சம்மதியின்பேரில் இங்கழைத்து வருவையாகில் எம்மால்கூடியமட்டும் போதித்துத்திருத்தி உபதேசஞ்

செய்கிறேனென்று மொழிந்த ஜாலந்தரநாதரைநோக்கி மைனுவதி சொல்லுகின்றாள்.

எங்களையாட்கொள்ளும்பொருட்டு யெழுந்தருளிய சத்குருநாதரே? அடியாள் புருஷனுயிருப்பனேயாகில் ஒருநொடியில் அந்தமூடனைத் திருத்துபாடுசெய்துவிடுவேன். பெண்ணு யிருப்பதாலும் எங்கள்குல வழக்கமெப்படியெனில், குமாரனுயிருப்பவனைத் தாயார் அந்தப்புரத்திற் சேர்க்கக்கூடாது. அன்றி கோஷாவாயிருப்பதாலும்நான் எவ்வண்ணம் என்குமாரனுக்கு எதிரில் நின்று நீதிகளையோதி அவனைத் திருத்துவேன்? தேவரீருக்குத் தெரியாததொன்றுண்டோ? திரிகாலமும் அறியவல்ல சற்குருநாதரே! அடியாளேனுந் தெரிந்து உஜ்ஜீவிக்கத்தக்க நன்மார்க்கமொன்றை யுபதேசிக்கவேண்டும். கருணைவள்ளலே! எனவணங்கிய மைனுவதியைநோக்கி ஜாலந்தரநாதர் சொல்லுகின்றார். கேளுங்குருபக்தியிற்சிறந்த உத்தமியே! நல்லவேளைபார்த்து உன்கருத்தின்படி யுபதேசஞ்செய்கிறேன். உன்னைப்பரீக்ஷைசெய்யவேண்டிய அவசியமேயில்லை. இன்னுஞ்சிலநாள் பொறுத்துக்கொண்டிருமம்மாவென்ன, அதற்குமைனுவதிஓசுவாமி! நற்காரியத்திற்கு நாள்கூடப்பார்க்கவேண்டுமா? காயம்அநித்தியமாதலால் நல்லநாளை யெதிர்பார்த்துக்கொண்டிருப்பதற்குள் பிராணவாய்வு தேகத்தைவிட்டுவெளிப்பட்டுப்போமானுல்உபதேசம்பெறுவது யெங்கே? நிமைகொட்டுவதற்குள்மரணமிருப்பதால் அப்படிப்பட்ட காலம்வந்து சம்பவிப்பதற்குமுன் ஆசானருளைப் பெறவேணுமென்றெண்ணித் தேவரீரைச்சரணமடைந்தேன். இப்படிப்பட்டவெனக்குயேதேனுமொரு நல்லவிஷயத்தைப் போதிப்பதைமறுத்து நல்லநாளும்லக்கினமும்கிரகங்களும்பார்த்துஉபதேசஞ்செய்கிறேனென்று ஏதோ ஒரு போக்குகாட்டுவது தருமமோவென்ற மைனுவதியின் தீவிரமதியையுணர்ந்து ஜாலந்தரநாதர் பின்னுஞ்சொல்லுகின்றார்.

கேளாய் தீவிரமதியிற் பக்குவப்பட்ட உத்தமீ! முன்னம் பராசர முனிவர் ஒருநாளிரவில் ஓடத்திற்குப்போகிறபோது ஆகாயத்தைப்பார்த்தார். அப்போது திதிநக்ஷத்திரம் யோகம் கரணம் வாரம் கிரகங்களின்உச்சம் இவைகள்யாவும் சுபமாயிருப்பதையறிந்து இத்தருணத்தில் ஒருவனிதையுடன் சேர்ந்தால் திவ்வியஞான சம்பன்னனை உத்தமபுத்திரன்பிறப்பானென்றெண்ணிஓடஞ்தள்ளுகிறவளைப் பார்த்தார். அவள்ஜாதியில் செம்படத்தியும் கன்னிகையாயும் தேக

மெல்லாம்மீச்சுநாற்றமுடையவளாயுமிருக்க அவளைத்தன்னருகிலழைத்துத் தன்கைகளினாலே அவள்தேகத்தை ஸ்பரிசித்துத்தடவி மச்சகந்தியென்னும் பெயரைப்போக்கி பரிமளகந்தியென்ற திருநாமம்விளங்கக் கடாக்ஷித்து பால்ய தசையைப்போக்கி யௌவனதசையையடைய அருள்புரிந்து லக்கினமும்கிரக உச்சமுமாகிய உத்தமகாலத்தில் அவளைக்கூடியபடியால் தக்ஷணமே நாராயண அம்சமாகிய வேதவியாசர் பிறந்தார். அந்த வேதவியாசர் ஒருநாளிரவில் காட்டிற்புகுந்து போகிறபோது எத்தனைநாழிகையாச்சுதென்று அறியும்பொருட்டு ஆகாசத்தைநோக்கினார். அப்போது லக்கினம் கிரகங்கள் முதலானதுகளும் உச்சஸ்தானத்தி லிருப்பதையறிந்து ஆஹா இதுநல்ல காலமா யிருக்கின்றதே இப்போது மனிதசஞ்சாரமில்லாத இக்காட்டில் ஓர் வனிதை நமக்குக்கிடைக்கக்கூடுமோ? இதற்கென்னசெய்கிறதென்று யோசித்துக் கொண்டிருக்கிறபோது தன்னடையே காமவிகாரமேலிட்டு வீரியம்வெளிப்பட அதையோர்தொன்னையில்பிடித்து அங்கோர் மரத்தடியில் வைத்துவிட்டு மனதுக்கிசைந்தபடிப்போயினார். அதை யம்மரத்தில்வசிக்கும் கிளியானது புசித்துக் கெர்ப்பந்தரித்தது. அதன் வயிற்றிலிருந்துஉலகமாய்கையற்ற சுகப்பிரம்மரிஷி பிறந்து சகலருங்கொண்டாடும்படியான பிரசித்தியடைந்தார். இதற்குக்காரணம் நல்லநாளே யாதலால் ஒவ்வொருவரும் அவசியம் நல்ல நாள்பார்த்தே குருவினிடத்தில் வுபதேசம் பெற்றுக்கொள்ளவேண்டும். நல்லநாள்பார்த்துப் பராசரமுனிவர் தக்கமுயற்சி செய்தபடியால் வேதவியாசருக்கும் நன்னிமித்தத்தினாற்செய்தமுயற்சியால் சுகப்பிரம்மரிஷியுமாகத் தோன்றி உலகத்திற்கு உபகாரார்த்தமாய் புராணங்களைச்செய்து அதையனுஷ்டித்து மானிடர்கள் கடைத்தேறும்படி அருள்புரிந்தார்கள்.

ஆகையால் நன்னாள்பார்த்தே உபதேசிக்க வேணுமென்றெண்ணிஉனக்குச் சொன்னதே யல்லாமல் போக்குக் காட்டி உன்னைவஞ்சிக்கவேணுமென்று யான்கிஞ்சித்தும் எண்ணமே யில்லை. இப்போது நான்சொல்லியபடி நீ யரண்மனைக்குப்போய் நாளையத்தினம் வருவையாகில் முக்தாத்துமாவாகி என்றும்உலகத்திலுலாவும்படியாக உத்தமசுபதினத்தைப் பார்த்துச் சொல்லுகிறேன் என்றுசொல்லிய பெரியோரது வாக்கியத்தைகேட்டு மைனாவதி சந்தோஷமடைந்து பொற்றட்டை யெடுத்துக்கொண்டுவிடைபெற்றுச் சென்று அரண்மனைசேர்ந்து படுத்து நித்திரைபோயினாள். இந்தப்

படியாக அனுதினமும் பண்டபலாதிகளைக்கொண்டுபோய்க்கொடுத்து அப்பெரியோரைக்கண்டு சேவித்து ஆநந்தமடைந்து அரண்மனை வந்து சேர்வாள். தன்கணவனிடத் தன்பிரிவா லுண்டாகிய துக்கத் தைமாற்றி வெகு சந்தோஷத்துடன் ஜாலந்தரநாத ரிடத்திற்குச் சென்று மைத்ருவதி பணிந்து ஓ ஸ்வாமி! நிஷ்காமி விஷயங்களெ ன்னும் தேள்களும் இந்திரியங்களென்னுஞ் சர்ப்பங்களும்காமக்குரோ தங்களென்னும வியாக்கிரங்களும் எண்ணங்களென்னும்மந்திரிகளும் அகங்காரமென்னும் யானைகளும் அபிமானமென்னும் முள்ளம்பன் றிகளும் இச்சையென்னுங் கோட்டான்களும் அஞ்ஞானமென்னும்இரு ட்கூட்டங்களுஞ் சூழ்ந்த தேகமென்னுங் காட்டிலகப்பட்டுக்கொண் டு தப்பிப்போக வழியில்லாமல் வெகுகாலமாய் வருத்தமுற்றிருக்கு மென்னை இக்கணமே தேவரீர் பாதுகாக்கவேண்டு மென்றுபணிய, ஜாலந்தரநாதர் ஓ அம்மணி இவ்விஷயேந்திரிய க்ரூரமிருகங்களைக் கண்டிக்கும்வாளும் அஞ்ஞானவிருளைநீக்கும் மார்க்கமும்அறியாமல் அதைதிருஷ்டிசெய்யும் தேசிகரைநானே வெகுநாளாய் தேடித்திரிகி ன்றேன். என்னைப்போலநீயும் தீவிரமதியுடையசாதுவாகிவந்தாயோ நீங்காத ஜெயந்தந்தாயோ இனியிதைப் பருத்துரைக்காமல் வேறே தேனும் கேள்சொல்லுகின்றேன்எனமைத்ருவதி அகக்காரண புறக்க ரணங்களை யொடுக்கும் உபாயமொன்றுமாத்திரம் கிருபைகூர்ந்தால் எல்லாங்கொடுத்ததேயாகும். ஆதலால் ஏழைமையருத்தும் இந்திரி யங்களைவெல்லும் அந்தக்கரணங்களைக் கொல்லும் தந்திரவித்தை யைமாத்திரம் தந்தருளும் ஸ்வாமியென்று வணங்க, ஜாலந்தரநாதர் ஓ பரிசுத்தையே! பரமபக்தையே! எனக்குத்தெரிந்தமேலான ராஜவ சிய மந்திரமுபதேசிக்கின்றேன்; அதையோர்மண்டலஞ் செபிப்பா யாகில் இராஜன்வசமாவான்; அதனால் மன்மதபோகங்களினாலும் தண்டிகை சவாரிகளாலும் ருசியான போகங்களாலும் மேலானயோ கங்களாலும் சுகமுற்றிருக்கலாம், இதைவிடுத்து சன்னியாசத்தைய டுத்துச் சங்கடமேனடையவேண்டுமென, மைத்ருவதி அரிச்சந்திரன், நளன், முசுகுந்தன், புருகுற்சன், புரூரவன், கார்த்தவீரியனென்னும் சக்கிரவர்த்திகள் அறுவரும் அவர்கள் பத்தினிகளும் பட்டபாட்டை சாஸ்திரங்களாலறிந்ததன்றிப் பிரத்தியக்ஷமாய் அனேகவரசர்களும் அரசிகளுமடையுந் துன்பத்தையுங்கண்டநான் இராஜபோகத்தையே ண்டுவேனோ? மோக்ஷ இச்சையுடையவர்கள் விஷயபோகத்தின்மேல விருப்பங்கொள்வாரோவென, ஜாலந்தரநாதர் ஓ வைராக்கியத்தை

வகித்து போகத்தையிழந்த அபாக்கிய வதியே! எக்கிய பலசித்திமந் திரமுறைக்கின்றேன். இதனால் இல்லறத்திலிருந்துகொண்டே யாகங்கள்செய்து மேலானசொர்க்கத்தை யடுத்து ரம்பாமிர்தாதி போகங்களாற் சுகித்திருக்கலாம். அதைநீக்கி இறந்துண்ணும் யதியாசிரமத்தையேன்கோருகின்றாயென, மைனாவதி தேவர்களுக்கதிபதியான தேவேந்திரன் ஓர்காலத்தில் பிரம்மஹத்திக்குப்பயந்து தண்டாமரைத்தண்டின்நூலில் நுழைந்திருந் தலக்கணுற்றும் மேகவாகனனாயிருந்தும் தனதுநந்தவனத்துக்கு ஜலமில்லாமல் வாட்டமுற்று இருந்ததன்றி இராக்கதர்களால் பலதரம்பிடிக்கப்பட்டு இந்திரபதவியைவிட்டு ஓடி ஒளித்திருந்தானென்று சாஸ்திரங்கள் முறையிடுவதையறிந்த நான்பொன்னுலகத்தை யாசிப்பேனோவென, ஜாலந்தரநாதர் ஓ உத்தமநற்குணம் நிறைந்த பொற்பாவையே! வேதங்கள்புகழும் அஷ்டாக்ஷரத்தை யுபதேசிக்கின்றேன்; அதைச்சிலநாள் தியானஞ்செய்து வருவாயானால் ஸ்ரீமந்நாராயணமூர்த்தி வாஸஸ்தானமாகிய பரமபதத்தை யடையலாம். இதைவிட்டு இந்தப்பரம அம்சத்தையேன்வாஞ்சித்தாயென, மைனாவதி ஓமாதவனே! அஞ்ஞானவிருளை நீக்கும் ஆதவனே! பரமபதமடைந்த ஜெயவிஜயாள் ஸனக்ஸனந்தனாதிகளால் சாபமடைந்து இராக்கத ஜென்மமெடுத்து துன்மார்க்கரெனப் பேர்பெற்றதால் திருமால்பதவியும் வேண்டிலேனென, ஜாலந்தரநாதர் இடபத்தைவாகனமாகவும் புலித்தோலையாடையாகவும் பக்தர்கள் சிரங்களை மாலையாகவும் தரித்த சிவபெருமான்வாசஸ்தானமாகிய கைலாசத்தை யடையச்செய்யும் பஞ்சாக்ஷரத்தைப் போதிக்கின்றேன் இதனால் பக்தசிகாமணி யாகலாமென,மைனாவதி கைலாசவாசராகிய பரமசிவனார் பிரம்மஹத்திக்குப்பயந்துபிச்சையெடுத்துச் சென்றதாலும் பார்வதி தக்ஷப்பிரம்மாவின் யாகத்தில் வீழ்ந்திறந்துபருவத ராஜனுக்கு மகளானதாலும் சிவனார்பதமும் வேண்டிலேனென, ஜாலந்தரநாதர் ஓ புண்ணியவதியே! அஜபாமந்திரமும்யோகப்பயிற்சியு முணர்த்துகின்றேன் அதனால் சித்துவனிதையாகிவேண்டியசித்திகளை யடைந்து கற்பாந்தரங்களிலும் நசியாத்தாலம்படைத்திருக்கலாமென, மைனாவதி சாகாமற் கற்பதேகல்வி செத்தால் பிறவாமலிருப்பதே காக்ஷியானாலும் சூக்ஷத்தில்மோக்ஷமார்க்கமுணர்த்தும் ஞானதேசிகளாகிய தேவரீரிருக்க யோகப்பயிற்சியைக் கற்றுக்கொண்டு பிராணனைக்கும்பித்து ஸ்தம்பித்துப் பிரத்தியக்ஷ எமவாதைக்குட்பட்டு ஸ்மரணைகெட்டுத் தறிபோலிருப்பதைப் பார்க்கிலும்

அடியாளவதே மேன்மையாதலாலும், எத்தனையுகங்களிற் காயத்தோடிருக்கினும் அநித்தியமேயாதலாலும் நித்தமுத்தியடையக்கூடாமையாலும் இந்த அசத்தியபிரபஞ்சம் மெய்யும் காயசித்தைக்குச் சமானமான பலசித்திகளும் அசுத்தர்களுக்கும் மகத்துவமானதாலும் அறுபத்துநான்கு சித்தியும் முத்தியைக் கொடுக்காததாலும் நாமசாதிகளைநீக்கும் மோக்ஷமார்க்கமே அனுக்கிரகம் புரியுமையாவென்று பணிய, ஜாலந்தரநாதர் ஓ புண்ணியவதியே! வேதத்தில் முறையிடும் மந்திரங்களையும் தந்திரங்களையும் பதங்களையும் இதங்களையும் நீக்கிவிட்டால் வேறுமெதுவைக்குபதேசிப்பேன்? இதற்குமேலானதெனக்குத்தெரியாது வேறே ஆசானைத்தேடென்றுரைத்து மௌனநாட்டத்தை யடைந்திருந்தார்.

கேட்டீர்கள் சித்தர்களே! என்று காயாஜிசித்தர் பின்னுஞ்சொல்லுவார்.

கேளுங்கள் சித்தர்களே! இந்தப்படி ஜாலந்தரநாதர் மௌனமுற்றிருக்க மைனாவதி அவரை இணைபிரியாமல் பலநாள்தொடர்ந்து ஓர்நாள் சோர்பிருந்து அவரைவணங்கி ஓ என்சற்குருநாதரே உம்மையன்றி வேறோராசானைச் சரணமடையேன். காரணம்யாதெனில் பதிவிரதையாயிற்றிறந்த உத்தமபத்தினி கணவனையன்றி மற்றைத்திருமூர்த்திகள் வந்தாலும் வணங்குவாளன்றி, இணங்குவாளா? நாடாள். அதுபோல, உத்தமி ஓராசானையடைந்து இவருக்குஞானமார்க்கந் தெரியவில்லை. யோக்கியருமல்லரென்று வேறுகுருவைத் தேடாள். தேடுவதினால் மோக்ஷலட்சுமியைக் கூடாள். தன்பதி என்ன துர்க்குணமுடையனானாலும் அவனை ஜெகதீஸ்வரனாகப் பாவிக்கும் விரதிவியல்லவோ மேன்மையையடைவாள். அவ்வுத்தமியன்றிமற்ற விபசாரமாதருக்கு இருணரகன்றி இகபரமுண்டோ? ஓ என்னையனே! முன்னாசகவரும் இராஜரீகஞ்செய்துவேதோபநிஷதங்களுணர்ந்திய திருச்சங்குமகாராஜன் தனக்காதிகுருவான வசிஷ்டரைவெறுத்து விசுவாமித்திரையடுத்துச் சண்டாளனாகித்தானாடியசொர்க்கத்துக்குஞ் செல்லாமல் இகலோகத்திலும் நில்லாமல் தலைகீழாயிருக்கும் அவர்திரிலோகத்தில் அமர்ந்திருப்பதானான். இச்சூதினை யறிந்த இன்னடியாள் நீரேஎனக்குகந்த ஆசாரியரென்று உமதடைக்கலம்புகுந்தேன் உம்மையன்றிவேறோர் கட்கடிமையாவேனோ? என்னையேன் பரிசோதிக்கின்றீர்? உமக்குத்தெரிந்திருக்கும் பிரமஞானத்தைப்போதித்து அஞ்ஞானத்தைச்சோதித்து மகதகங்காரங்களாலும்

படியாகவும் பிரம்மாநந்தவாரியில் மூழ்கும்படியாகவும் தேகஸ்மரணை
இறந்து திரியும்படியாகவும் கருணைபுரிந்து ஆட்கொள்ளுமையாவென்
றிரந்து கூறும் மைனாவதியை ஜாலந்தரநாதர் அன்புடன் பார்த்து
இன்பமிகுந்து ஓ வனிதா ரத்தினமே! உன்னைப்போலொத்த தீவி
ரவைராக்கிய முடையவர்களையே நான்தேடித்திரிகின்றேன். ஓ மைனா
வதி! உனக்கு வேதோபநிஷதமான பிரமோபதேசஞ் செய்கிறேன்.
ஏகமனதுடன் கேட்பாயாகவென்று அஸ்தமஸ்தக சையோகஞ்செய்
து பிரணவாதி மந்திரங்களும் மேன்மையாகியும் அசரீரிவாக்கியமா
கியும், பலசித்திகளை எளிதில் கொடுப்பதாகியும், நிர்க்குணத்தியான
த்திற்குகந்ததாகியும், அத்வைதமந்திரமாகியும், வேதமுடிவாகியும்,
தேகபீடைகளை எரிப்பதாகியும், மனோசஞ்சலங்களை அகற்றுவதாகி
யும், சதுர்வேதங்களுண்டாவதற்குக் காரணமாகியும், சமஸ்தகர்மங்
களையும், வெளிப்படுத்துவதாகியும், தானேபிரம்மமென்னுஞ் சந்தோ
ஷத்தை யளிப்பதாகியும், மூவரும் முனிவருஞ் சிந்திப்பதாகியும்,
அழியாப்பதவியை யளிப்பதாகியும், திரிபதார்த்தங்களால் பூர்த்தி
யடைந்ததாகியும், தன்னைமறக்கும் ஐக்கியபதத்தைக் காட்டுவதாகி
யும், சைவவைஷ்ணவாதி ஷண்மதங்களைவாட்டுவதாகியும், அஞ்ஞா
னசந்தேகவிபரீதங்களை நீக்குவதாகியும், மமதகங்காரங்களை அடியோ
டே போக்குவதாகியும், எல்லையற்ற அகண்டானந்தவாழ்வைத் தருவ
தாகியும், தியானித்தவர்களைச் சிரேஷ்டமான சம்பாஷணையிற் கொ
ண்டுவருவதாகியும் விளங்காநின்ற மகாவாக்கியத்தை உபதேசஞ்செய்
தருளினார்.

அப்பால் மைனாவதி தேசிகரின் திருத்தாட்டாமரைகளிற்றொ
ழுது ஓ என்னையனே இவ்வற்புதமான மகாவாக்கியத்தின் மர்மத்தை
விரித்துரைத்தாட் கொள்ளுமையாவென்று பணிய ஜாலந்தரநாதர்
நமக்குகந்த சிஷியை யிவளேயாகும். இப்பேர்ப்பட்ட அதிதீவிரவை
ராக்கியமுடையவளுக்கே அகத்தியஞ் சொல்லவேண்டுமென்று உன்
னி அம்மா மைனாவதி நீ மிகவும் புண்ணியவதியானதால் உனக்கிந்த
மகாவாக்கியார்த்தஞ் சொல்லத்தொடங்கினேன். ஏனெனில் பன்னிர
ண்டுவருஷம் பரிசோதித்தபின்பே பெரியோர்க ளிதன்மர்மம்வெளிப்
படுத்துவார்கள். பாறையின்மேல் விரைபோட்டாற்போல அபக்குவர்
க்குரைக்கில் அபலமாய்ப்போவதன்றி உரைப்பவர்க்காபாசமும் கேட்
பவர்க்கதோகதியும் பிராப்தியாகும். ஆதலால் நீ இதற்குகந்தவளென்
றுரைக்கச்சம்மதித்தேன். நீ செய்தபாக்கியமேபாக்கியம் ஏகமனதுட

ன்கேட்பாயாக மறப்பின்றி மனதிற்றரிப்பாயாக அதேதெனெனில் ஞான மே பிரம்மமென்னும் ஓர் மொழியின் அர்த்தமென்று இருக்குவேதம் முறையிடுகின்றது. வேதபுருஷனுல் நாலுவாக்கியங்களுக்குரை நாலு வேதங்களால் விரித்துரைத்தும் அதற்கர்த்தமாகாமல் தயக்கமுற் ருன். தேவர்களுக்குக்காரணகுருவானபிரகஸ்பதியென்பவரும் மற்ற ரிஷிகளும் ஞானகாண்டத்தில் தன்னுலானமட்டும் மகாவாக்கியார்த் தத்தை விரித்துரைத்துமுடிவுபெருமல் தியக்கமுற்ருர்கள். அப்பே ர்க்கொத்தவாக்கிய லக்ஷணத்தை என்னுலுரைக்கப்போமோ ஆயினு ம்எனதாசாரியார் அருள்சுரந்துரைக்க நான் பிரவணஞ்செய்தபடிவிரி த்துரைக்காமல் சங்கிரகமாய் புகல்கின்றேன். அதாவது, ஞானமென் பது ஆத்துமா; பிரம்மமென்பது பரமாத்துமா; பிரனசொரூபமேபிர ம்மமென்று சொல்லப்படுவதாகிய இதனர்த்தமென்றுரைக்க, மைனு வதி ஞானமென்பதெது பிரம்மமென்பதெது ஆத்துமாவே பரமாத் துமாவான தெவ்வண்ணம் விரித்துரையுமையாவென்றுகேட்க, ஜால ந்தரநாதர் அம்மா மைனுவதி! ஞானமென்பது விஷயங்களே யறியும் இந்திரியங்களையும் அறியும் அந்தக்கரணங்களையும் சிதாபாசனை யும் இதுகளெல்லாமொடுங்கும் அவித்தையையும் சாக்ஷியாயிரு ந்தறிவதெதுவோ அதையே ஞானமென்றும் இப்படியே சமஸ் தவஸ்துக்களிலு மிருந்தறியும் சர்வசாக்ஷியே பிரம்மமென்றும் வேத ம்முறையிடுகின்றது. அன்றிக்கூடஸ்தன் பிரத்தியேகஆத்துமாதிருக் குபோதம், சைதன்னியம், சித்து, ஆநந்தம், நித்யம், நிர்மலம், நிர்க் குணம், நிர்விகாரம், நிரஞ்சனம், என்கிற பலநாமங்களுக்குத்தாரக சாக்ஷியாகிய ஞானமேஆத்துமாவென்றும் பரப்பிரம்மம், பரிபூரணம், பராபரம், பரமேசுவரம், பரஞ்சோதி, பராபரம், நிரூபம், நிஷ்கர்மம், நிஷ்களங்கம், அகண்டம், அகண்டாகண்டம், அக்ஷயம், ஆதிஅனுதி யென்கிற பலநாமங்களுக்காதேயமாகி சர்வசாக்ஷியாகிய பிரம்மமே பரமாத்துமாவென்றும் ஈசுவரவாக்கிய மிருக்கின்றதென்று அருள, மைனுவதி ஓ சுவாமி ஓர் தேகத்திலிருக்குங் காக்ஷியாகிய ஆத்மா சர் வசாக்ஷியாகிய பரமாத்மா எப்படியாகுமென்று சங்கைசெய்ய ஜாலந் தரநாதர் திரி-தீவட்டியென்று நாமம்வேறுபட்டாலும் பிரகாசமொ ன்ருயிருப்பதுபோல் ஆத்மாபரமாத்மாவென்கிற நாமத்தால் வேறு படாமல் சுபாவமொன்ருகவேயிருக்கின்றது. எப்படியென்ருல் பெரி தாயிருப்பதால் ஏரியென்றும் சிறிதாயிருப்பதால் மடுவென்றும் பெரிதாயிருப்பதால் நதியென்றும் சிறிதாயிருப்பதால் ஓடையெ

ன்றும் பலமனிதர்களுக்குக்கூட்டமென்றும் ஒருமானிடனுக்குமனிதனென்றும் பலவிருக்ஷங்களுக்குத் தோப்பென்றும் ஓர் விருக்ஷத்துக்கு மரமென்றும் நாமம்விகாரப்பட்டதால் ஜல மனிதவிருக்ஷபார்வம் வேறுபடாம லேகீகபாவமாயிருப்பது போல அநேக சரீரங்களுக்கு நித்து சர்வசாக்ஷிபரமாத்மாவென்றும் உபாதிபேதத்தால் நாமம்வேறுபட்டதேயன்றி ஆத்மா பரமாத்மாக்களில் சற்றும்பேதமேயில்லை பரமாத்மா சர்வஜீவாத்மாவென்கிற வேதப்பிரமாணமு மிருப்பதன்றி ஆத்மபரமாத்மாவில்பேதப்படுத்தினவர் ரௌரவாதிநரகத்தையடைவாரென்று வியாசர்விஷ்ணுபுராணத்திலும் இவ்வியாசர்தந்தைக்குப் பாட்டனுன வசிஷ்டர் வாசிஷ்டத்திலும் வால்மீகர் அத்யாத்மீகராமாயணத்திலும் மகாவிஷ்ணு உத்தரகீதையிலும் ருத்திரன்சிவகீதையிலும் பிரமன் பிரமகீதையிலும் ஸ்ரீராமர் ராமகீதையிலும் திருவாய்மலர்ந் திருப்பதன்றிச் சுகப்பிரம்மரிஷிக்குநாரதரும் சனகஸநந்தாதியர்க்குச்சாம்பவனும் பரத்வாசருக்குவால்மீகரும் ஸ்ரீராமருக்கு வசிஷ்டரும் சுக்கிராசாரியருக்குப் பிருகுரிஷியும் பிரகலாதனன் அர்ச்சுனன் உத்தவராதியோர்க்குப் பகவானும் சுவேதகேதுவுக்கு உத்தாலகரும் இந்திரனுக்குப்பிரகஸ்பதியும் விதுரனுக்குமயித்திரேயரும் தருமருக்கு தூருவாசரும் மாயாவிக்கு சுக்கிராச்சாரியரும் அனுமானுக்குச்சீதையும் அகஸ்தியருக்குச் சுப்பிரமணியரும் புஜண்டருக்கு அம்பிகையும் சதாநந்தருக்குக் கௌதமரும் பகீரதனுக்குத் திரிதுவரும் தேவஹூதிக்குக் கபிலரும் போதித்திருக்கின்றார்கள்.

ஆதலால் மறந்தும் ஆத்மபரமாத்மாக்களில் பின்னபாவஞ்சொல்லக்கூடாதென்றுரைய மைஞவதி ஓ ஐயனே! ஆத்மாவேபரமாத்மாவானல் முத்தியடைவதெது பந்தத்திலிருப்பதெவர் ஆத்மாவுக்குகைவல்லியங்கொடுப்பவர் யார் மீளாக்கதிக்கு முயற்சிசெய்யுங் காரணமேன் சாதுக்கள் சேவையேன் புண்ணியத்தை யீட்டுவதேன் சாஸ்திரவிசாரணையேன் குருவிசுவாசம்யேன் ஈசுவரபக்தியேன் என்கிற பலசங்கைகட் கிடமாகின்றதே அறிவிலாருக்கு அன்பாகவனுக்கிரகம் புரியுமையாவென்று துதிக்க ஜாலந்தராநாதர் ஓ விவேக விஸ்தீரணமுடையஉத்தமியே முக்தியடைவது ஜீவனென்றுரைக்கத்தகும் அச்சிவனை நன்குயறிவுன்றிவிசாரிக்கில் சுத்தசூனியமாயிருக்கும் நிழலோடு போராடுவதுபோல் மதபேதகர் புரக்கரண அகக்கரணாதிகளின் கூட்டவிசேஷத்தால் நானென்றபிமானம் பூண்டிருக்கும் ஜீவத்தை சிறுபிள்ளைகள் விளையாட்டையில் இவனிராஜன் இவன் மந்திரி



யென்கிற பலவிதக்கோட்பாடுகளை சீர்படுத்திக்கொண்டு விவகரிப்பது போல இல்லாத ஜீவத்தை யேர்ப்படுத்தி அதன்மேல் பாரத்தைச் சுமத்தி அநித்தியமான மாயசம்சாரத்தில் மனப்பிரமைகொண்டு இல்லாததை யுண்டாக்கும் மாயாசம்பத்துக்குள்ளாகி ஜெனனமரண சாகரத்துக்குள் ளமிழ்ந்திருக்கிறார்கள். தான் சச்சிதாநந்த சொரூப மாகிய ஆத்மாவாயிருக்க மாயாந்தகாரத்தால் மறந்து தானல்லாத்தே காதிகளைத்தானென்று பிறமைப்புற்று நாடுநகர் பெண்டுபிள்ளைபண் டபதார்த்தங்களைச் சதமென்றும் சுகந்தருமிதமென்றும் நம்பிப்பிர த்தியக்ஷத்துக் கேதுவான இவைகளைநித்தியானந்தமாகப் பாவித் துத் "தன்னாலேதான்கெட்டால் அண்ணாவியென்செய்வா" னென்கிற பழமொழிப்படி க்ஷணபங்கமான காயத்தைக் காப்பாற்றிக் காந்தய ரைப்போற்றித் தானின்னவஸ்துவென் றறியாமல் தேகேந்திரியபாவ மடைவதே பந்தம். இவர்கட்குத் துக்கமயமானசரீரமே கற்பகால ங்கடந்தும் சொந்தமல்லாத வாக்கையைத் தானெனப் பிரமிப்பதே டீவதொந்தம் தூலசூட்சம காரணமென்னும் திரிசரீரத்தை யாரா ந்தறியாத மதிமந்தம், என் தேகம், என் கண், என் செவி, என் வாய், என் மனம், என் பிராணன், என் ஜீவனென்றுரைக்கும் நீவே ராயிருந்து சாக்ராவஸ்தையில் இந்திரியவியாபாரத்தையும் சொற்பன வஸ்தையில் மனோவியாபாரத்தையும் சுஷுப்தியவஸ்தையில் சுத்த சூன்யமா யிருக்கும் ஜீவத்தன்மையையும் சாக்ஷியாயறிந்துகொண்டி ருக்கும் உன்னைக்கரதலநெல்லிக்கனிபோலக் காட்டுங் காரணகுருவே மோக்ஷமளிக்கும். ஜெகதீஸ்வரனுரும் வைகுந்தமடைந்த ஜெயவிஜ யாளாதியோர்க்குப் பின்னும்ஜென்மம் வந்ததுபோல் தனக்குப்பிரத் தியக்ஷ நரகமானதனுவுண்டாகாமல் ஜாக்ரசுஷுப்திநிலையை யடைய முயற்சிப்பதேபரமாத்மா விலேக்கியப்படும் காரணமாகும். துர்க்கந்த மான விஷயாநந்த போகத்தில் மலத்தையாசித்தசிறுவண்டைப்போ லவும் பன்றியைப்போலவும் அமிழ்ந்து இடையூறுசெய்யும் எமனுக் கிரையாகும் சரீரவாஞ்சையையும் துக்கத்தைச் சுகமாகக்காட்டும் இந் திரியபோகத்தை மென்மேலும் வாஞ்சிக்கச்செய்யும் துர்ச்சங்கம்நீங் கிட இந்திரியநிக்கிரக வைராக்கியசீலராய்ச் சதாசமாதி நிஷ்டானுபூதி யால் அகண்டாநந்தத் திருப்தியடையச்செய்யும். சற்சங்க சகவாசஞ் செய்யவேண்டியதவசியமாகும். அனித்தியமானதேகத்தைக்காக்கும் புண்ணியத்தையளிக்கும் நித்தியமானபிரம்மபதத்தை அபேக்ஷித்து ஸ்ரீ ஹரிபரந்தாமனை அந்தியகாலத்தில் தெரிசித்து மறுஜெனனத்

தில் சிறுத்தொண்டனாய்ப் பிறந்து கார்த்திகேயரால்பிரமஞானமுப
தேசிக்கப்பெற்றுபுண்ணியபதவிகளைத்தெரிசித்து விதேககைவல்யத்
தை யடைந்த கர்ணனைப்போல தர்மத்தைப்பெருக்குவதே உத்தமர்
துதிக்கும் முக்திக்கு வழியாகும்; மூடசிரோமணிகளாகிய சிலர்
காரியக்குருக்கள் போதிக்கும்பாதோ ஓர் நிலையில் மனதைநிறுத்தி
ஏதையோ ஒன்றைத்தியானித்துமற்றொருவர்மற்றோர்மார்க்கத்தைச்
சிரேஷ்டமாய்ப்பேச அதில்வாஞ்சைகொண்டு முன்னம் அனுஷ்டித்
ததைவெறுத்துச் சஞ்சலமடையச் செய்யும் அவிவேக ஞானத்திற்
புகாமல் மனோதிடத்தையும் சமபாவனையையும் சந்தோஷத்தையும்
சாந்தத்தையும் ஏகத்தியானத்தையும் நிச்சலசித்தத்தையும்அனுபவ
ஞானத்தையும் கிரியாவஸ்தைகளின் மர்மத்தையும் மனோவுற்பத்தி
நாசத்தையும் பவபந்தம்வந்த சம்பந்தத்தையும் உபயசாஸ்திரமான
கர்மகாண்டத்தையும் நானீயென்னும் அகம்பாவத்தையும் மாற்றும்
ஞானசாஸ்திர விசாரணையை அகத்தியஞ்செய்ய வேண்டும். மரண
பவமென்னும் காலநேமியிற்சுழன்றலுத்துத்துன்பம்வலுத்துமோகா
ந்தகார கூபத்திலமிழ்ந்து நன்குதீதறியாப் பசுவைப்போலாகிப் பசு
வென்றபேரையே யடைந்து மென்மேலுமுழலாமல் ஊனக்கண்களை
மறைத்து ஞானக் கண்களைத்திறந்து அநேகஜென்மங்களுக்கு வித்
தான சஞ்சிதகர்மத்தைப் பஞ்சுமூட்டையில் தீப்பற்றியதுபோலெ
ரித்துத் ததாகாரமாயிருந்து சதாகாலமும் ஆநந்தமயமா யிருக்கச்செ
ய்யும் ஆசிரியர்மேல் விசுவாசம் அகத்திய மிருக்கவேண்டும். அபமிரி
த்யுவாதிகளைநீக்கி அதோகதிக்காளாக்கும் கொடியமனதைப் போக்
கிப் பூரணஞானியாகாமல் மரித்த உத்தமருக்கு மறுஜென்மத்திற்
றெளிவளித்து அப்பாபிரகலாதனா! அனிப்பிறவாவரங் கேளென்
றுரைத்ததுபோ லுரைத்துச் சங்கடமானகாலத்தில் பிரசன்னமாய்
தந்து களிப்படையும்படியான வரங்களைத்தந்து காத்துரக்ஷிக்கும்
இஷ்டதேவதைமேல் பூரணபக்தியு மிருக்கவேண்டும் என்று மைனா
வதிகேட்ட ஒன்பது சந்தேகத்திற்கும் பிரதியுத்தரமருளி இனிநீ
தேகாதிகளை நிவர்த்திசெய்து ஆத்மாவாகி ஆத்மாவே பரமாத்மா
வென நம்பி ஆநந்தமடையலா மென்றுரைய, மைனாவதி ஆத்மாவே
பரமாத்மாவென்றறிந்ததனால் ஆனந்தசொரூபமாயிருக்க வேறு ஆன
ந்தத்தைத் தேடுவான் ஏனென, மைனாவதி நான் ஆனந்தசொரூபமெ
ப்படியாவேன்? ஆனந்தமா யிருப்பவனுக்கு இந்த துக்கமிருக்குமோ
வென ஜாலந்தரநாதர் உனதெதார்த்தசொரூபத்தை இன்னம் நீ யறி

யாமல் அஞ்ஞானமயமாகவே யிருப்பதால் ஆனந்தமயமாக வில்லை யென, மைத்ருவதி தேகேந்திரிய கரணபிராண ஜீவனிருளை யறியும் ஆத்மாவே நானென்றறிந்துகொண்டும் ஆநந்த ரூபமயமாகவில்லையே யென, ஜாலந்தரநாதர் தேகாதிகள் தானல்ல ஆத்மாவேதானென்றறிந்தபடி ஆத்மசொரூபமா யிருந்தாலல்லவோ ஆநந்தரூப மாவாயென்றார்.

அதற்கு மைத்ருவதி ஆத்மசொரூபமாவதெப்படி? அதற்குச்சாதன மென்ன? திருவாய்மலர்ந்தருளுமையாவென, ஜாலந்தரநாதர் தேகாதிகள் தானல்லவென்று நியதிசெய்தவண்ணம் தேகாயாசங்களுக்கும் இந்திரிய கரணங்களும் மனோவாக்கியங்களுக்கும் இடங்கொடுக்காமல் நிக்கிரகஞ்செய்து ஆத்மாவேதானாகி விஷயாதிபோகங்களை யடக்குங்கோனாகி மானாபிமானங்களைக் கடந்து மோனமுத்திரையை யடைந்து சங்கல்பவிகல்பந்துக்குட் படாமல் நிர்விகற்பசமாதியை விடாமல் இருப்பதே பிரம்மானுசந்தானமென, மைத்ருவதி பகிர்முக திருஷ்டிநீங்கி அந்தர்முகதிருஷ்டியோங்கி நிச்சலனமாயிருப்பதால் அகண்டானந்தத்தை யனுபவிக்கக்கூடுமோவென, ஜாலந்தரநாதர் சுஷுப்தி நிலையையடைவதே ஆநந்தமென, மைத்ருவதி நியதிசெய்து சூனியமாக்கிச்சாட்சிசொரூபமாகி அசையாச் சித்திரம்போலிருந்தும் ஆநந்தரூபமாக வில்லையேயென, ஜாலந்தரநாதர் கருவிகரணாதிகளொழிந்த சுஷுப்தி எவ்விதமாயிருக்கிறதென மைத்ருவதி ஆநந்தமாயிருக்கிறதென, ஜாலந்தரநாதர் என்னகாரணத்தால் ஆநந்தமாயிருந்ததென, மைத்ருவதி பிரபஞ்சவியாபாரமும் மனோவிகல்ப மில்லாமையால் ஆநந்தமாயிருந்ததென, ஜாலந்தரநாதர் சுகதுக்கங்கள் மனதிலிருப்பதாலும், மனம் சுஷுப்தியவஸ்தையில் மறைந்தாலும் வேறு கருவிகளில்லாமல் எல்லாம் சூனியமாகி ஆத்மா ஒன்றுமாத்திரமிருந்தால் ஆநந்தமாயிருந்து அந்த ஆநந்தமே ஆத்மசொரூபமென மைத்ருவதி இந்த சாக்கிராவஸ்தையில் ஆநந்தமாயிருப்பதெப்படியென, ஜாலந்தரநாதர் அகங்கார மமகாரங்களெப்போதும் துக்கமயமேயாகும்; ஆத்மாவெப்போதும் ஆநந்தமயமேயாகும். இதுதெரியாமல் தேகாதிகளின் பீடையை ஆத்மாவின்மேலேற்றுகிறாயென, மைத்ருவதி தேகேந்திரியாதிகளின் துன்பங்களால் ஆத்மாவுந்தம்மை படுகிறதேயென, ஜாலந்தரநாதர் மரணபரியந்தம் தேகாதிகளுக்குச்சுக துக்கம் வந்துகொண்டே யிருக்கும்; ஆத்மானுபவமுடையவனுக்கு அச்சுகதுக்கங்கள்சொப்பனகாட்சிபோலத்தோன்றியுந்தோன்றாமலு

மிருக்கும். இப்படித்தோன்றுவதும் அப்பாகிக்கல்லாமல் ஆரூடனுக் கொன்றுந்தோன்று. ஆநந்தமாகவே யிருப்பானென, மைனுவதி இப்படி ஆநந்தமயமாயிருப்பவன்றானே மோக்ஷபாக்கியம்பெறுவன் மற்றவர்களடையக்கூடாதோவென, ஜாலந்தரநாதர் பிரம்ம,வித்து, பிரம்மவான், பிரம்மவரியன், பிரம்மவரிஷ்டன் என்கிற நால்வரும் மோட்சமடைபவர்களே யானாலும், தானின்னதேசத்திலிருக்கிறதும், தானின்னானென்பதும், மலஜெலவிஸர்ச்சனையாவதும், சடுரங்களின் சுவையும் அறியாப்பிரம்மவரிஷ்டனே பிரம்மாநந்தவாரியில் மூழ்கித் தன்னைமறந்து ஜீவன்முத்தி தன்மையைக்கரதலக்கனிபோல அடைந்தவன். அவ்வரிஷ்டபதத்தையே நீயடைந்து ஆநந்தானுபோகம் பெறக்கடவாயென, மைனுவதி ஜீவனிருக்கும்போதேமோக்ஷமடையக்கூடுமாவென,ஜாலந்தரநாதர் மோட்சமென்பதினர்த்தம் மோசனமென்பது பந்தவிமோசனமாம். பந்தமே நரகபந்தநிவர்த்தியே மோட்சம். துக்கமேநகரம். பிரம்மாநந்தமே மோட்சமன்றி மோட்சசாதனம் யெங்குமில்லை ஆதலால் துக்கமயமான வியாபாரங்களொழிந்து சதா ஆநந்தமயமாயிருப்பா யப்பாவென, மைனுவதிஅடியாள் பேரின்பவாரியில் மூழ்கி ஜீவன்முக்தியடைய எத்தனைநாள்செல்லுமோ தேவரீரது பரிபூரணகிருபை எப்போதுவருமோவென்று அசைவற்று நிற்க, ஜாலந்தரநாதர் அம்மா இம்மையில் நிகரில்லாத பிரம்மஞான த்திற்சிறந்த பாக்கியவதியே! நீஇன்றுடன் தேகாபிமானத்தைத்தவிர்த்து வலுபொருந்திய இச்சையைத் தடுத்து குக்ஷிபாதையின் பொருட்டுக் கிடைத்ததைப்புசித்து உன்னையடுத்தவர்க் காத்மானுபவத்தை யுபதேசித்து மனேவெண்ணங்களைப்போக்கி மானுபிமானங்களை உருமாய்ந்திடச்செய்து ஆத்மசொருபமாகி பரமாத்மாவிலேக்கியமாகி பரிபூரணமாகி பரமாநந்தபரவசமாகி மோனசமாதி நிஷ்டையை யடைந்திருக்கக் கடவாயென்று பூரணகிருபாநோக்க வனுக்கிரகம்புரிந்து ஆநந்தமிகுதியால் தன்னைமறந்து சமாதிநிஷ்டையில் அசைவற்றிருந்தார். மைனுவதி ஆசானதுபரிபூரணகடாக்ஷம்பெற்று பிரமானந்தநிஷ்டையில் பசுமரத்தாணிபோலத்தன்னைமறந்து தலைவனிற்கலந்து பேய்பிடித்தவள்போல பரமானந்தத்திற் சொக்கிக்கொண்டிருந்தாள்.

கேட்டீர்களோ சித்தர்களேயென்று பின்னும் நாபாஜிசித்தர் சொல்லத்தொடங்கினர்.



அப்பால் உபதேசம்பெற்று இடைவிடாமல் அவர்சேவைக்கு தினமும் போவதும் வருவதுமாயிருப்பதைத் தாதிகளறிந்து மைனாவதியின் மூத்தமருமகளிடத்திற்சொல்ல' அவளும் நேரில்பார்க்கவேணுமென்று பதுங்கிக் கொண்டிருந்து உண்மையாகவே தன்மாமி அரண்மனையைவிட்டு நடுராத்திரியில் நூலேணிவழியாயிறங்கிச் சென்று பெரியவரைக்கண்டு பேசிவந்ததைத் தன்கண்ணாரப்பார்த்து என்னயோசிக்கத் தொடங்கினாளென்றால், நமது மாமிக்கு இத்தனைநாளாயில்லாத துர்ப்புத்தி இப்போ துண்டாயிருக்கிறது. ராஜபத்தினி கணவனிறந்து அமங்கலியா யிருந்தபோதிலும் அன்னிய புருஷன் கண்ணுக்குப்புலப்படாமல் அந்தப்புரத்திலேதானே யிருக்கவேண்டும்? இப்படிக்கிருப்பதுக்ஷத்திரியதருமம்; அதையகற்றி இப்படி தினமும் அரண்மனையைவிட்டு அன்னிய புருடனிடஞ்சென்று அவனோக்கூடிக்கலந்து அன்னியரறியாமல் அரண்மனைக்கு வந்துசேர்ந்து ஒன்றுமறியாத பத்தினிபோல நடிக்கின்றாளே! இப்படிப்பட்ட விபசாரமுண்டை இன்னுங்கொடிய காரியங்களைச்செய்வதற்கு அஞ்சுவாளா? அஞ்சமாட்டாளே. இப்படிப்பட்டமுண்டையால் உலகம்பழிக்கப்போகிறதே! மகன் ஊரையாளும் அரசனாயிருக்க இவள் விபசாரத்தொழில் செய்துகொண்டிருந்தால் உலகம் சிரிக்காதா! அதனால்அரசனுக்கு அவமானமும்தலையிறக்கமு முண்டாகாதா? இவள் பிறந்தவீட்டிற்கும் புகுந்தவீட்டிற்கும் வசையுண்டாகச் செய்கின்றாளே இதற் கென்னசெய்கிறதென்று விசனப்பட்டுக்கொண் டிருந்தாள்.

இவ்வண்ணம் அரசன்மனைவி தன்மாமியினது கற்பின்திறத்தையும் நன்னடக்கைகளையும் அறியாமல் ஜாலந்தரநாதரது மகிமையையும் உணராமல் அவரைச்சோரநாயகனாகவும், மாமியைவிபசாரியாகவும் பாவித்துத் தன்முறைக்கு அரசன்வந்தவுடன் இந்தவிபசார சங்கதியைச் சொல்லுவோமென்று எதிர்பார்த்திருந்தாள். சிலநாளில் மூத்தமனைவியினிடத் திருக்கவேண்டிய முறைநாள் வந்தது; அந்நாளில் அரசன்சென்று மனைவியெதிர்கொண்டு வாராததால் சந்தேகங்கொண்டு இதென்னவிபரீதமோ இன்றுநமது மனைவியெதிர்கொண்டுவந்து மரியாதைசெய்து நம்மை அழைத்துப்போகாத காரியம் தெரியவில்லையே யென்று நினைத்துக்கொண்டே மனைவியிருக்குமிடஞ்சேர்ந்து ஓ பெண்ணே! இத்தனைநாளும் எதிர்கொண்டழைத்துவரும் நீ இன்றுவராதகாரணம்யாது? உனக்கென்னகோபம்?

யென்றுவினவிய மன்னனுக்குத் தாதிகளால் ஆசனமளித்திருக்கச் செய்து தானேசோரம்போனவள்போல அரசனைக்காண நாணமுடையவளாகித் திரைக்குள்ளேதானே இருந்தாள். இப்படிக்கிவள் நாணமுற்றிருப்பதற்குக் காரணம்யாதெனில், ஜீவன்முக்தரும் புனிதரும் மகானுபாவரும் ஆகியபெரியோர்மீதும் கற்பினிற்சிறந்த உத்தமகுணவதியாகிய மாமியின்மீதும் அபாண்டஞ்சொல்ல முயன்றதே காரணமாம். பின்பு அரசன் ஓ மாதே! அன்னியர் இங்கொருவருமில்லையே நீ யேன் என்முன்வராமல் திரைக்குள்ளேயே யிருக்கிறாய்? சீக்கிரம்திரையைவிட்டு வெளியில்வாவென்றான். இம்மொழியைக்கேட்ட பட்டத்தரசி திரைக்குள் ளிருந்து கொண்டே அருமையிலும் பெருமையிலும் பத்தியிலுஞ் சித்தியிலுஞ் தன்னிகரில்லாத பிராணநாயகரே! இத்தனைநாளும் தங்களிடம்சாதாரணமாகவந்து பேசிக்களித்திருக்கும் அடியாளுக்கு இன்று தங்கள்முன்னம் வருவதற்கு நாணமாயிருக்கின்றது. இப்படியெனக்கு நாணமுண்டாவதற்கு விசேஷமொன்றுளது; அதுயாதெனில், உனது அன்னையால் நமதுகுலத்திற்கு இழி சொல்லும் உலகப்பழிப்புமுண்டாகப்போகின்றது. அதெவ்வண்ணமெனில், நடுராத்திரியில் உன்னன்னை எழுந்திருந்து நூலேணியின்வழியாகயிறங்கி ஊருக்குவெளியிலிருக்கும் வேஷதாரியிடத்திற்குச்சென்று அவனைக்கூடிக்கலந்து மறுபடியும் அரண்மனைக்கு வந்து ஒன்று மறியாதவளைப்போல படுத்துக்கொள்கிறாள். இந்தப்படியாகதினமும் அவனிடம் போவதும்வருவதுமே தொழிலாகவிருக்கிறாள். "பலநாள்திருடன் ஒருநாளைக்ககப்பட்டுக்கொள்வா" னென்பதுபோலஇதைத்தாதிகள் ஒருநாள்கண்டு யென்னிடஞ்சொன்னார்கள் அதையான்நம்பாமல் நானேஒருநாள் அங்குசென்றுபதுங்கிக்கொண்டிருந்து என்கண்ணாரப் பார்த்தேன். அந்நாள்முதல் இந்நாள்வரைக்கும் என்மனது சங்கடமாகவே யிருக்கின்றது. இந்தவிசேஷத்தைத் தங்களெதிரில்வந்து சொல்லிக்கொள்ள நாணமடைந்திருந்தேனே யன்றி மற்றொன்று மல்லவென்றும், மேலும் இதைப்பொய்யென் றெண்ணவேண்டாம்; நேரில் உமக்கு ருஜுவாகும்படி காட்டுகிறேன். வந்துபாருமென்றதன்பத்தினியின் மொழிக்கு அரசனிணங்கி நடுராத்திரியானபின்பு மனைவியுடன்சென்று தன் அன்னை வசிக்கும் உப்பரிகையின்மீதேறி அங்கொரு உன்னதஸ்தானத்திலிருந்துகொண்டு ஓ மாதரசே! என்தாயார் விபசாரம்போவதை ரூபிக்கிறேனென்று சொன்னையே அதையென்கண்முன் காட்டக்கடவை

யென்ன, அதற்கரசி மன்னனைநோக்கி அதோ பார்த்தீரா நமது நகரத்திற்கு வெளியில் வடபாரிசத்தில் வெளிச்சம் தோன்றுகிறதே அதுதான் கெட்டமதியினையுடைய துஷ்டன்வசிக்கு மிடம். அங்குவெளிச்சமேதெனில், அந்தயோகிகெஞ்சாபிடிப்பதற்கும் தேகத்தில்பூசிக்கொள்ளுஞ்சாம்பலுக்காகவும் அல்லும்பகலும் கட்டைகளைப்போட்டுக்கொளுத்திக்கொண்டேயிருப்பான். அந்தவெளிச்சந்தான்காணப்படுகின்றது. குடிக்கக்கஞ்சிக்கும் கட்டக்கந்தைக்கும் கெதியில்லாமல் பிச்சையெடுக்கும் பரதேசிப்பயல்மீது உனதன்னைநேசம்வைத்து விகாரங்கொண்டு திரிகிறாய். இப்படி காமவிகாரமேமலிட்டு நமக்கபகீர்த்தியுண்டாகச்செய்யும் அந்தவிபசாரியைக் கொஞ்சநேரத்தில் காட்டுகிறேன் பொறுத்துக்கொண்டிருமென்றுசொல்லி; அம்மாது தூண்டில்போட்டவன் சடையின்மேல் இமைகொட்டாமல் கட்பார்வை வைத்திருந்தாள். ஒரு டாலடித்தது; அதுயாதெனில், மனோவதியின் வடிவழகின் ஒளியேயாம். அந்த ஒளியைக்கண்ட அரசி அதோபாரும் உனதன்னையையென்ன, அரசன்பார்த்துகாடாந்தகாரமான இருட்டினாலும் நெடுந்தூரத்தினாலும் அன்னையென்ற நிச்சயம் தோன்றாமல் நம்பிக்கையற்று உப்பரிக்கையை விட்டிறங்கிக் குதிரைலாயத்திற்குவிரைந்து சென்று கால்கயிற்றைத் தரித்துவிட்டு உச்சிமயிரைப்பிடித்துக் குதிரையின்மீதேறிக்கொண்டுசென்று மறைவாக ஓர் சோலையில்பதுங்கிக்கொண்டிருந்தான். இதற்குள் மனோவதி ஆசானிடத்தில் நல்லவிஷயத்தில் சிலகேள்விகளைக்கேட்டுணர்ந்து விடைபெற்று அரண்மனையைநோக்கி நடந்து நூலேணியின் வழியாக ஏறி உப்பரிகையையடைந்ததை அரசன்பார்த்து கடுங்கோபங்கொண்டு வேகமாகக்குதிரையைத் துரத்திக்கொண்டுவந்து லாயத்தில் குதிரையைக் கட்டிவிட்டுத் தன்பட்டத்தரசியின் அந்தப்புரத்தையடைந்து இதற்கென்னசெய்கிறதென்று மௌனமாக இருந்தேவிசனையாயிருந்தான்.

இவ்வண்ணம் அரசன் மௌனமாக யோசனையில் அன்றிரவெல்லாம் நித்திரையற்றிருந்து விடியற்காலமானவுடன் அந்தப்புரத்தைவிட்டெழுந்துநானமுறைமையனுசரித்து நடந்து காலைக்கடனை முடித்துக் கொலுக்கூடத்திற்கு வந்து சிங்காதனத்தின் மீதிருக்கக்கண்டமந்திரிகள் இதேது அரசன் நெடுநாளாய்க் கொலுக்கூடத்திற்கு வாராதவனின்றுவந்து சிங்காதனத்தின்மேல்வீற்றிருக்கின்றான். இதையோசிக்கையில் மெத்த ஆச்சரியமாயிருக்கின்றதென்று ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டேவந்து அரசனைவணங்கித் தாங்கள்தங்கள் ஆசனங்

களின் மீதிருந்தார்கள். இப்படிக்கிருக்க, அரசன்மந்திரிகளை நோக்கி ஓ மதியிற்சிறந்த அமைச்சர்களே! உலகத்தில் தடாகங்களில் விர்த்தி யடையும் தாமரைமலரிலுள்ள மதுரத்தை வெகுதூரத்திலுள்ள காட்டிலிருந்து வண்டுகள் வந்துண்டு மகிழ்வடைந்து போவதுபோல, தூரதேசத்திலுள்ள சிலமனிதர்கள் வந்து நமது நகரத்துக்கருகில் தங்கியிருக்கும் பெரியோராகிய ஜாலந்தர நாதரைப்பணிந்து உபதேசம்பெற்றுப் புனிதராய்ப் போகின்றார்கள். அதேதாமரைத் தடாகத்திலிருக்கும் தவளைகளானது மலரிலுள்ள மதுரத்தையுண்ண வகையறியாமல் மேல்விழுந்து புரண்டும் யாதொருபயனையும் அடையாமல் அருகில்தானேயிருப்பதுபோல இப்பெரியோருடைய மகிமையையும் பெருமையையும் அறிந்து இவரிடத்தில் உபதேசம்பெறாமல் வீண்காலம் போக்கிக்கொண்டு பதிதர்களாக இருக்கின்றோம் இப்படிக் கிருப்பது நமது பூர்வ கர்மமல்லவா? மேலும்,

"நல்லோரைக்காண்பதுவும் நன்றேநலமிக்க
நல்லோர்சொற்கேட்பதுவும் நன்றே—நல்லோர்
குணங்களுரைப்பதுவும் நன்றேயவரோ
டிணங்கியிருப்பதுவும் நன்று."

என்னும் முதியோர்வாக்கியத்தின்படி நாமேதேடியலைந்து தெரிசித்துப்புனிதராக வேண்டியதா யிருக்கத் தாமே இங்கெழுந்தருள நாமெத்தனை புண்ணியஞ் செய்தோமோ? இப்பெரியோர் எளிதில் கிடைத்திருந்தும் நாமிவரைச் சேவிக்காமலும், இவரது நன்மொழியைக்கேளாமலும், இவரிடத்தில் நலமான உத்தமகுணங்களைத்தெரிந்து கொள்ளாமலும், இவருக்கு நாமிணங்கி வணங்கி நடவாமலும் அதர்மிகளானோம். மேற்சொன்ன வெண்பாவைப்போல நாம்முக்கியமாய் இப்பெரியோரைத்தெரிசிக்கவேண்டியதொன்று; இவரது நயமானசொல்லை அவஸ்யம் கேட்கவேண்டியதிரண்டு; இவர் உரைக்கும் குணமானவஸ்துவை யநுஷ்டிக்கவேண்டியது மூன்று; இவரைக்கிட்டி நெருங்கி இணங்கிவணங்கிப் பூசிப்பது நான்கு; இந்நான்கையும் பெறுவதைப்பார்க்கிலும் இவரது அருளுகத்தைஅவஸ்யம்பெற்றுப் புனிதர்களாயிருப்பதுதான் மேலாகிய மானிடஜென்மமெடுத்ததற்குப்பலன். இப்படியடையாதவன் மானிடனா யிருந்தபோதிலும் இரண்டுகாலுள்ள பசுவுக்குச்சமமாவான். ஆகையால் ஓ மந்திரிகளே! நீங்கள்சகலபரிவாரத்துடன் முத்துச்சிவிகையும் எடுப்பித்துக் கொண்டுபோய் அப்பெரியோரைக்கண்டு வணங்கி உப

யென்ன, அதற்கரசி மன்னனைநோக்கி அதோபார்த்தீராநமது நகரத்திற்கு வெளியில் வடபாரிசத்தில் வெளிச்சம் தோன்றுகிறதே அதுதான் கெட்டமதியினையுடைய துஷ்டன்வசிக்கு மிடம். அங்குவெளிச்சமேதெனில், அந்தபைராகிகெஞ்சாபிடிப்பதற்கும் தேகததில்பூசிக்கொள்ளும்சாம்பலுக்காகவும் அல்லும்பகலும் கட்டைகளைப்போட்டுக்கொளுத்திக்கொண்டேயிருப்பான். அந்தவெளிச்சந்தான்காணப்படுகின்றது. குடிக்கக்கஞ்சிக்கும் கட்டகந்தைக்கும் கெதியில்லாமல் பிச்சையெடுக்கும் பரதேசிப்பயல்மீது உனதன்னைநேசம்வைத்து விகாரங்கொண்டு திரிகிறாள். இப்படி காமவிகாரமேலிட்டு நமக்கபகீர்த்தியுண்டாகச்செய்யும் அந்தவிபசாரியைக் கொஞ்சநேரத்தில் காட்டுகிறேன் பொறுத்துக்கொண்டிருமென்றுசொல்லி; அம்மாது தூண்டில்போட்டவன் சடையின்மேல் இமைகொட்டாமல் கட்பார்வை வைத்திருந்தாள். ஒரு டாலடித்தது; அதுயாதெனில், மைனுவதியின் வடிவழகின் ஒளியேயாம். அந்த ஒளியைக்கண்ட அரசி அதோபாரும் உனதன்னையையென்ன, அரசன்பார்த்துகாடாந்தகாரமான இருட்டிலும் நெடுந்தூரத்திலும் அன்னையென்ற நிச்சயம் தோன்றாமல் நமபிக்கையற்று உப்பரிக்கையை விட்டிறங்கிக் குதிரைலாயத்திற்குவிரைந்து சென்று கால்கயிற்றைத் தரித்துவிட்டு உச்சிமயிரைப்பிடித்துக் குதிரையின்மீதேறிக்கொண்டுசென்று மறைவாக ஓர் சோலையில்பதுங்கிக்கொண்டிருந்தான். இதற்குள் மைனுவதி ஆசானிடத்தில் நல்லவிஷயத்தில் சிலகேள்விகளைக்கேட்டுணர்ந்து விடைபெற்று அரண்மனையைநோக்கி நடந்து நூலேணியின் வழியாக ஏறி உப்பரிகையையடைந்ததை அரசன்பார்த்து கடுங்கோபங்கொண்டு வேகமாகக்குதிரையைத் துரத்திக்கொண்டுவந்து லாயத்தில் குதிரையைக் கட்டிவிட்டுத் தன்பட்டத்தரசியின் அந்தப்புரத்தையடைந்து இதற்கென்னசெய்கிறதென்று மௌனமாக இதுவேசிந்தையாயிருந்தான்.

இவ்வண்ணம் அரசன் மௌனமாக யோசனையில் அன்றிரவெல்லாம் நித்திரையற்றிருந்து விடியற்காலமானவுடன் அந்தப்புரத்தைவிட்டெழுந்துநாணமுடையவனாகி நடந்து காலைக்கடனை முடித்துக் கொலுக்கூடத்திற்கு வந்து சிங்காதனத்தின் மீதிருக்கக்கண்டமந்திரிகள் இதேது அரசன் நெடுநாளாய்க் கொலுக்கூடத்திற்கு வாரதவன் இன்றுவந்து சிங்காதனத்தின்மேல்வீற்றிருக்கின்றான். இதையோசிக்கையில் மெத்த ஆச்சரியமா யிருக்கின்றதென்று ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டேவந்து அரசனைவணங்கித் தங்கள்தங்கள் ஆசனங்

களின் மீதிருந்தார்கள். இப்படிக்கிருக்க, அரசன்மந்திரிகளை நோக்கி ஓ மதியிற்சிறந்த அமைச்சர்களே! உலகத்தில் தடாகங்களில் விர்த்தி யடையும் தாமரைமலரிலுள்ள மதுரத்தை வெகுதூரத்திலுள்ள காட்டிலிருந்து வண்டுகள் வந்துண்டு மகிழ்வடைந்து போவதுபோல, தூரதேசத்திலுள்ள சிலமனிதர்கள் வந்து நமது நகரத்துக்கருகில் தங்கியிருக்கும் பெரியோராகிய ஜாலந்தர நாதரைப்பணிந்து உபதேசம்பெற்றுப் புனிதராய்ப் போகின்றார்கள். அதேதாமரைத் தடாகத்திலிருக்கும் தவளைகளானது மலரிலுள்ள மதுரத்தையுண்ண வகையறியாமல் மேல்விழுந்து புரண்டும் யாதொருபயனையும் அடையாமல் அருகில்தானேயிருப்பதுபோல இப்பெரியோருடைய மகிமையையும் பெருமையையும் அறிந்து இவரிடத்தில் உபதேசம்பெறாமல் வீண்காலம் போக்கிக்கொண்டு பதிதர்களாக இருக்கின்றோம் இப்படிக் கிருப்பது நமது பூர்வ கர்மமல்லவா? மேலும்,

"நல்லோரைக்காண்பதுவும் நன்றேநலமிக்க
நல்லோர்சொற்கேட்பதுவும் நன்றே—நல்லோர்
குணங்களுரைப்பதுவும் நன்றேயவரோ
டிணங்கியிருப்பதுவும் நன்று."

என்னும் முதியோர்வாக்கியத்தின்படி நாமேதேடியலைந்து தெரிசித்துப்புனிதராக வேண்டியதா யிருக்கத் தாமே இங்கெழுந்தருள நாமெத்தனை புண்ணியஞ் செய்தோமோ? இப்பெரியோர் எளிதில் கிடைத்திருந்தும் நாமிவரைச் சேவிக்காமலும், இவரது நன்மொழியைக்கேளாமலும், இவரிடத்தில் நலமான உத்தமகுணங்களைத்தெரிந்து கொள்ளாமலும், இவருக்கு நாமிணங்கி வணங்கி நடவாமலும் அதர்மிகளானோம். மேற்சொன்ன வெண்பாவைப்போல நாம்முக்கியமாய் இப்பெரியோரைத்தெரிசிக்கவேண்டியதொன்று; இவரது நயமானசொல்லை அவஸ்யம் கேட்கவேண்டியதிரண்டு; இவர் உரைக்கும் குணமானவஸ்துவை யநுஷ்டிக்கவேண்டியது மூன்று; இவரைக்கிட்டி நெருங்கி இணங்கிவணங்கிப் பூசிப்பது நான்கு; இந்நான்கையும் பெறுவதைப்பார்க்கிலும் இவரது அருளைகத்தைஅவஸ்யம்பெற்றுப் புனிதர்களாயிருப்பதுதான் மேலாகிய மானிடஜென்மமெடுத்ததற்குப்பலன். இப்படியடையாதவன் மானிடனாயிருந்தபோதிலும் இரண்டுகாலுள்ள பசுவுக்குச்சமமாவான். ஆகையால் ஓ மந்திரிகளே! நீங்கள்சகலபரிவாரத்துடன் முத்துச்சிவிகையும் எடுப்பித்துக் கொண்டுபோய் அப்பெரியோரைக்கண்டு வணங்கி உப

சாரவசனங்கள்பேசி முத்துச் சிவிகையின்மீது அப்பெரியோரை ஏற்றிக்கொண்டு மங்களவாத்தியங்கள் முழங்கக் கொலுக்கூடத்திற்குவந்து சேருங்களென்று ஆக்கினைசெய்து அரசன் அந்தப்புரத்திற்குப்போயினான். மந்திரிகள் அரசன் கட்டளைப்படி சகல பரிவாரங்களுஞ் சூழநடந்துசென்று அப்பெரியோராகிய ஜாலந்தரநாதரைக்கண்டு வணங்கி உபசாரவார்த்தைகளைப்பேசி ஓ சுவாமி! இந்நகரத்தையாளும் கோபிசந்தமகாராசன் தேவரீரை யழைத்துவரும்படியாகச் சொன்னார். தாங்கள் தயவுசெய்து இச்சிவிகையின்மீதேறிக்கொண்டு வாருமென்று சொன்னமந்திரிகளின் நயவசனங்களைக்கேட்டு ஜாலந்தரநாதர்மிகவும் சந்தோஷத்துடன் சொல்லுகின்றார்.

கேளுங்கள் மந்திரிகளே! கல்வியிலும் நீதிநெறியிலுஞ்சிறந்தவுங்களுக்குத் தெரியாததொன்றுண்டோ? சகலமுந்தெரிந்த அறிவாளிகளாகியவுங்களுக்குயானென்னசொல்லப்போகிறேன். ஆகிலும் "துறவிக்குவேந்தன் துரும்பு" என்னும் வாக்கியத்தின்படி சகலத்தையுந்துறந்து சந்நியாசியாகிப் பிச்சையெடுத்துப் புசிக்கும் ஏழையாகிய என்னையொரு பொருளாகவெண்ணி யழைத்துவரச் சொன்னதுயான்செய்த புண்ணியபலனே யிருந்தபோதிலும், செல்வத்திலும் சிறப்பிலும் கீர்த்தியிலும் மேன்மைபெற்ற அரசன் துரும்புக்குச்சமானமாவான். ஆகையால் அரசனால் எனக்கொருகாரியமும் வேண்டியதில்லை. யான் அரசனுக்குயாதொருகாரியமுஞ்செய்யமுடியாத ஏழைபரதேசியா யிருந்தபோதிலும், ஸ்வாதிகாரியானவன் ஸ்வாதிகாரியானையால் நான்ராஜசபைக்கு வரமாட்டேன். இதுசங்கதியை உங்களரசனுக்குப்போய்ச்சொல்லுங்களென்ற ஜாலந்தரநாதரைநோக்கி மந்திரிகள் சொல்லுகின்றார்கள்.

எங்களை யாண்டருள கிருபாநோக்கம்வைத்து இங்கெழுந்தருளிய குருநாதரே! தங்கள் திருவடிபட்ட இந்நகரமானது பவித்திரமடைந்தது. தங்கள்சேவையால் யாங்களனைவரும் பாவனமடைந்தோம். இனியெங்களுக்கு யாதொருகுறையுமில்லை. சுத்தசாந்தமூர்த்தியாகிய ஸ்ரீராமசந்திரமூர்த்திக்கு நிகரான எங்களரசனே! தாங்கள் அரசன்சபைக்கு வரமாட்டேனென்று சொல்வது நியாயமோ? செங்கோலுக்குமீறிய சங்கீதமும் உலகத்திலுண்டோ? இதையோசித்து மறுவார்த்தையொன்றுஞ் சொல்லாமல் மௌனமாக எங்கள் பின்னெழுந்து வாருஞ்சுவாமி யென்றார்கள். திரிகாலமுமறிய வல்லவரா

கிய அம்மகாத்துமாவானவர் அரசனால் தனக்குநேரிடப்போகிற சங்கடத்தையோசித்து உப்பானது தன்ரூபத்தைமாற்றி அன்னியர்களுக்கு உபயோகப்படுவதைப்போல, நல்லோர்கள் தங்கள்சொரூபத்தை மறைத்தாகிலும் இதராளைப்புனிதர்களாகச் செய்யவேண்டுமென்று தருமசாஸ்திரம் முறையிடுவதால், நாம் அரசனால் சிலகாலம் மறைந்திருந்தேனும் அரசனை ஜீவன்முத்தனாகச் செய்வோமென்றெண்ணி அந்த சந்நியாசியானவர் உடனேயெழுந்திருந்து சிவிகையின்மீதூர்ந்திருந்தார். இதைக்கண்டமந்திரிகள் கூலியாளர்களால் சிவிகையை யெடுப்பித்துக்கொண்டு சகலாடம்பரத்துடன் நடந்துகொலுக்கூடத்திற்குச் சிவிகையுடன் கொண்டுபோனார்கள். இதுசங்கதியை அரசன் வேவுகாரர்களாலறிந்து கபடமனத்துடன் எதிர்கொண்டு அப்பெரியோருக்கு வந்தனஞ்செய்து அழைத்துக்கொண்டுபோய்ச் சோடசோபசாரங்களுஞ்செய்து தகுந்த ஆசனத்திலிருத்திக்கைகட்டி வாய்பொத்தி ஓ சுவாமி! தாங்களிந்நகரத்தில் வசிப்பது எங்கள் முன்னோர்கள்செய்த தவப்பலனோ அல்லது யான்செய்தபூர்வபுண்ணியபலனோ அன்றி இந்நகரஞ்செய்த புண்ணியந்தானேயோ யான்யாதொன்றுமறியேன். என்னுடைய பாக்கியமேபாக்கியம். எவர்க்குண்டிந்த சிலாக்கியம் என்று கொண்டாடி ஆனந்தமடைந்தவனைப்போல வஞ்சகமாக நடித்துச்சொல்லுகின்றான்.

ஓ சுவாமி! தாங்கள் மூன்றுநாளைக்கிங்கே தங்கி புசிப்பெடுத்துக்கொள்ளவேண்டியது. தங்களைப்போலொத்த பெரியோர்கள் குக்ஷியில் இத்தனை அன்னம் விழுந்தால் நாங்கள் குடும்பசமேதமாய் ஜென்மசாபல்லிய மடைவதற்குத் தடையேயிராது; ஆகையால் தயவுசெய்து இங்களிக்கும் பிரசாதத்தைப்புசித்துத் திருப்தியடையும்படிக்கோருகிறேன் என்று உண்மையாகப் பிரியத்துடன் சொல்பவனைப்போல வெளிப்படையாகப்பேசி எவ்விதத்திலாவது இவனைக் கொன்றுவிடவேண்டுமென்று மனதுளெண்ணிப் பலவிதபதார்த்தங்களுடன் பிரசாதம் சீக்கிரம் தயார்செய்யும்படி அந்தப்புரத்திற்குத் தாதிகளால் தெரிவித்து லாகிரிவஸ்துக்களை வரவழைத்துக் கெஞ்சா அபினி இவ்விரண்டையும் சாராயத்தில்கலந்து மிதமின்றிக்கொடுக்க அதை ஜாலந்தரநாதரும் வேண்டாமென்று சொல்லாமல் பெரும்பாலும்அளவுக்கதிகமாகக்குடித்தும்அச்சாராயத்தினால்அணுவளவேனும் லாகிரியில்லாமல் சாதாரணமாயிருக்கும் பெரியோரைப்பார்த்து அரசன் ஆச்சரியப்பட்டு இவனென்ன எள்ளளவேனும்

உடம்பைமறக்கவேயில்லை. இதையோசிக்கையில் பூராக்குடியனாகக் காணப்படுகிறான். நம்போலியர்கள் ஒருகுவளை சாராயம் குடித்தால் ஐந்து நிமிஷத்துக்கெல்லாம் உடம்புமறந்து வாயில் ஈபுகுவதுந்தெரியாமல் பிரேதம்போலக் கிடப்போம். இவனோபீப்பாய்கணக்காய்குடித்தும் சளையவில்லையேயென்று யோசித்து இந்தவேளைபோகட்டும். சாயந்திரம் இவனுக்குத் தக்கமுயற்சிசெய்யலாமென்று மனதில்நினைத்துப் பெரியோரை அழைத்துக்கொண்டு அந்தப்புரத்திற்குப் போய் இருவரும்புசித்து அங்கோரிடத்தில் படுக்கைதயார்செய்து அவரைப் படுத்துக்கொள்ளும்படிசொல்லித் தானும்போய் படுத்து நித்திரைசெய்து எழுந்துவந்து பெரியவருடன் நயவஞ்சகமாகச்சில வார்த்தைகளைப் பேசிக்கொண்டிருந்து ஓ சுவாமி! இதோவருகிறேனென்றுசொல்லி அந்தப்புரத்திற்குப்போய் வீசைகணக்காகப் பாஷாணம்தருவித்துப் பாகஞ் செய்பவளை யழைத்து இதைப்பொடிசெய்து அன்னங்கறியமுது முதலானதுகளிலுங் கலந்து வேறே எடுத்து வையென்று சொல்லிக் காலையில் வரவழைத்ததைப்போல சாராயத்தைத்தருவித்து கெஞ்சா அபினி ஊமத்தன்விதை இம்மூன்றையும் சாராயத்திற்கலந்துபெரியோருக்குக்கொடுத்தான். அதையும் அவர்வாங்கிக்குடித்து லாகிரியின்றிச்சளையாமலிருந்தார். இரவுவந்தவுடனே பெரியோருடன் அந்தப்புரத்திற்குச் சென்று தாதியையழைத்துப் பாகஞ்செய்பு மவர்கள் தனியே எடுத்துவைத்திருக்கும் அன்னம் கறிவகைகளை எடுத்துவரச் சொல்லி ஆனமட்டும் தன்கையினால் பரிமாறினான். அதையும் அப்பெரியோர் கபடற்றவரைப்போலப் புசித்துத் திருப்தியடைந்து படுத்து நித்திரை செய்பவரைப்போலக் குறட்டை விட்டுக்கொண்டிருந்தார். இதை அரசன்கண்டு லாகிரியும் பிராணபயமுமின்றிச் சுகமாயிருப்பதற்கு வியந்து இதேது இவனிதிலுஞ்சாகவில்லை இவனைக்கொல்லாமல் விடுவோமாகில் நமதன்னை இவனிடம் போக்கு வருத்துமாகவே இருப்பாள். அதைக் குடிகளறிந்தால் கேவலமாகப் பேசுவார்கள். அதனால் நமக்கு அவமானம் நேரிடும் இதற்கென்ன செய்கிறதென்று யோசித்து மனக்கிலேசத்தினால் இரவுமுழுதும் நித்திரையின்றிப் படுக்கையிற் பொருந்தாமல் புரண்டுகொண்டிருந்து விடியற்காலமானதே எழுந்திருந்து வேவுகாரர்களையனுப்பி பாம்புப் பிடாரர்களை யழைத்துவரும்படி கட்டளையிட்டான். அந்தப்படியே வேவுகாரர்கள்சென்று பாம்புப்பிடாரனையழைத்துவந்து அரசன்கொலுமுன்னம் விட்டார்கள்.

பிடாரர்கள் அரசனை வணங்கிநிற்க அரசன் சிங்காதனத்தைவிட்டிற ங்கிப் பாம்புப்பிடாரர்களை ஏகாந்தமா யழைத்துக்கொண்டுபோய் த னியேயிருத்தி அவர்களை நோக்கிச்சொல்லுகின்றான். அடாபாம்புப் பிடாரர்களே! நல்லஜாதி நாகங்களாகிய கரியநாகன் செர்நாகங்க ளென்னுங் கொடியசர்ப்பங்களின்விஷம் ஒரு ஆழாக்குவேண்டும். அதை இப்போதே சீக்கிரங்கொண்டுவந்து கொடுப்பீர்களாகில் உங்களுக் குத்தக்கவெகுமதிசெய்கிறேன். காலதாமதஞ்செய்யாமல் விரைவில் கொண்டுவந்து கொடுக்காவிடில் அவசியம் நீங்கள் தண்டனைக்குட்ப டுவீர்கள். இதில் சிறிதும் பிசகில்லை யென்று ஆக்கியாபித்தான். அவர்கள் அரசன்கட்டளையைச் சிரமேற்கொண்டு எங்களை இர க்ஷிக்கும் ஏந்தலே! இதோ ஒரு நிமைக்குள்ளாக கொடிய சர்ப்பங்க ளின் விஷத்தைக்கொண்டுவந்து கொடுக்கிறோம். ஏழைகளின்மேற் சினங்கொள்ளாம லிருக்கும்படி கோருகிறோமென்றுசொல்லி விடை பெற்றுச் சென்று காளகூட விஷத்திற்கு நிகரான கொடியசர்ப்பங்க ளின் கடைப்பல்லிலிருந்து உழக்குவிஷத்தை யெடுத்து ஓர் பாத்தி ரத்தில் வைத்துக்கொண்டுவந்து அரசனிடத்தில்கொடுக்க, அதைப் பெற்றுக்கொண்ட அரசன் வெகு சந்தோஷமடைந்து அவர்களுக்கு த்தக்கபடி வெகுமதிகொடுத்தனுப்பிவிட்டு விஷபாத்திரத்தை எடுத் துக்கொண்டு அந்தப்புரஞ்சேர்ந்து பாகஞ்செய்பவளை யழைத்து நீ பெரியவருக்கென்று தனியாகச்செய்யும் அன்னத்திலுங் கறியமுதுக ளிலும் இந்தஅமிர்தத்தைக்கலந்து வையென்றுசொல்லிப் பெரியவ ரிடத்திற்குவந்து கபடு வஞ்சனை சூது பொய் முதலானதுகளுந் தெ ரியாத உத்தமனைப்போல நல்ல வசனங்களைப் பேசிக்கொண்டிருந் தான். ஜாலந்தரநாதரும் அரசன்செய்யும் கபடவஞ்சனைகளை யறியா தவர்போலத்தாமும் நடித்துக்கொண்டு அரசனது மொழிகளுக்குச் சரிசரியென்று தலையை அசைத்துக்கொண்டிருந்தார்.

இவர்களிருவரும் இப்படிக்கிருக்கிறபோது அந்தப்புரத்திலிரு ந்து தாதியானவள் வந்து பாகஞ்செய்தாச்சுதென்று சொல்ல அரசன் பெரியோரை அழைத்துக்கொண்டு அந்தப்புரத்திற்குப்போய்த் தனி யாக உட்காரவைத்துத் தன்கையினாலேயே அன்னம் கறிவகைகள்யா வும் பரிமாறப்பெரியோர் புசித்துத்திருப்தியடைந்து ஏப்பம் விட் டார். இதைக்கண்ட அரசன் ஆச்சரியப்பட்டுப் பிடாரர்கள் கொண்டு வந்துகொடுத்தது சர்ப்பங்களின்விஷமல்லவென்றுசந்தேகித்துப் பெ ரியவருக்கிட்டு மிகுந்த அன்னத்தில் கொஞ்சமெடுத்து அங்கிருந்த

பூனைக்குமுன்னம்வைத்தான். அதைப்புசித்த பூனையானது கால்களை யுதறிக்கொண்டு உடனே இறந்துபோய்விட்டது. இதைக்கண்ட அரசன் வியந்து இதிலும் இவன் சாகவில்லையே யின்னெதனாலிவன் சாவானே தெரியவில்லையே என்று யோசனைசெய்துகொண்டிருந்தான். அப்போது ஜாலந்தரநாதர் இவனென்ன சுத்தமூடனாயிருக்கிறான் நேற்றையதினம் சாராயத்தில் கெஞ்சா அபினியைச்சேர்த்துக்கொடுத்து நம்மைக்கொல்லவெண்ணினான். அதனாலும்நமக்கு மரணம்நேரிடவில்லை. மறுபடியுஞ்சாயந்திரமூமத்தன்விதைகளை அரைத்துச் சாராயத்திற்கலந்துகொடுத்தான். அதினாலும்நமதுபிராணன் போகவில்லை. இப்போதுகொடியநஞ்சை அன்னபானாதிகளிற்கலந்துப்பரிமாறினான். இதனாலும் நமதுஉயிர்பிரியவில்லை. இந்தமூன்றுவிதத்திலும் பிரியாதவிப்பிராணனானது இன்னமேதனால் தேகவியோகமாகப்போகிறது என்றுசிறிதும்யோசிக்கவில்லையே. இதுக்காரணத்தினாலேதானமது மகிமையைத்தெரிந்துகொள்ளாத ஞானசூனியனாகவிருக்கிறான். இவனுடைய அற்பமதியையென்னென்று சொல்லுகிறது? இவன் இன்னும் என்னென்னசெய்கிறானோ பார்ப்போமென்று மூன்றுகாலத்தில் வருங்காலத்தைக்கருதித்தெரிந்துகொண்டு ஒன்றுந்தெரியாத ஜடனைப்போலிருந்தார். அதற்குப்பின் அரசன் செய்வதொன்று மறியாமல் கவலைப்பட்டுக்கொண்டிருந்தான். இந்தப்படிமூன்றுநாளில் இரண்டிரவும் மூன்றுபகலும் கடந்துவிட்டது.

மூன்றாநாளிரவில் அரசன் சில வேலைக்காரரை யிருக்கச்சொல்லி பெரியவருக்கு அன்னமிட்டுத் தானும் புசித்து ஒன்றும் அறியாதவனைப்போலப் பெரியவருடன் பேசிக்கொண்டே நித்திரைபோயினான். மகாத்துமாவை யெவ்விதத்திலாவது கொல்லவேண்டுமென்ற கவலை மிகவுங்கொண்டவனானதால், நடுராத்திரியில் திடுக்கிட்டெழுந்து பெரியோரைப்பார்த்துக் காணாததால் அரண்மனைமுழுதுந் தேடிக்கொண்டேவந்து யோகசாதனத்தால் பத்மாசனத்துடன் கிளம்பி அந்தரமாக மோட்டுவடும்பில் முட்டிக்கொண்டிருப்பதைக்கண்டு பிரமித்து இதுவென்ன ஆச்சரியம்? நாம் ஜென்மமெடுத்தது முதல் இதுபரியந்தம் இவ்வண்ணமாயிருந்த மனிதனை நாம் கண்டதில்லையே. முன்னம் அஷ்டமாசித்திகளிலுந் தேர்ந்த சித்தனென்று ஜெயமடைந்த நாம் இந்த அற்பயோகசாதனஞ்செய்யு மிவனைக் கொல்வது நமக்கோர் அருமையோவென்று தன் குருசுவாமியாகிய கடுத்திமாமுனிவரை மனதில் துதித்துத் தானும் பூமியைவிட்டுக்கிள

ம்பி மோட்டுவெடும்பில் முட்டிக்கொண்டிருக்கும் பெரியவரைப்பிடித்துப் பூமிக்கிழுத்துவந்தும் எழுந்திராமல்பத்மாசனத்துடன் உட்கார்ந்தபடியேயிருக்கும பெரியவரைப் பலவாறு தூஷித்து அங்கு நித்திரைசெய்யும் வேவுகாரரை யெழுப்பி நீங்கள் யாதொன்றுக்கும் யோசிக்காமல் இந்தக்கிழவனைத் தூக்கிக்கொண்டுபோய் நமது அரண்மனை யந்தப்புரத்திலிருக்கும் முப்பத்திரண்டடித் துரவில்போட்டுவிட்டு வாருங்களென்று கட்டளையிட்டான். வேவுகாரர்களும் அரசன்சொற்படி மகாமகிமைபொருந்திய ஜாலந்தரநாதரைத் தூக்கிக்கொண்டுபோய் அந்தப்புரத்திலிருக்கும் துரவில் தொப்புபென்று போட்டுவிட்டுவந்து நடத்திய உண்மையைச் சொன்னார்கள்.

இதைக்கேட்ட அரசன் தன்னைமறந்து ஆநந்தமடைந்து அவர்களுக்குப்பலவித வெகுமதிகளளித்து அடாவேவுக்காரர்களே! இந்த சங்கதி நீங்களும் நானும் அறிந்ததாகவே யிருக்கவேண்டும். அன்னியர்கள் யாரேனும் பேசக்கேட்பேனேயாகில் உங்கள் சிரசைக்கண்டிப்பாய் வாங்கிவிடும்படிச்செய்வேன். இது தவறாது. ஆகையால், ஜாககிரதையாய் ஒருவருக்குந் தெரிவிக்காமல் உங்கள் மனதிலேயே வைத்திருங்கள். நாக்கைத்தாண்டினால் நகரெங்கும்பரவும். உதட்டைத்தாண்டினால் ஊரெங்கும் பரவும் என்றதையோசித்து வார்த்தைகள் முகாந்திரத்தில் மறந்தாகிலுஞ் சொல்லப்போகிறீர்கள். பத்திரம் பத்திரமா யிருங்களென்று சொல்லியனுப்பினான். வேவுகாரர்களும் அரசனது கட்டளைக்குப்பயந்து வெளிப்படுத்தாம லிருந்தார்கள்.

பின்பு அரசன் கண்களுக்கு நித்திரைபிடித்துத் துயின்று விடியற்காலையிலெழுந்து காலைக்கடனை முடித்துக்கொண்டு கொல்லத்துக்காரர்களை வரவழைத்துக்கொண்டுபோய் அந்தப்புரத்தி லிருக்கும் முப்பத்திரண்டடி துரவைக்காட்டி இத்துரவுக்குமேல் ஒருபாறையைமூடி அப்பாறை யசையாதிருக்கும்படி சுண்ணாம்பு பூசுங்களென்று ஆக்கியாபித்தான். அந்தப்படியே கொல்லத்துவேலைக்காரர்கள் பெரும்பாறையைத் துரவின்மேல்மூடிச் சுண்ணாம்பைப்பூசி விட்டுப் போயினார்கள். அந்தமகாத்துமாவான ஜாலந்தரநாதர் உயிருடனிருந்தால் தன்தாயார் அவரிடத்திற்குப் போக்குவருத்தாயிருப்பாள். அதையுலகத்தார் அறிந்தால் பழிப்புக்கிடமாமென்று யோசித்து அவரைத்தூக்கிக் கிணற்றிற் போட்டுவிட்டான். அக்கிணற்றிற்குமேல் பாறையைப்போட்டுச் சுண்ணாம்புக்கட்டடங் கட்டவேண்டிய காரணம் யாதெனில், அப்பெரியோர் யோகசாதனஞ் செய்யப்பட்டவரா

கையால் கிணற்றினின்றுங்கிளம்பி வெளிப்பட்டுப்போவாரென்றும், அன்றி அவரைக்கிணற்றிற் போட்ட படியால் மரித்துப்போவா ரேயாகில் பிரேதம் தண்ணீருக்குள்ளிருந்து வெளிப்பட்டுமிதக்கும். அதைக்கண்டவர்கள் வெளிப்படுத்து வார்களென்றும் இவ்விரண்டு காரணத்தையும் யோசித்து அரசன்பாறையைப்போட்டுச் சுண்ணு ம்பினுல் கட்டடங்கட்டி யாதொன்றும் தெரியாதவனைப்போல நூறு வனிதைகளுடன் கூடிக்குலாவி சுகித்திருந்தான்.

இவன் இவ்வண்ணமிருக்க, கிணற்றில் வேவுகாரர்களால்போட ப்பட்ட மகாத்துமாவாகிய ஜாலந்தரநாதர் நடக்கப்போகிற காரியம் இன்னதென்று முன்னமே தெரிந்தவராதலால், கிணற்றில் லகுவாய் விழுந்து ஜலத்திற்குள்சென்று மணற்பாங்காகிய அடிவாரத்தில்பத் மாசனத்துடன் உட்கார்ந்து யோகஞ்செய்துகொண்டிருந்தார். ஜலத் தில் எப்படியிருந்தாரென்றால், இவர் கிணற்றிற்குள் விழுவதற்கு முன் கெங்காதேவியானவள் பயந்து நடுநடுங்கி இப்படிப்பட்ட பர மாத்மாவுக்கே ஆபத்து நேரிடுமாகில் நம்போலொத்தவர்க்கு நேரிடு வதோ ரருமையோ? இவரதுமகிமையைக்கண்டறியாமலும் இவரை வணங்கி உபதேசம்பெறுமலும் இவரால் நற்கெதியடையாமலும் மகாபாவியாகிய அரசன் இவரை நம்மால் சாகும்படி இத்துரவில் போட்டான். இம்மகானுபாவர் ஜீவன்முக்தராச்சுதே! இவருக்குளவ ற்றலுஞ் சாவுகிடையாது. பகவானைப்போல நித்தியரா யிருக்கும் பரிசுத்த ஆத்துமா யிவரென்றுமதித்து ஜலம் அவர்மேற் படாமல் இடைவெளிவிட்டுக் குடையைப்போல நின்றுளாகையால் இம்மகா த்துமா தன்னிவாசபூமியைப்போல மகித்து ஆநந்தமா யிருந்தார்.

இவரிந்தப்படி கிணற்றிற்குள் சுகமாயிருக்க, மைனுவதி ரஜ ஸ்வலையாகி மூன்றுநாளும் ஆசானைக்காணுமலிருந்தாள். நான்காவது நாள் ஸ்நானஞ்செய்து உப்பரிகையின்மீ துலாவிக்கொண் டிருந்தா ள். அப்போது வனிதைகள் நூறுபேர்களுஞ் சூழ்ந்திருக்க சில தாதிகள் எண்ணெய்தேய்க்க அரைவஸ்திரத்துடன் இருக்கும் தன் குமாரனது தேகசௌந்தரியத்தைக்கண்டு ஐயோ பத்தரைமாற்றுத் தங்கத்திற்கு நிகரான திருமேனியை கேவலமும் அற்பமுமாகிய மங்கையர் மாய்கைக்குள்ளாகி துர்க்கந்தத்திற்கு ஆசித்துவீண்காலம் போக்கி அந்தியத்தில் எமதூதர்கள் வசப்பட்டு அவர்கள்செய்யுங் கொடிய தண்டனைகளை யனுபவித்து முடிவில் நாயோ பேயோ குதி ரையோ கழுதையோ மற்றெந்தஜென்மம்வந்து லபிக்குமோ? இப்படி

எத்தனை ஜென்மமெடுத்தாலும் இம்மானிட ஜென்மத்துக்கு நிகராகுமோ? இந்த மானிடஜென்மமிருக்கிறபோதே ஆசானையடுத்து உபதேசம்பெற்று இறப்பிறப்பென்பதை யொழித்து நிரந்தரம் இவ்வுலகத்திலன்னியர் கண்களுக்குப் புலப்படாமல் ஜீவன்முக்தனு யிருப்பதல்லவோ மானிடஜென்மமெடுத்ததற்கு அழகு? இப்படிப்பட்ட மேன்மையான அருளுடன் உலாவும் மார்க்கத்தைவிட்டு இவன்விஷையவாஞ்சைக்குட்பட்டுப் பாழாகிறுனே என்று புதல்வனை எட்டிப்பார்த்தபடியே துக்கப் படுகிறபோது மைனாவதியின் நேத்திரத்திலிருந்து கண்ணீர்வடிய அதிலோர் துளிஜலம் கீழேஎண்ணெ யிட்டுக்கொண்டிருந்த குமாரன் துடைமேல்விழுந்து கீழ்ப்புறமாகவழுகிப்போய்விட்டது.

அப்போது அரசன் துடையில் குளவிகொட்டியதைப்போல பாதையுண்டாகத் திடீரென்றெழுந்து வந்து முற்றத்திலிருந்தபடி உப்பரிகையை நோக்கினன். அங்கு தன்தாயாரிருக்கக்கண்டு இதென்ன ஆச்சரியமா யிருக்கிறது? அன்னையழுகிற கண்ணீர் தொடையின்பேரில்பட்டுப் பின்புறத்திலொழுகிப்போயிற்றே. இதற்குள் என்பிராணன் துடித்து வேசாறியதே. இத்தன்மையாகியமகிமைபொருந்திய நமதன்னைக்கு நாமென்னகுற்றம் செய்தோம்? யாதுகுறைசெய்தோம்? கிணற்றிற்போட்ட சந்நியாசியுடன் இவள் கூடிக்கலந்ததாக நமதுமனைவி சொல்லக்கேட்டோமேயல்லது இவள்விபசார முற்றவளா அல்லதுகற்புடையவள்தானுஎன்பதை நன்றாய்ப்பரிக்ஷைசெய்து பாராமல் அப்பெரியோருக்குக் கெடுதியைச்செய்ததுமல்லாமல் இப்புண்ணிய வதியையும் விபசாரியென்று பலவிதமாக தூஷித்தேன். நமதன்னையின் வாக்குமூலத்தை விசாரித்தறியவேண்டுமென்று அன்னையை நோக்கி ஓ அம்மணீ! நீ அழவேண்டியகாரணமென்ன? உன்னையாரென்ன சொன்னுர்கள்? உன்மனதிலிருக்கும்குறைதானென்ன? அதை ஒளிக்காமல் சொல்லுமம்மாவென்ன, அதற்கு மைனாவதி அப்பாமகனே!எனக்குயாதொருவிஷயத்திலும்குறையேயில்லை. ஆகிலும் உன்விஷயத்தில் மெத்தவுங் கவலையுண்டாகி துக்கப்படுகின்றேன். அதேதெனெனில், மிகவும் துர்க்கந்தமும் பாபங்களுக்கு ஆதாரமுமாகிய பெண்களின்மாய்கைக்குள் உனக்குண்டாகிய சொர்னதேகத்தைஉபயோகப்படுத்தி வீண்காலம்போக்கி என்று சொல்லிக் கொண்டிருக்கையில், அரசன் ஓ அம்மணி இப்போது யான்தலையில் எண்ணெயிட்டுக்கொண்டிருப்பதால் நல்லவார்த்தை பேசுவது தகாது,

நான் ஸ்நானஞ்செய்து வந்தபின்பு தெரிவிக்கிறேன். அப்போது சாவகாசமாகவந்து என்விஷயத்திலுனக் குண்டாகிய பரிதாபவார்த்தை தகளையெல்லாம்சொல்லி அதற்குமேல் யான்நடக்கவேண்டியஉத்தமகாரியங்களையுந் தெரியப்படுத்தி யான் கிருதார்த்தனாகவேண்டியதற்குத் தக்கமுயற்சிசெய்யும் அம்மாவென்றுசொல்லி அரசன்ஸ்நானஞ்செய்வதற்குப் போயினான். பின்பு மைநாவதி தன்குமாரன் செல்வச்செருக்கினால் இகழ்ச்சியாகப்பேசி கோபிக்காமல் தனக்கிணங்கி நயந்து பேசியதற்கு மிகவும் சந்தோஷித்துக்கொண்டு அன்றுபகலைப்போக்கி இரவுநடுராத்திரியிலெழுந்து நூலேணியின்வழியாக இறங்கிச் சென்று சாலந்தரநாதரைப்பார்க்க ஆசாலோகாறாமல்தாபந்திரிப்பட்டு மூன்றுநாளாய் காம்பராததால் ஆசாலோகனிடம் இன்னதென்றுதெரிந்துகொள்ளக் கூடியதாயில்லையே. இனியெப்போது என் குருநாதனைக் காண்பேன்? என் பிராணநாதன் இறந்தகவலையைப்போக்கி சந்துஷ்டியுடனிருக்கும்படி உபதேசித்து அவ்வநுஷ்டான பலத்தால் சகலத்திலும வெறுப்பையுண்டாக்கி இவர் திருவடித்தாமரைகளிலேயே நீங்காமல் மனம் பொருந்தும்படி யருள்புரிந்த எனது குருவினக்கைத் தெரிசிக்காத ஒரு நாளொருயுகமாகத் தோன்றுகின்றதே. இவர் தெரிசனங் கிடைக்காதபடியால் முன்னம் நாயகன்மீதுண்டாகிய கவலையைப்பார்க்கிலும் என்மனத்தில கவலையுண்டாகியதே. இதற்குயானென்னசெய்வேனென்று உலைவாய் மெழுகைப்போல உருகியழுது வாடிவதங்கும்படி அரண்மனைசேர்ந்து நித்திரைபிடியாமல் அன்றிரவெல்லாம் படுக்கையில் புரண்டு கொண்டு கண்ணீருங் கம்பலையுமாயிருந்தாள்.

இவ்வண்ணமாக மகிமையிற்சிறந்த மைநாவதி குருநாதனைக்காணாமல் வருந்திக்கொண்டிருக்க குமாரனாகிய கோபிசந்தமகாராஜன் தாதியொருத்தியையழைத்து நீசென்று எனதன்னையை அழைத்து வரக்கடவாயென்று அனுப்பப் பாங்கியானவள் அந்தப்படியேசென்று மைநாவதியைக்கண்டு வணங்கி ஓ அம்மணீ ! தங்கள் புதல்வராகிய மகாராஜன் உம்மை அழைத்துவரும்படி சொன்னார். தாங்கள் தயவுசெய்து எழுந்துவாருமம்மா வென்னக்கேட்டு மைநாவதி உடனே எழுந்திருந்து நடந்து அந்தப்புரத்திற்குச்சென்று ஓரிடத்தில் திரைக்குள்ளிருந்து புதல்வனைநோக்கி அப்பா புத்திரசிகாமணியே ! சகலசாஸ்திரபுராணங்களிலுந்தேர்ந்து மகாநீதிவழுவாது அரசுபுரியும் புத்திசாதுரியங்களிற்சிறந்த உத்தமனாகிய உனக்குப்பின்புத்தியும் பேதைமைக்குணமுமுடையயான் என்னசொல்லப்போகிறேன்.

"சுடர்விளக்காயினும் நன்றாய்விளங்கிடத் தூண்டுகோலொன்று வேண்டும்" என்றவாக்கியத்தின்படி நற்குணங்கள்யாவும் பொருந்தின உத்தமனாயிருந்தபோதிலும் ஆசானையடுத்து அவரால் "தொட்டுக் காட்டாதவித்தை சுட்டுப்போட்டாலும் வரா" தென்பதுபோல உபதேசிக்கப்பெற்று அவர்சொல்லும் வழியாய் நடந்தால் காரியசித்தியாகிச் சுகம்பெறலாம். அப்படிச்செய்யாமல் நாமெத்தனை சாஸ்திர புராணங்களை வாசித்தவர்களாயிருந்தபோதிலும் தன்கடையே ஞானோதயமாவது மிகவும் அருமையாதலால் நீ ஆசானிடத்தில் உபதேசம்பெற்றுப் புனிதனாகும் வழியைத்தேடிக் கொள்ளுமப்பாவென்ன, அதற்கு கோபிசந்தனமகாராஜன் ஓ அன்னையே! நீ சொல்லியதெல்லாம்சரி. நானெந்த ஆசானைத்தேடியடுத்துப்பணிவது? என்னைப் புனிதனாகச்செய்யவல்ல மகானுபாவர் யாவரோ? அவரை இன்னாரென்று நான் தெரிந்துகொள்ளும்படித் தெரிவிப்பையேயாகில் அப்படிப்பட்ட மகாத்துமாவை யான் தேடிக்கண்டுபணிந்து உன்னிஷ்டப்படி உபதேசம் பெற்று ஜென்மசாபல்யமடைகிறேன் என்றகுமாரனைநோக்கி என்னருமைக் கண்மணியே! நமது நகரத்திற்கு வெளியில் வடபாரிசத்தில் ஓர் சோலையில் வாசஞ்செய்து கொண்டிருந்தனது ஞானதேசிகர் எங்கோ போயிருக்கிறார். அவர் வந்தவுடன் உன்னை அங்கேயழைத்துக்கொண்டுபோய்த் தன்னியனாகச் செய்யும்படி அவர் திருவடியில் விழுந்து வேண்டிக்கொள்ளுகிறேன். அதுபரியந்தம் பொறுத்திருப்பாயாக வென்றுசொல்லி அந்தப்புரத்தைவிட்டுநடந்து தன்னுப்பரிகைக்குவந்துசேர்ந்து ஆசான்மீதிலேயே சிந்தைவைத்திருந்தாள். மைனவதி இவ்வாறு ஆசானிருந்ததிசையிலேயே கண்ணேக்கம்வைத்துப்பலநாளும்பார்த்துக்கொண்டிருக்கிறபோது ஒருநாளிரவில் அங்கு வெளிச்சந்தோன்றினதால் ஆசானே வந்திருக்கிறாரென்று நிச்சயித்து மிகவும் சந்தோஷத்துடன் வழக்கப்படி அங்குசென்றுபார்த்து ஆசானில்லாமல் வேறேயொருவரிருக்க அவர் திருவடியிற்பணிந்து தன்னுடைய விருத்தாந்தத்தையும் ஆசானைக் காணமல் வருந்துகிறதையுஞ்சொல்லி ஓ சுவாமி! நீங்களார்? தங்கள் நாமதேய மென்னவென்று வினவிய மைனவதியைநோக்கி அந்த சாதுவானவர் ஓ அம்மணி! நான் ஒருதேசத்தில் சஞ்சரிப்பவனல்ல. எங்குந்திரிந்து கொண்டிருப்பவனாதலால் எனக்குவசிக்குமூரொன்று கிடையாது. என்பேர் காணீபாநாதன் இந்தமகாத்துமாவாகிய ஜாலந்தரநாதருக்குநான்முதல்சிஷன், அவரைச்சேவித்து வெகுநாளானப

டியால் மிகவும் ஆவல்கொண்டுவந்தும் எனக்கு அவர்தெரிசனங்கிடைக்காமற்போயிற்று. என்பிராப்தம் இப்படியாகிவிட்டது. என்று பலவிதமாகவிசனப்பட்டு முடிவில் அவரிருக்குமிடத்தைத்தேடிக் கண்டுபிடித்து அவசியம் உனக்குத் தெரிவிக்கிறேன். அதுவரை நீவிசனப்படாமலிரும் அம்மணியென்று சொல்லியனுப்பி அன்றிரவு கடத்தி அதிகாலையில் தன்சிஷியர்கள்சூழ அவ்விடத்தைவிட்டுப்புறப்பட்டு வெகுதேசங்களெல்லாந் திரிந்துதிரிந்து தேடித்தேடியலைந்துந்தன்குருநாதரைக்காணாமல் எங்குபோனாரோஎவ்வாறானாரோவென்று வெகுவாகப் பிரலாபித்துக்கொண்டு தேடித்திரிகிறபோது எதிரில் கோரக்கநாதரைக்கண்டுபணிந்து ஓசுவாமி! எனதுகுருநாதரைக்காணாமல வெகுதேசங்களெல்லாந் திரிந்து வேசாறினேன். தாங்கள் பூதபவிஷிய வர்த்தமானமென்னும் மூன்றுகாலமும்உணர்ந்தவராதலால், எனது ஆசானிருக்கும் நிலையையறிந்துரைக்கவேணும் சுவாமியென்ற காணீபாநாதரைநோக்கி கோரக்கநாதர் சொல்லத்தொடங்கினார். கேட்டீர்களோ சித்தர்களே! இனி ஜாலந்தரநாதருடைய நிலமையைப்பற்றிக்கோரக்கநாதர் காணீபாநாதருக்குச்சொல்லியவிர்த்தையையும் விவரிக்கிறேன் என்று சொல்லத்தொடங்கினார்.

கேளுங்கள் சித்தர்களே! கோரக்கநாதர் தன் ஞானதிருஷ்டியால் ஜாலந்தரநாதர் இருக்குமிடத்தையறிந்து காணீபாநாதரைப்பார்த்து ஐயா குருபக்திவிசுவாசத்திற் சிறந்த காணீபாநாதரே! நீர்விசனப்படவேண்டாம். உனதுகுருநாதர் இருக்குமிடத்தைச் சொல்லுகிறேன். அதெங்ஙன மெனில், வாலாயமாய் நிவாசஞ்செய்யும் பூமியாகியகௌடபங்காளதேசத்திலேயே ஓர் துரவுக்குள் யோகநிஷ்டை செய்துகொண்டிருக்கிறார். ஆகையால் அங்குசென்று தெரிசித்து உனது அபேக்ஷையைத் தீர்த்துக்கொள்ளுமென்ன, அதற்கு காணீபாநாதர் ஓ சுவாமி! பூமியின்மீதிருந்து யோகநிஷ்டை செய்வதைவிட ஜலத்திற்குள்ளிருந்து செய்வது விசேஷமோ? இந்தவிந்தையை நானிதுபரியந்தம் கண்டதுமில்லை. கேட்டதுமில்லை. இதையோசிக்க ஏதோ மோசமாயிருக்கிறது. இதன் காரணத்தையும் எனதுயிருக்குயிராய் விளங்கும்பரமகுருநாதர் எந்தத்துரவில்வசிக்கின்றார்? அத்துரவிருக்குந்திசையையும் யானறிந்து கொள்ளும்படி விவரமாகச்சொல்லவேண்டும் எனதையனே யென்றுவணங்கிய காணீபாநாதரைநோக்கிக் கருதுதற்கரிய பெருமையிற்சிறந்த தொண்டர்கள் சிகாமணியே! உன்போலியர்க்கன்றி மற்றையர்களுக்கிந்த சந்தேகமும் கேள்வியும்

தோன்றுமோ? உனக்குண்டாகிய சந்தேகமும் நீகேட்டகேள்வியும்
உண்மையே. அதெப்படியெனில், இப்பூமண்டலத்தில் ஜலத்திற்குள்
யோகநிஷ்டையிலெழுந்தருளியிருந்தவர்கள் எவருமேயில்லை. அப்படி
க்கிவ ரிருப்பதால்யோ தோமோசமா யிருக்கிறதென்றுகூறியதும்சரியே
அதற்குக் காரணமென்னவென்றால், அந்தகௌடபங்காளதேசத்தரச
னாகிய திரிலோகசந்தனமகாராஜன் தேகவியோகமடைந்ததால் அவர்
மனைவியாகியமைனாவதி நீங்காத்துக்கமடைந்துகொண்டிருந்து உன
துகுருநாதருடைய மகத்துவத்தையறிந்து அவர் திருவடியையடுத்து
உபதேசம்பெற்றதுமுதல் கணவனிறந்த துக்கத்தைமறந்து குருபக்தி
விசேஷித்து தினமும்வந்து அவரைத்தெரிசித்துப்போவாள். இப்ப
டிக்கு நெடுநாள்நடந்துகொண்டிருப்பதை அந்தசமஸ்தானத்திலிருக்
கும பாங்கியொருத்திகண்டு இம்மைனாவதியின் மருகியிடஞ்சென்று
ஓ அம்மா! எங்களரசியே! நமதூருக்கருகிலிருக்குஞ் சோலையில் வா
சஞ்செய்துகொண்டிருக்கும் ஓர்சந்நியாசியிடத்திற்குத் தங்கள் மாமி
தினமும்சென்று அந்தசந்நியாசியைக்கூடிக்கலந்துமறுபடியும்அரண்
மனைக்குவந்து யாதொன்றுமறியாதவளைப்போல உப்பரிகையின்மீ
துலாவிக்கொண்டிருக்கின்றாள். இதனால் நமதுகுலத்திற்கு இன்னுஞ்
சிலநாளில் இழிவுவந்துசேருமென்பதற்குத் தடையேயில்லையென்
று சொன்னாள். அக்கொடியபாவியின்சொல்லைக்கேட்ட அரசன்மனை
வி மைனாவதிக்கும் ஜாலந்தரநாதருக்கும் உண்டாயிருக்கும் குருசிஷ்
யசம்பந்தத்தையறியாமல் பதிபார்யா சம்பந்தமாகக்கருதி அநியாயமா
ய்தோஷத்தைச் சம்பாதித்துக்கொண்டதுமன்றி இப்போது அரச
னாகியிருக்கும் மைனாவதியின்குமாரனாகிய தன்கணவனிடத்தில் வா
ய்கூசாமற் சொல்லினாள். இதைக்கேட்ட அரசனும் ஆலோசனை
செய்து பரிசோதிக்காமல் உப்பரிகையின்மீதிருந்து பார்த்தும் சமீபத்
திற்சென்றுபார்த்தும் உண்மையைத் தெரிந்து கொள்ளாமல் மதிகெ
ட்டுமந்திரிகளைக்கொண்டு உனதாசானை அரண்மனைக்கு வரவழைத்
து அப்பரமபுருஷருக்கு உயிர்நீங்கும்படியாகப்பலவித தீங்குகளெல்
லாஞ்செய்தும்உயிர்பிரிந்துபோகாததால் அரண்மனைக்குள்ளிருக்கும்
அந்தப்புரத்துத்தூரவில்உனதாசனைப்போட்டு அதற்குமேல்பாறையி
ட்டுசுண்ணாம்புக் கட்டடங்கட்டிவிட்டான். இதுதான் இதற்குக்கார
ணம். இனியிங்கு வீண்காலம்போக்காமல் சீக்கிரமாக நீ அங்குபோ
ய் உனதாசானைக்கிணற்றினின்றும் வெளிப்படுத்தி கண்ணாரக்கண்

தெரிசித்து சுகித்திருமென்று கோரக்கநாதர் ஆசிகூறிச்சென்றூர். பின்பு காணீபாநாதர் தன் சிஷர்கள்கூட்டத்துடன் எழுந்தருளித் தன் ஆசான் நிவாசஞ்செய்துகொண்டிருந்த கௌடபங்காளதேசத்துக்கிடையிலிருக்கும் சோலையிற்றங்கினூர். இதற்குள் சிஷியர்கள் விறகுகள் சேகரித்துக்கொளுத்தி ஆசானுக்குத் தொண்டுசெய்துகொண் டிருந்தார்கள்.

இவ்வண்ணம் இங்கே காணீபாநாதர் சிஷியர்கள் சமேதமாயிருக்க அங்கே யரண்மனை உப்பரிகையின்மீதிருக்கும் மைனுவதி சோதி நக்ஷத்திரமழைத்துளிக்கு வாயைத்திறந்துகொண்டிருக்கும் முத்துச்சிப்பிக்குநிகராக ஆசானுடையவரவுக் கெதிர்பாத்துக்கொண்டு கண்ணிமை கொட்டாமலிருந்தாளாதலால் வெளிச்சத்தைக்கண்ட மாத்திரத்தில் ஆசான்வந்துவிட்டார்; நமக்கினியாதொரு குறையுமில்லை. என்ற அடங்காதமகிட்சியினுல் தேகம்பூரித்து மயிர்க்கூச்சிட்டுபொற்றட்டில் பலவிதகனிவர்க்கங்களை நிரப்பித்தட்டைக்கையிலேந்தி நாலேணியின் வழியாயிறங்கி நடந்து சென்று சோலையைகிட்டிப்பார்த்து அங்கு ஆசானைக்காணுமல் அவர் முதல் சிஷியராயிருக்கக்கண்டு அவரைவணங்கிப் பலவாகத் தோத்திரம்புரிந்து எனதையனே! நமதாசானைக்கண்டீரோ? அவரிருக்குமிடமெது அவர் இந்நகரத்தைவிட்டுப்போனதற்குக் காரணம்யாது? அவரதுக்ஷேமங்கள்யாவும் அடியாளறிந்து சந்தோஷிக்கும்படி கிருபைபுரியவேணுமென்று பிரார்த்திக்கும் மைனுவதியைநோக்கிக் காணீபாநாதர் சொல்லுகிறுன்றூர். ஓ அம்மணி! நமது குருநாதர் அரண்மனையந்தப்புரத்திலிருக்கும் துரவில் யோகநிஷ்டைசெய்துகொண் டிருக்கிறூர். அவர் அப்படிக் கிணற்றிலிருந்து யோகஞ்செய்வதற்குக்காரணம் உனதுபுதல்வனே அவனைக்கொண்டு நடந்த வர்த்தமானத்தையெல்லாந் தெரிந்துகொள்ளுமென்று கோபத்துடன் உரைத்த காணீபாநாதர் மொழிக்குவியந்து இதென்னமோ நம்பிக்கைதுரோகமாகத் தோன்றுகிறதென்று வியாகூலமனத்தளாகி ஆசாரியருக் கேதோ கஷ்டம் நேரிடும்படிச்செய்வதுதான் அரசனுக்குரிய நீதியோ? கெட்டகாலத்தின் கொடுமையோ? அஷ்டலக்ஷ்மிகளுந் தாண்டவமாடிக்கொண்டிருந்த இந்நாட்டிற்கு என்னகெடுதியோ வந்துவிட்டதே "பெரியோர்சினமடையாரடைந்தக்கால் பெருங்கடல் தீயாதோ" என்ற முதியோர்வாக்கியத்தின்படி நமது குலாலங்களுக்கும் அழிவுநேரிடுமென்பதற்குச்சந்தேகமுண்டோவென்றிந்தப்படிப் பலவாறுதன்குமாரனைத்தூஷித்து

ஆசானுக்காக மிகத் துக்கித்துத் தேகம்பதறிக்கதறிக் கீழேவிழுந்து புரண்டுபுரண்டு அழுதுவாடுகிறதைக்கண்டு காணீபாநாதர் மனந்தாளாமல் தயாளம்பிறந்து மைனுவதியின் சமீபத்தில்வந்து ஓ கற்பிலும் ஆசான்பக்தியிலும் சிறந்த உத்தமபுண்ணியவதியே! நமது குருநாதன் இன்னுமிரண்டொருநாளில் துரவைவிட்டு அவசியம் வெளிப்பட்டுவருவார். வந்துநமக்குத்தெரிசனந்தந்து ஆவலைத்தீர்ப்பார். என்சொல்லை உண்மையென்றுநம்பி உனக்குண்டாகிய துக்கத்தைப்போக்கடித்துச் சுகமாகக்கவலையற்றிரு மம்மாவென்ற காணீபாநாதர்மொழியைக்கேட்டு உண்மையெனக்கருதி மைனுவதி துக்கம்நீங்கி சந்தோஷத்துடன் காணீபாநாதரை வணங்கி விடைபெற்றுவந்து வழக்கப்படி உப்பரிகையின்மீ துலாவிக்கொண்டு கீழ்நோக்கிப்பார்க்கிறபோது, அங்குபுதல்வனிருப்பதைப்பார்த்து பாங்கிகளால் அவனை வரவழைத் திருக்கச்செய்து தானோர் திரைக்குள்ளாக விருந்துகொண்டு குமாரனைநோக்கிஅப்பாபுத்திரரத்தினமே!உன்னையானொருசங்கதியைப்பற்றிவினவுகிறேன். அதனையொளிக்காமல்என்மேல்கோபிக்காமலும் அன்னியமாய் பாவிக்காமலும் உண்மையைச் சொல்லவேண்டும். அதென்னவெனில், நமது நகரத்துக்கருகி லிருக்குஞ் சோலையில்நெடுநாளாய் வாசஞ்செய்துகொண்டிருந்த எனது குலகுருவைச் சிலநாளைக்கு முன்னம் அழைப்பித்து அவருக் கென்ன தீங்குநேரிடும்படிச்செய்தாய்? அப்படிச்செய்ததனுல் நீ யென்னசுகத்தையடைந்தாய் ? அன்றி அந்தப் பெரியவர் உனக்கென்ன தீங்குசெய்தார்? இவைகளையெல்லாம் அணுவளவேனும் பிசகாமற்சொல்லிமேலேயுனக்கு நேரிடப்போகிற சாபத்தை மாற்றிக்கொள். நடந்ததை நடந்தபடி சொல்லாமல் பொய்மொழி பகருவாயாகில் சாபத்தின்பலனுகிய ரௌரவாதிநரகத்தை அவசியம் அடைவாய். அதற்குச் சந்தேகமேயில்லை. ஆகையால் என்கண்ணே! உண்மையைச்சொல்லி நன்மையையடைவாய் என்ற அன்னையின்வசனத்தைக்கேட்டகுமாரன்மெய்நடுங்கி வாய்குளறி நாவறண்டு நினைவுதடுமாறி யாதொன்றும் தோன்றுமல் முடிவில் அன்னையின்பாதங்களில் விழுந்தெழுந்து ஓ என்னை யீன்றெடுத்த அன்னையே! முன்னம் அயோத்திமாநகரையாண்ட தசரதமகாராஜன் இரண்டாவது மனைவியாகிய கைகேசியின் மொழியினு லுயிரிழந்தான். அக்கைகேசியானவள் தனக்குப்பாங்கியாகிய கூனியின் சொல்லைக்கேட்டு அமங்கலியானுள். உத்தானபாத மகாராஜன் இளையபெண்சாதியாகிய சுருசியின்சொல்லை

க்கேட்டு முதல் பத்தினியின் வயிற்றிலுதித்த துருவனைக் கைசோரவிட்டான். மூன்றுலகத்திலும் ஜெயம்பெற்ற மிகவீரபராக்கிரமத்தினையுடைய இராவணனானவன் தன் தங்கையாகிய சூர்ப்பனகையின வார்த்தையைக்கேட்டு உலகமாதாவாகிய சீதையைவஞ்சித் தெடுத்துப்போய் அசோக வனத்தில் சிறைவைத்தமையால் ஸ்ரீராமபாணத்தால் அடிபட்டு எமபுரத்தை யடைந்தான். இத்தியாதிகளெல்லாம் புராணங்களினால் உணர்ந்தவனாக விருந்தும் எனது அஞ்ஞானத்தினால் பாவியாகிய மனைவியின் சொல்லைக்கேட்டு உலகமாதாவுக்கு நிகரான நின்பேரில் பழிச்சொல்லை யேற்படுத்தி நமதுகுலத்துக்கோர் விளக்கென்றும் பரமகுருநாதரென்றும் உணராமல் அம்மகாத்துமாவை அற்பமாகநினைத்து வஞ்சனையாக அவரைவரவழைத்துக் கொல்லும்படி யனேகதுன்பங்களைச்செய்தும் சாகாமலிருந்தார். அப்போதேனும் அவர்மகத்துவத்தைத் தெரிந்துகொள்ளாமல் பேதையிலும் பேதையாகிய யான் அறிவுகெட்டுப் பரமகுருபரனாகிய உத்தம ஆத்துமாவை நமது அந்தப்புரத்திலிருக்குந் தூணில் போட்டதுமன்றி அத்தூணிற்குமேல் பாறையொன்றை மூடிச் சுண்ணாம்பினால் கட்டடங்கட்டிய மகாபாதகனாகிய எனக்குப் பெரியோர்களால்சாபமெய்து நேராமற்போகுமோ? ஐயோ என்னைப்போலுங் கொடியபாவி இவ்வுலகத்திலுண்டோ! உத்தமராகிய பெரியோரைக்கொன்றுவிடுநான் வாழலாமென்றெண்ணிப் பலவாறு இம்சைகளைச்செய்தபடு பாவியை தெய்வங்கொல்லாமல் விடுவது தருமமோ? இதுமுன்னம் யான்செய்த கர்மமோ? இதை அனுபவிக்காமல் தீருமோ? அதெப்படியெனில், சகலதேவர்களுக்கும் அதிபதியாகிய பசுபதி வசிக்கும் ஸ்தானமோ வெள்ளிமலை. கையிற்பிடித்த தனுசோ பொன்மலை. நவநிதிகளுக்கும் தலைவனாகிய குபேரன் தனக்குமிகுந்நேசனாக விருந்தும் கையில் கபாலத்தையேந்திக்கொண்டு சிவபெருமான பிச்சையெடுக்கும்படி நேரிட்டது. இதற்குக்காரணம் பூர்வத்திற் செய்த கர்மபலனேயாம். உலகத்திற்குக் கடவுளாகி விளங்கும் பினாகபாணியே! கர்மம்விடாது பலத்தை யனுபவித்த படியால், கேவலமாகிய நாம் கர்மத்தை அனுபவிக்காமல் தப்பமுடியுமோ? ஒருக்காலும்முடியாதென்று பலவாறு தன்னைத்தானே நிந்தித்துக் கொண்டு பெரியோர்மனம் புண்ணாகும்படிச்செய்த இந்ததேகத்தை யானே மாய்த்துக்கொள்ளுகிறேனென்றுசொல்லிவாளாயுதத்தைஉருவிக்கொண்டு ஓங்கி வெட்டிக்கொள்ளத் துணிந்த தன்குமாரனைக்

மில்லாவெனக்குப் பயமேதென்றும், எங்கும்பரிபூரணமாயிருக்குமெனக்குத் தேசமேதென்றும், முக்காலத்திலும் ஒரேயியல்பா யிருக்கும் எனக்குக்காலமேதென்றும், என்றைக்கு மழியாமலிருக்குமெனக்கு முன்னும்பின்னு மித்தையான இந்திரஜால வித்தையைப்போன்ற இப்பிரபஞ்ச முழுமித்தையென்றும், எப்போதுமழியாதிருக்கும்பிரம்மமே நானென்பதற்குச் சந்தேகமே இல்லையென்றும் திடமான நித்தியாசனத்தாற் றெளிந்துகொள்ளவேண்டுமென்றார்.

அப்பால் திடமேற்றியபின் சர்ப்பபயம்நீங்கிப் பழுதையென்று காலாற்றள்ளி விடுவதுபோலப் பிரபஞ்சம் மெய்யென்றும் தேகந்தானென்றும் பந்தமோக்ஷங்களுண்டென்றும் நினைக்கச்செய்யும் விபரீத பாவனை யொழிந்துபோம். பிறகு தேகமிருந்தாலென்ன மரித்தாலென்னகாட்டிலிருந்தாலும்நாட்டிலிருந்தாலும்பிராப்தாதீனமான இத்தூலசரீரம் சுகத்தையும் துக்கத்தையும் அனுபவித்தே நீங்கவேண்டுமென்றும் பலதரம் இச்சித்து நினைத்தாலும்வாராது வரவேவராது. பலதரம்வேண்டாமென்று நிக்கிரகித்தாலும் வருவது போகவேபோகாதென்றும் நிரோதமாய்ச் சகலவிச்சைகளுமற்றுப் புற்றிலுள்ளிருந்து புறப்படும் ஈசலைப்போல, உள்ளத்திலிருந்துதிக்கும் சங்கல்பங்களை இந்திரியங்களின்வழியாய்ச்செலுத்தாமல் மீனையுண்ணுங்கொக்கைப்போலுண்டு இச்சையென்னும் மடுவிலிருக்கும் நினைப்பென்னுமச்சங்களையெல்லாம் நாசம்செய்து இச்சையின்வழியாய்மனதைச்செலுத்தாமல் நிக்கிரகித்துநிஸ்தரங்க சமுத்திரத்தைப்போலசைவற்று கூடஸ்தப்பிரம்மம் இருப்பது சமாதியென்று சொல்லப்படும். இதனாற் சுஷுப்தியிலுண்டாகும் சுகத்தைப்போலக்கண் டாநந்தமுண்டாகும். இத்தகைய எல்லையில்லாச்சுகாநந்தக் கடலிற்படிந்துதன்னைமறந்து தலைவனிற்கலந்து திக்குதேசாதிகளிறந்து திருக்பஸ்வரூபத்திற் கரைந்து எங்கணும் நிறைந்து ஏகபாவத்தையடைந்து தானின்றொன்றென்றுந் தெரியாமல் சுத்தாசுத்தத்தையுங் குறியாமல் பேசாது முண்ணுவதும் சொப்பனத்திற்கண்டுங் காணாதகாகதிபோலுணர்ந்து முணராமல் பேயன்பித்தன் உன்மத்தன் சிசுவைப்போலாகிஹரி ஹராதிகள் பிரத்தியக்ஷமானாலும் மாயாமயமென்றறிந்து தலையரிவதுந்தெரியா ஆநந்தமேலிட்டு ஜாக்ரசுஷுப்தியின் நிலையைமேவிப்பிரம்மமாத்திரமாயிருப்பதுசாக்ஷாத்காரம். இதனாற் கற்புள்ள கன்னிகைக்குச் சாயுச்சியங்கிடைப்பதுபோலச் சாலோகசாமீபசாரூப சாயுச்சிய மென்னும் நாலு பதங்களுக்கப்பாற்பட்ட ஐந்தாம்பதமா

கிய ஆநந்தமாத்திரமான கைவல்லியங் கிடைக்கும். ஆதலாற் சகல பற்றுக்களுமற்ற மன்னனே! பிரமமே இஷ்டதெய்வமென்றும், தெய்வமே சத்குருவென்றும், குருசேவையே சகலகிரியைகளென்றும், குருவுபதேசமே வேதமென்றும் வேதமுடிவே வேதாந்தமென்றும், வேதாந்த சிரவணமே மோக்ஷமார்க்கமென்றும், மோக்ஷேச்சையே தபோபலனென்றும், தபோபலனே மனனமென்றும், மனனமே நித்தியாசனமென்றும், நித்தியாசனமே சமாதி நிஷ்டையென்றும், நிஷ்டையே சாக்ஷாத்காரமென்றும், சாக்ஷாத்காரமே பிரம்மமென்றும், பிரம்மமே ஆநந்தமென்றும், ஆநந்தமே முத்தியென்றும் நிச்சயமாயறிந்துகொள்ளவேண்டுமென்றுபின்னுஞ்சொல்லத்தொடங்கினார்.

ஓ நரபதியே! முக்கியமாகப்பரமாசாரியர்மீதும் இஷ்டதேவதையின்மீதும் சிரவணார்த்தங்களின்மீதும் சிரத்தை பூரணமா இருக்கவேண்டும். பரமாசாரியர்மீ திருக்கும சிரத்தையானது பரமஞானத்தைக் கொடுக்கும் இஷ்டதேவதை மீதிருக்கும சிரத்தையானது பாபவிமோசனமாக்கும். சிரவணார்த்த சிரத்தை இல்லாதவனுக்கு ஞானம்லபிக்கமாட்டாது. எப்படி யெனில், ருதுவாகாத கன்னிகைக்கு எப்படி கர்ப்பந்தரிக்காதோ அப்படியே சிரத்தையில்லாதவனுக்கு ஞானார்த்தம் மனதிற்றரிக்காது. சிரத்தையேருது;உபதேசமேபிந்து; ஞானமே கர்ப்பம்; ஆநந்தமேசிசுவென்றுரைக்கத்தகும். குருகிருபை இல்லாவிட்டால் சிரவணாதிகள் பலிக்கமாட்டாது. தன்னைமறக்கிறபரியந்தம் மேற்சொன்ன மூன்றிடத்திலும் சிரத்தைபூரணமா யிருப்பவனுக்கே பிரமானந்த முதயமாகும. எப்போது ஆசாரியருடைய பரிபூரணகிருபை பெறுவானோ அப்போதே ஞானப்பிரகாசம் உதயமாகும. அஞ்ஞானபாசம் அற்றுப்போகும். ஆத்மவிலாசம விஸ்தரிக்கும். சிந்தனம் லவலேசம் இருக்காது சஞ்சிதகர்மங்கள் நாசம். தன்னை மறக்கச்செய்து விடுமப்பாபிரம்மோபதேசம். சகலபற்றுக்களுமற்றுப்போகும்படிச்செய்யும் சாதுக்கள் நேசம். இவ்வளவுமென்னமையானதுபார். குருவிசுவாசமுள்ள ஓ இறைவனே! தேகமசேதனம். மூடசடம். நீநித்தியசுஞ்ஞானசேதனம். தேகங்கண்டரூபநாமம். நீ அகண்டபரிபூரண நிருபநிர்நாமம். தேகம்விகாரமலதுக்கம். நீ நிர்விகாரநிர்மலாநந்தம். முக்தனை உனக்கேனிந்த தேகாபிமானம்? உன்னுடைய ரூபமென்றைக்கு மொரேநிதானம். உன்னை இப்படியார்செய்யப்போகிறார் சமாதானம்? உன்னுடையரூபமாரறிந்து சொல்லுதற்கரியமோனம். இதுவே வேதமுடிவான யதார்த்தஞானம். மூகபாவமடைந்திருப்ப

தே பிர்ம்மத்தியானம். தற்சுதந்தரமற்றிருப்பதே ஆசாரியருக்களிக்குந் தானம். நானென்பதற்றவர்க்கு முண்டோ ஈனம். நானற்ற பிரம்மஞானியே மூவர்க்குஞ் சமானம். நானற்றபேர்க்குண்டு நாரதாதிகளின் சன்மானம். ஓ மன்னனே! தேகத்தை நடப்பிப்பது பிராணன். பிராணனை நடப்பிப்பது ஜீவன். ஜீவனை விளங்கச்செய்வது ஆத்மஞானம் ஆதலால், தேகாதிகளை நானல்லவென்றே இருக்கவேண்டும். பிராப்தாதீனமான இத்தேகத்தைக் குறித்துனக்கக்கரை என்ன? தேகாபிமானத்தை இன்றுடன்விட்டுவிடு. உன்னைநீயே நன்றாயாராய்ந்துபார். தனக்குளாராய்பவர்க்கே எல்லையற்றஆநந்தமுண்டாகும்.தேகாதிகளை அசைவற நிறுத்தினவனுக்கு நித்தியாநந்தம வர்தடைவது போல துரிய திருஷ்டியைமேவிப் பிரம்மமாத்திரமா யிருப்பவர்க்கே ஆநந்தோதயமாகும். நித்திரையானது தன்னைமறக்கச்செய்வது போல ஆநந்த நித்திரை யுன்னைமறக்கச்செய்யும். நீமுக்காலத்திலும் முக்தனாகவே இருக்கின்றாய். இனிமேற் சங்கைசெய்வாயானால்பந்தத்துக்குட்பட்டுப்போவாய். திரிகுணங்களும், திரிகுணசேஷ்டைகளும், பஞ்சபூதங்களும், பஞ்சகர்த்தர்களும், மாயையால் நிர்மாணிக்கப்பட்டது. நீயோ சர்வசாக்ஷி இவைகளையெல்லாஞ் சாக்ஷியாயிருந்தறிகிற உனக்கு மாயையும் திரிகுணங்களும் பஞ்சபூத விகாரங்களும் ஒருகாலத்திலுமில்லை. நீபிருதிவியப்தவன்னிவாய்வாகாசங்களிலும்நிறைந்திருக்கும் பிரமமேயாம். இவ்விதவைக்கியவத்விதானுபவத்தினாலேயே நானென்னும் ஜீவபாவமொழிந்து போமென்கிற பற்பலவேதாந்தரகசியங்களுரைத்து ஓ பூபதியே! இந்தஅனுபவமே நான்குவேதத்திலும் வசிஷ்ட சங்கிதை, சூதசங்கிதை, பகவத்கீதை, பிரமகீதை, ஆத்மகீதை, ராமகீதை, உத்தரகீதை, ரிபுகீதை, குருகீதை, அஷ்டவக்கிரகீதையிலும் வேதவியாசருரைத்த பதினெண் புராணங்களில் தச்சிபுராணங்களிலும், நான்கு விஷ்ணுபுராணங்களிலும், உபயமர்மபுராணங்களிலும், சூரியபுராணம், அக்கினிபுராணம், கணபதி புராணம், சக்தி புராணமுதலான புராதன புராணங்களிலும், சொல்லியிருக்கிறதைப்பொய்யென்று மதபேதத்தால் திரஸ்கரிப்பவர்களுக்கு ரவுரவாதி நகாமே பிராப்தியாகுமென்றறைந்த ஜாலந்தரநாதரைவணங்கி அரசன்பின்னுங் கேட்கத்தொடங்கினன்.

எனதுயிருக்காதார பூதமானஎந்தையே! தேவரீர் சொல்லியது வெகு விந்தையேயாகிலும் அடியேனுக்கின்னொரு சந்தேகமுளது அதை நிவர்த்தியாக்கி ஆட்கொள்ளவேணும் சுவாமியென, ஜாலந்தர

நாதர் ஓ அரசனே! உனக்குற்ற சந்தேகமேதெனே, அரசன் ஹரி ஓம் என்ற வாக்கியத்தின்பொருளை யானுணர்ந்து கொள்ளும் பொருட்டுத் திருவாய்மலர்ந்தருளவேணும் சுவாமியெனை, ஜாலந்தரநாதர் ஹரி ஓம் என்னும் வாக்கியத்தின் மர்மத்தைத் தெரிந்துரைக்கத் தேவர் மூவர் மற்றியாவராலும் தரமாமோ! ஆகிலும் என்குருநாதர் எனக்குரைத்தவண்ணஞ் சொல்லுகிறேன் கேளும். அதாவது, பக்தர்கள்பாபங்களை அரிக்கப்பட்ட பகவானுக்கே ஹரி என்று சொல்லப்படும். அப்பகவானே பிரணவஸ்வரூபமெனச்சொல்லப்படும். பிரணவமென்பது அகார உகார மகாரமென்னுந் திரியாக்ஷரங்கள் கூடியவோங்காரமென்றுரைக்கத்தக்கது. இதினர்த்தம் பூரண பிரமஞானிகளுக்கன்றி மற்றவர்களுக்குத் தெரியாது. பிரம்மமே ஓங்காரமென்று வேதங்கள் முறையிடுகின்றன. பிரணவத்தின் இரகசியந்தெரியாதவர்கள் சகலவேதாகம சாஸ்திரார்த்தங்க ளறிந்தவர்களாகிலும் ஒன்றுந்தெரியாதவர்களேயாம். பிரணவத்தின் மர்மமறியாதவர்கள் பிரமைக்குள்ளானவர்களேயாம். பூரணபிரம்மஞானியாகி சாக்ஷாத்காரத்தையடைந்த சத்குரு கிருபையாலன்றிப் பிரணவார்த்தந்தெரிதல் வெகு துர்லபம். வேதாகம சாஸ்திரங்களெல்லாம் ஓங்காரத்தினாதாரத்தினாலேயே பிரகாசிக்கின்றது. வேதத்தினுடைய சாரம் பிரணவமென்றே சொல்லப்படும். சர்வசிருஷ்டிக்கும்ஆதாரமாயும் ஆதேயமாயுமிருப்பது மூலாக்ஷரமென்றே சொல்லப்படும். பிரணவத்தின் மர்மமறிந்தவனே சுஞ்ஞானியாகும். அறியாதவனே அஞ்ஞானியாகும். சகல மந்திரங்களுக்கு முயிராகி நின்ற மூலாக்ஷரத்தின் மர்மமறியாமற் செய்யும் தபம், ஜெபம், யோகம், தியாகம், வேதாத்தியயனம், வேதாந்த சிரவணம், மனனம், நிதித்தியாசனம், சமாதிசாக்ஷாத்காரங்களும்வீண் முயற்சியாய்முடியும். ஓங்காரம்சமுத்திரமாகும். வேதாகமங்கள் நதிகளாகப் பலபலவித்தைகள் பதார்த்தங்களும் ஓங்காரமயமாயிருக்கின்றது. ஓங்காரத்தின் இரகசியம் தெரிந்தவர்களே பூதபவிஷ்ய வர்த்தமானமென்னும் திரிகாலங்களையுமறிந்த பிரம்மஞானிகளென்றுரைக்கலாம். பிரணவார்த்தசோதனையினாலே அஞ்ஞானம் சந்தேகம் விபரீதம் சாஸ்திரவாசனை, லோகவாசனை, தேகவாசனை முதலானதும் நிவாரணமாய் திடபிரக்ஞை யுண்டாகவேண்டும். அஷ்டாக்ஷரத்துக்கும் பஞ்சாக்ஷரத்துக்கும் ஸ்திரமான வலிமையுண்டாக்குவது பிரணவமேயாம். விருக்ஷங்களுக்கு ஜலமும் ஸ்திரீகளுக்குக் கற்பும்புருஷர்களுக்குவிவேகமும்மேடைகளுக்குஅஸ்திவாரமும்எப்படி

ஆதாரமாயிருக்கின்றதோ அப்படியேசமஸ்தமந்திரங்களுக்கும் ஆதாரமாயிருப்பது பிரணவமேயாம. தானும்பிரம்மம் ஜகத்தும் பிரம்மமென்னும் திடமெவனுக்கு வந்ததோ அவனே பிரணவத்தினிறுதியார்த்தமறிந்தவனும். புத்திசாலியென்றும், விற்பனனென்றும், முமுட்சுவென்றும், சிரேஷ்ட னென்றும், பண்டிதனென்றும், பக்தனென்றும், முத்தனென்றும், சித்தனென்றும், சுத்தனென்றும், பிரணவார்த்த மறிந்தவனையே சொல்லவேண்டும். பிரணவபாவ மறிந்தவனொருவனேபிரமத்திலே ஏகீகபாவமாயிருப்பான். மற்றவர்கள்மாயையிற் சிக்கினவர்களாம். பிரணவானுபவ மறிந்தவனே பிராந்திரகிதனென்றும், பிராமணனென்றும், அறியாதவனே பிராந்தி சகிதனென்றும், சுவபசனென்றும் சொல்லப்படும். பாலுக்குள் வெண்ணெய்போலவும், எள்ளுக்கு ளெண்ணெபோலவும் பரிபூரணமா யிருக்கும்பிரம்மத்துக்கு ளேகீகபாவமாயிராது வெதிருக்தமாயிருப்பதே பிரம்மஹத்தி யென்றும் பெரியோர்கள் உரைப்பார்கள். மாதாபிதாக்களுக் கயிக்கியமா யிராமல் மாறுபட்டதாய் நபராதியானதுபோலப் பரப்பிரம்மத்துக்கு ளைக்யமாய் நான்பதருக அகங்காரக்கிரந்தியுள்ள வபராதிக்கு விபரீதகுணங்க ளுண்டாகிப் பிரம்மத்துக்குற்ற விரோதியாய் மூவர் தேவர் முனிவர்களுக்கும் விரோதியாய் குரோதமோருருவாயிருக்கும் ஜீவனேதானுகி ஜராமரணதரங்கக்கணங்களிருக்கும் பவசாகரத்துளோர் திரணமாய் வீழ்ந்து கரையேறுவதற்கோர் துறைகாணமல் கற்பாந்தகாலங்கள்பலகடந்தாலும்தனக்குச்சலனமும் துன்பமும் நீங்காமல் மேற்படி தரங்கங்க ளொவ்வொருதிசையிற் றருவகின்றனவோ அந்தந்திசைகளி லுழன்றலைந்து இன்பங்குலைந்து யாதொன்றும் தோன்றாமல் மலைந்து அந்தகாரத்திலமிழ்ந்திருப்பான். அன்றி, மாயையென்னுங் கன்னிகை விளையாடுவதற்கோர் பந்தாய்நைந்து மிகவு நொந்து சிந்தாக்கிரந்தனுயப் பந்தத்தாற் பிணிக்கப்பட்டு க்ஞானஸ்மரணை கெட்டு மோக்ஷமார்க்கம்விட்டுத் தொன்று தொட்டுப் பிரம்மப்பிரளய பரியந்தம் சுழல்காற்றிலகப்பட்ட இலவம்பஞ்சுபோலவும் சூழ்ந்தெரியும் ஆக்கினியின் மத்தியிலுற்றபன்னகம்போலவும்இருபுறமுமெரியுங்குழாவினுள்ளிருக்கும் எறும்புபோலவும் உழன்றுழன்று அலக்கணுற்று இடறடைந்துமிகவுமிடைந்து இறுதியில் நிரயத்துக் காளாவன். ஓ அரசனே! மூன்றரைமாத்திரையான ஓங்காரத்தின்அம்சமான அகாரம்சாக்ராவஸ்தையென்றும் பிரமதேவ னென்றும் சிருஷ்டியென்றம் நாதமென்றும்

ருக்வேதமென்றும் சத்தியலோக மென்றும் மனதென்றும் சொல்ல
ப்படும். உபகாரமசொப்னுவஸ்தையென்றும், விஷ்ணுவென்றும்ஸ்தி
தியென்றும பிந்து வென்றும், எசுர்வேதமென்றும், சொர்க்கலோக
மென்றும்புத்தியென்றும் சொல்லப்படும். மகாரம்சுழுப்தியவஸ்தை
யென்றும், ருத்திரனென்றும் சம்ஹாரமென்றும, பாதாளலோகமெ
ன்றும், சாமவேதமென்றும், ஆதிசத்தியென்றும், க்ஞானமென்றும,
சாக்ஷியென்றும், அதர்வணவேத மென்றும், மோக்ஷலோக மென்
றும், சித்தமென்றும், சொல்லப்படும். அன்றிஓங்காரத்தைப்பிண்டம்
அண்டம், பிரமாண்டமென்றும் இச்சாசக்தி கிரியாசக்தி ஞானசக்
தியென்றும், சத்வரஜஸதமோகுணங்களென்றும் இடாபிங்களாசுழு
ம்னநாடியென்றும், கங்காயமுனு சரஸ்வதியென்றும், மனம்வாக்கு
காயமென்றும், வாணிலக்ஷ்மீபவானியென்றும், ஆதிமத்யாந்தமென்
றும், மாதாபிதாகுருவென்றும், ஆகாமிய சஞ்சிதபிராப்தமென்றும்,
ஆதியாத்மீக ஆதிபௌதிக ஆதிதெய்வீகமென்றும், சந்திரசூரியாக்
கினியென்றும் சொல்லப்படும். அல்லாமல்,மனசுயென்பதிலே ம-என்
னும் தமோகுணமும்; ந-என்னும் ரஜோகுணமும், சு-என்னும் சாத்
வீககுணமும் அடங்கி யிருக்கின்றன. இதனுல் 96 தத்துவங்களா
கிய ஒவ்வொன்றில் கிரியாக்ஷராதி பதிகளாகிய திரிமூர்த்திகளுமிரு
ந்து தங்கள்தொழிலே இயற்றுவார்கள். திரிமூர்த்திகளுக்காதாரமான
திரியாக்ஷரங்களில்லாத வஸ்து எவ்வுலகத்திலும் எக்காலத்திலும்
இல்லையென்றே சொல்லத்தகும்.

அல்லாமலும் அகாரம் ஸ்தூலதேகமென்றும், உகாரம் சூக்ஷம
தேகமென்றும், மகாரம் காரணதேகமென்றும், அர்த்தமாத்ராமகா
காரண தேகமென்றும், சொல்லத்தகும். மூன்றுதேகங்களும், சாக்ஷி
யான மகாகாரணமே பிரத்யேகாத்மா வென்றும், ஆநந்தமென்றும்,
அனுதிகாரண மென்றும், அசியென்னும் ஐக்கியபாவத்தை யளிப்ப
தென்றும், நித்தியசத்தியவஸ்துவென்றும், நிர்வாணபதமென்றும்,
சஞ்சுக்தயோகீஸ்வரர்களுரைப்பார்கள். துரியராணியோடுங் கூடிச்
சுகித்திருக்கும் ஆத்மராமனைத் துரியாதீதனென்றும், பரமாத்மாவெ
னறும், பராத்பரமென்றும், பராபரமென்றும், பரிபூரணனென்றும்,
பரமேசுவரனென்றும், பகவானென்றும், சொல்லுவார்கள். ஆனற்
றுரியராணியே ஆநந்தமென்றும், ஆநந்தத்தை யனுபவிப்பவனே
ஆத்மராம னென்றும், உரைக்கத்தகும். அர்த்தமாத்திரையான மா
யையுடன்மற்ற அர்த்தமாத்திரையால் அவாங்மனோகோசரமாயிருக்

கும் பிரம்மம் கூடிப் புலப்படாமலே ஓங்காரத்துக் கிடங்கொடுத்தி ருக்கின்றது. நிஸ்சப்தமான பிரம்மத்திலிருந்து ஓங்கார முண்டாயி ற்று. அதிற் சப்தமும்பதமும், வாக்கும்வார்த்தையும், சுலோகமும் வேதாகமமும் உண்டாயிற்று. வேதாகமங்கள் வாச்சியார்த்தமென் றும், ஓங்காரம லக்ஷியார்த்தமென்றும் பெரியோர்களுரைப்பார்கள். வாசாஞானிக்குலக்ஷியார்த்தந் தெரியாததுபோல, ஜாக்ரதஸ்வப்ன சுஷுப்தியினனுபவ முரைக்கவேசெய்து துரியானுபவ முணர்தலதி துர்லபமென்றும் சொல்ல வேண்டும். அகாரத்தில் நரரும், உகாரத் தில் சுரரும், மகாரத்தில் ராக்ஷதரும், அர்த்தமாத்திரையில் ஞானிக ளும், உற்பத்தியானார்களென்று வேதத்தில் முறையிடுகின்றது. திரி மூர்த்திகளாகுத லரிதல்ல. பிரம்மஞானியாதலே அரிதென்றுரைக் கத்தகும். அன்றி, ஓங்காரம் சகுணப்பிரம்மமாகவும் நிர்க்குணப் பிர ம்மமுமாகவுமிருக்கின்றது. எப்படியெனில், ஓம் நமோநாராயணாஓம்நம சிவாயவென்னும் சகுணப்பிரம்மமான பிரதானமந்திரங்களுக் காதி யிலிருப்பது ஓங்காரமேயாம். ஓங்காரத்தை யுச்சரிப்பவன திரிமூர்த் திகளையும் ஆதிசத்தியையும் பரப்பிரம்மத்தையும் நினைத்தவனாகின் றான். நிர்க்குணமர்மமான அம்சோஹம் என்னும் அஜபாமந்திரமே அர்ச்சுனா நீஜெபிக்கத்தகுந்ததென்று பகவானும்சிவோஹமென்னும் அத்வைதமந்திரமே ஸ்ரீராமா நீஜெபிக்கத்தகுந்ததென்றுவசிஷ்டபக வானும் போதித்த மகாவாக்கியங்களில் ஓங்காரமே ஆதாரமாயிருக் கப் பிரணவத்தினர்த்த மின்னஞ்சொல்லப்புகின் ஓ அதுவென்னும் பிரம்மமே அம் நானென்றும் நிர்க்குணப் பிரம்மைக்கியத்தைக்காட் டும் அத்வைத பாவமாயிருக்கின்றது. எல்லாவற்றிற்கும் ஓங்காரமே பிரதானமென் றறிந்துகொள். சரீரத்துக்குப் பிரதானமான மஸ்தக மே பிரமாணமா யிருக்கின்றது. எப்படியெனில், ஆதியில் பிரம்மா வானவர் பரப்பிர்மத்திலிருந்து முதல்முதல் ஓங்காரமுண்டானபடி யால் நாமும் ஓங்காரத்தையே ஆரம்பத்தி லுண்டாக்க வேண்டுமெ ன்று ஓங்காரஸ்வரூபமாய் மஸ்தகத்தை யுண்டாக்கிக் களிப்புற்றப்பி ன்பவ்வவயவங்களைச்சிருஷ்டித்தான். ஓ மன்னனே! ஓங்காரத்தின்மர் மம் இன்னம் விரித்துரைக்க வேண்டுமோவென்றுகிருபாநோக்கம்புரி ந்த ஆசிரியரைவிடாது தினமுஞ்சேவித்துக்கொண்டிருந்தான்.

இந்தப்படியாக மைனுவதியும் கோபிசந்தனமகாராஜனும் ஜலத் தைவிட்டுப்பிரியாத தாமரைமலரைப்போலவும் கிளையைவிட்டு உதி

ராத நச்சம் இலையைப்போலவும் ஆசானைவிட்டுப் பிரியாதிருந்தார்கள். இவர்களிப்படியிருக்க, காணிபாநாதர் ஆசானிடத்தில் விடைபெற்று சீஷர்கள் சமேதராக யாத்திரைசெய்யும்பொருட்டு மனதுக்கிசைந்தபடி சென்றார். அதன்பின்னர் ஜாலந்தரநாதர் கோபிசந்தரை வைக்குண்டாயிருக்கும் இவிரத்தையறிந்து ஜீவன்முக்தருக்கும் மார்க்கத்தை யுபதேசித்துச் சிலகாலம் தன்னிடத்திலிருந்து ஒருநாள் கோபிசந்தனையழைத்து நீ இன்றுசென்று இவ்வூரில் பிச்சையெடுத்து வரவேண்டுமென்று கட்டளையிட்டார். அக்கட்டளையின்படி மகாராசன் தான்தரித்திருந்த சகல ஆபரணங்களையும் ஜரிகைகிரீடகுண்டலங்களையும் உயர்ந்த வஸ்திரங்களையுங் களைந்தெறிந்துவிட்டு இடையில் கௌபீனமும் தலையில் பித்தவஸ்திரமுந்தரித்து கழுத்தில் துளசிமணிமாலையும் தாமரைமணிமாலையும் அணிந்து நெற்றியில் திருமணிக்காப்பிட்டு ஆசானுக்கு வந்தனம்புரிந்து சோலையைவிட்டு வெளிப்பட்டு நடந்து அரண்மனையையடுத்துத் தன் அன்னையை வணங்கி ஆசிபெற்று அந்தப்புரத்திற்புகுந்து தன் மனைவிகளைத் தாய்களாகப்பாவித்து ஓ அன்னைமார்களே பிச்சைகொண்டுவந்து அளியுங்கோள் என்றுவேண்ட அதையறிந்து இதென்னமோதமாசையுற்றுப் பைத்தியம் பிடித்ததுபோலக்காணகின்றது. இடையில் கோமணமின்றி வேறுவஸ்திரமில்லையாமது. தலையிலிருக்கும் வஸ்திரமோ இனிக்கிழிய இடமில்லாத கந்தலாக இருக்கின்றது. இவருக்குடைய ஆடையாபரணங்கள் ஜரிகைகிரீடகுண்டலம் வெகுரப்பட்டாடைகள் செங்கோல் முதலியவெல்லாவற்றையும் பொழிந்துச் சகலத்திலும் பற்றற்ற சந்நியாசியைப்போல வேடம்பூண்டு நாணமற்று மனைவிகளாகிய நம்மை அன்னைகளேயென்று அழைத்து பிச்சையிடச்சொல்லுகின்றார். இதைப்பார்க்க வெகு விந்தையாக இருக்கின்றதே என்று தனித்தனியே ஒவ்வொருவரும் மனதிற் சேர்ந்தியமன்னனைப் புகன்று பதறிக்கதறியழுது புலம்பி முடிவில் ஓநாதா! இப்படி நீர் ஆனதற்குக் காரணம் யாதோ தெரியவில்லையே, இவ்வூரில் நீர் பிச்சையெடுத்தால் நமதரசனென்று மதித்துக் குடிகள் பிச்சையிடுவார்கள். இந்தப்படியே அன்னியதேசங்களுக்கு நீர் சென்று பிச்சைகேட்டால் உமதருமைதெரிந்து பிச்சையிடுவோர்கள் யாவரிருக்கின்றார்? நாவரண்டுபசியுண்டானால் உமக்குத் தாகத் தண்ணீர்கொடுத்துத் தாபத்தைத்தீர்ப்பவர்கள்யார்? ஒருவருமில்லையாமே. விருதா நீர் ஏன் இந்தக்கோலங்கொண்டீர் நாங்கள் அடியோர்கள் உமக்குசே

ணடிய தொண்டுகள்செய்ய சித்தமாயிருக்க எங்களைவிட்டு உமக்கு ண்டான கௌரவத்தை யொழித்து இழிவான காரியத்திற் பிரவேசிப்பது உம்மைப்போலொத்த அரசர்களுக்கடுக்குமோ? ஏதுக்கும் வழியற்றவனன்றோ இக்காரியத்தில் முயலவேண்டும். நாடுநகரம் முதலான அஷ்டலக்ஷ்மிகளுந் தாண்டவமாடுகின்ற செல்வமிகுந்திருக்கிற நீர் இவ்வேடம் புனைவது தருமமல்லவே என்று பலவாறாகச் சொல்லும் வனிதைகள்சொல்லுக் குட்படாமல் வைராக்கிய சீலனாகி ஓ அன்னைமார்களே! என்னைக்காக்கும் அன்னைகள்உலகத்தில்அனேகருண்டு. இந்தசெல்வமும் நாடும்இதிலெனக்குண்டாகிய அதிகாரமும் நிலையல்ல. சின்னாள்வாழ்வு என்று தெரிந்தபின்னும் இதனை நம்பி நானடைவனோ,தாழ்வு. இனியெனக்கிந்த அற்பவாழ்வில் மனஞ்செல்லாது என்றிந்தப்படி பலவிதநீதிகளையோதி அங்கேநின்றும்திரும்பி ஆசானிடத்திற்குவந்து பணிந்து ஓ சுவாமி! சத்குருநாதரே! தங்கள் கட்டளைப்படி இவ்வூருக்குள்தானே பிச்சையெடுத்துக்கொண்டுவந்தேன். இனிதங்கள் சித்தம் எப்படியோ அப்படிநடக்க சித்தமாயிருக்கின்றேன் என்ற சீஷனைநோக்கி அப்பா குருபக்தியிற்சிறந்த குணசீலனே! அரசர்களிலே உன்னைப்போல இத்தனை விரைவில் சகலபற்றையும் ஒழித்து வெளிப்பட்டவர்களை நான்கண்டதேயில்லை. நாளாவட்டத்தில் சிறுகச்சிறுக விலக்கி சர்வசங்கத்தையும்ஒழித்து அனேகநாளைக்குப்பின் தன்னியர்களானவர்களைக் கண்டிருக்கிறேன். இதில் நான்கு பிரிவுண்டு. அவையாவையெனில், மந்தன், மந்ததரன், தீவிரன் தீவிரதரன் என்பனவாம். இந்நான்கு வகுப்பில் நீ தீவிரதரனாயிருக்கின்றாய்.

அதெப்படியெனில், யானுனக்குபதேசித்த ஜீவன்முக்தி மார்க்கத்தை மிகவும் எளிதில் உணர்ந்து அதனுட்பத்தைக்கண்டுதெரிசித்தாயாதலால்,உன்னைத்தீவிரதரனென்றுசொல்லத்தகும். இனியானுனக்குச் சொல்லவேண்டிய தொன்றுமில்லை. குருபக்தி விசுவாசமுடையவனெவனோ அவனுக்குத் தானாகவே சகலமும் கரதலாமலகம்போலத் தோன்றும். அதில்லாதவனுக்கு எத்தனைதரம்போதித்தபோதிலும் மனதில்தரிப்பது மிகவும் அரிதேயாம். இத்தன்மையாகிய அகோசரமனமும், குணமும், மணமும்பொருந்திய நீ தேசங்கள் தோறுஞ்சென்று சஞ்சரித்துவரக்கடவாயென்றநேமிக்க, கோபீசந்தனன் அப்படியே தங்களிஷ்டப்படி சென்றுவருகிறேனென்று விடைபெற்றுநடந்து தன் அன்னையிருக்கும் உப்பரிகைக்குச்சென்று

வணங்கி ஓ அம்மணீ! தேசயாத்திரை செய்துவரும்படி எனக்கு ஆ
சான் நியமித்தபடியால் யான் தேசங்கள்தோறும் சஞ்சரிக்கப்போகி
றேன். விடைதாரும் என் அம்மணியென்று வேண்டிக்கொள்ளும்
புதல்வனைநோக்கி மனுவதி சொல்லலுற்றாள்.

கண்டுகொள்ளுவதற்கு மிகவும் அரிதாகிய வஸ்துவை ஆசா
னாலுணர்ந்து மிகவு மெளிதில் தெரிசித்த தவப்புதல்வனாகிய
உனக்கு யான் சொல்லவேண்டியதும் ஒன்றுண்டோ? ஒன்று
மில்லை. ஆகிலும், உனக்கொன்றுசொல்லுகிறேன். அதென்னவெனில்,
தேசசஞ்சாரஞ் செய்கிறபோது ஒருக்கால் உன் தங்கைவாழும்நாட்டி
ற்குப் போகவேண்டியிருந்தால் அவ்வரண்மனைக்குள் போகாமல் வெ
ளியிலிருந்தபடி உன்காரியத்தைப் பார்த்துக்கொண்டு சீக்கிரம்வந்து
சேரக்கடவாயென்று ஆசிகூறியனுப்ப அவனும் மிக சந்தோஷ
மடைந்து நாட்டைவிட்டுநடந்து அங்கவங்க கலிங்க காம்போஜகாஸ்
மீர விராட மராட நேபாள சோழபாஞ்சாலமென்று சொல்லப்படும்
தேசங்கள்தோறுஞ்சென்று பிக்ஷையெடுத்துப் பசிதணித்துக்கொண்
டே தன் தங்கைவாழும் நாட்டையடைந்து பிக்ஷை எடுத்துக்கொ
ண்டு அரண்மனையின் பக்கமாய் வருகிறபோது உப்பரிகையின் மீதி
ருந்து தங்கையானவள் அண்ணனைக்கண்டு இதுவென்ன ஆச்சரியம்!
நம தண்ணன் பிக்ஷையெடுத்துத் திரிகிறாரே! இவருக்கென்னகுறை?
இப்படியானதற்குக்காரணம் யாதோவென்று தனக்குள்தானேசிந்தி
த்து உடனே ஓர் பாங்கியை அனுப்பி அழைத்துவரச்சொன்னாள்.
அவளும் அந்தப்படியேசென்று அழைத்துவந்தாள். அப்போது அ
ண்ணனை நேரில்கண்ட தங்கையானவள் மிகவுந்துக்கப்பட்டுத் தமை
யனே! தாங்களிப்படியிருப்பது எனக்கு மிகவும் வெட்கமாக இருக்
கிறது. ஆகையால் சீக்கிரம் தாங்களிந்த வேடத்தைமாற்றி அரசர்
கள் தரிக்கும் ஆபரணங்களும் வஸ்திரங்களுந் தரித்துக்கொண்டு
எங்கும் போகாமல் என்கண்முன்னே உலாவிக்கொண்டுதாங்களிருந்
தால் போதும். அல்லது இந்நாட்டைக் கொடுக்கச் சொன்னபோதி
லும் தருகிறோம். உமதுமைத்துனர் வாராமுன்னம் தலையிலிருக்கும்
கந்தலை அவிழ்த்தெறிந்து நல்ல ஆடையாபரணங்களைத் தரித்துக்
கொண்டிரும் அண்ணாவென்று சொல்லி விலையுயர்ந்த ஆடையாபர
ணங்களைத் தருவித்துத் தமையன்முன்வைத்து வெகுவாக வேண்
டிக்கொண்டாள். எத்தனையாகவேண்டிக்கொண்டபோதிலும் ஆடை
யாபரணங்களைத் தரித்துக்கொள்ளாமலும் மறுமொழி பேசாமலும்

இருப்பதைக்கண்டு தங்கைகோபங்கொண்டு தாதிகளைக்கூவி இவனைக்
கொண்டுபோய்ப் பாராவில்வையுங்களென்று ஆக்கினைசெய்தாள். அங்
தப்படியேதாதிகள் அவ் உத்தமசீலனை யழைத்துக்கொண்டுபோய்ப்
பாராவில்வைக்கும்படிஒப்புவித்தார்கள். பாராகொடுப்பவர்கள்மகாத்து
மாவென்று அறியாமல் பாராவில்வைத்து வெகுஜாக்கிரதையாய்ப்
பாராகொடுத்துக்கொண் டிருந்தார்கள். அப்போது அந்த மகானு
பாவன் மனதில் விசனமின்றி தன் குருசுவாமியை மனதில் சிங்
தித்த மாத்திரத்தில் அவரது கிருபையால் மாயமாக ராஜவீதிக்கு
வந்து முன்போலப் பிக்ஷைஎடுத்துக்கொண் டிருந்தார். இந்தஅற்புத
த்தைத் தங்கையானவள்கண்டு மறுபடியும் வரவழைத்து நயமாகப்
பேசி இருக்கச்சொல்லி அந்தப்புரத்திற்குச்சென்று நாம்சொன்னபடி
க்கேளாமல் நமக்குஅவமானம்உண்டாகும்படிச்செய்யும் இந்தப்பைய
னைக்கொன்றுவிட்டாலொழிய நம்மைவிட்டு நாணம் நீங்காதென்று
யோசித்து அடையில் விஷத்தைச்சேர்த்து எடுத்துவந்து அண்ணா
இதைப்புசியுமென்று கொடுத்தாள். அதை மகாத்துமா கையிலெ
டுத்துப்பார்த்து அதற்குள் வைத்திருக்கும் மருந்தின்னதென் றுணர்
ந்து ஆசானைத் துதித்து அந்த அடையை ஓட்டின்மீது வைத்துவி
ட்டு அரண்மனையைவிட்டு வெளிப்பட்டு ராஜவீதிக்கு வருவதற்குள்
அரண்மனை முழுமையும் தீப்பற்றி எரிந்து சாம்பலாகிவிட்டது.
இதற்கு மேற்கோள்யாதெனில், தன்னைக்கொன்றுவிட வேண்டு
மென்று கருதியமனைவி பாஷாணத்தைக்கலந்து அடைசுட்டுக்கொடு
க்க அதைவாங்கிக்கொண்டு பட்டணத்துப்பிள்ளையானவர் அதன்ரக
சியத்தையுணர்ந்து அந்தஅடையை அவ்வீட்டின் ஓட்டின் கீழ்வை
த்துத் "தன்வினைதன்னைச்சுடும்; ஓட்டப்பம்வீட்டைச்சுடும்" என்று
சொல்லி வெளியில்வந்தமாத்திரத்தில் எவ்வண்ணம் அவ்வீடானது
தீப்பற்றி எரிந்து சாம்பலாகியதோ அவ்வண்ணமே மேற்சொன்ன
அரண்மனையும்வெந்து நீறாகியது. இதை ஊரார்கண்டு இம்மகாநு
பாவர் பரிசுத்தஆத்துமா வாகையால் இவர்விஷயத்தில் ஜாக்கிரதை
யாக இருக்கவேண்டும் என்று தெரியாதவர்களுக்கெல்லாந் தெரிவித்
தார்கள்.

பின்னர் அந்நகரைவிட்டு ஆக்கத்திற்சிறந்தவரும் ஊக்கத்தில்
நிறைந்தவரும் ஏக்கமுந்தூக்கமும் நீங்கினவரும் நீக்கமும்நோக்கமும்
ஓங்கினவரும் வாழுமிடமாகிய வாரணாசியென்னுங் காசிப்பட்டணத்
தைநாடிக்கங்கையில்நீராடி சிவபெருமானைச்சேவித்துசாதுக்களைவண
ங்கிவிவேகிகளுக்கிணங்கி அந்தக்ஷேத்திரத்தைவிட்டுப்புறப்பட்டுவரு

கிறமார்க்கத்தில் ஓரூரில் சில துலுக்கர்கள் சேர்ந்து பசுவின் கன்றைக்
கொல்ல முயல்வதைக்கண்டு ஜீவவதைசெய்கிறதைவிலக்கிச் சகலரும்
மெய்ஞ்ஞானத்தைத் துலக்கி அஞ்ஞானிகளின் மனதைக்கலக்கிப் பிரம்
மத்தி லொன்றுபட்டிருக்கும் நிலைக்குப் பலவந்தமாய் அனேகரைவ
ரும்படியாகச்செய்து பந்தபாசங்களை களைகொய்து அகமென்னும் வியாக்
கிரமத்தின்மே லம்பெய்து, அபிமசாபரர்கள்மீது அன்பெய்து, சகல
ஜீவர்கள்மீது கருணைமழைபெய்து, நக்ஷத்திரங்களிற்சிறந்த திருவோ
ணத்தைப்போலவும், கிரகங்களிற்சிறந்த சந்திரனைப்போலவும், பசுக்
களிற்சிறந்த காமதேனுவைப்போலவும், விருக்ஷங்களிற்சிறந்த கற்ப
கத்தைப்போலவும் மார்தரிற்சிறந்த தருமவானைப்போலவும், ஸ்திரீ
களிற்சிறந்த ஜீவகாருண்யத்தைப்போலவும், பூசையிற்சிறந்த மானச
பூசையைப் போலவும், விவேகத்திற்சிறந்த சாந்தத்தைப் போலவும்,
பிரம்மக்ஞானத்திற் சிறந்த கோபிசந்தன சாதுவானவர் அங்கு
கூட்டமாயிருக்கக்கண்டு அங்கு சென்று கூட்டத்துக்குட் புகு
ந்து நின்று அநியாயமிதென்று புகன்று நிற்கவே, பசுவின்
கன்று நாலுபேர் பிடிக்கநின்று கண்ணீரொழுக இன்று இவர்கள் நம்
மைக்கொன்று பல்லாற்கடித்துமென்று ருசிருசியெனவேபுசின்று இன்
புறுவர்களிதுநன்று. விணைப்போதல் நன்றன்று. நமக்குத் துணை
யாமொன்று. நாமறியாமல் தொன்றுசெய்த தீவினையாமென்று, இத
ற்கு சாக்ஷியோர்குன்று. இனி நாம் மனைதவென்று, சேரலாகுந் சிற்க
கமென்று, அருளென்னுஞ்சொற்களைப்புகன்று, பகவத்ஸ்மரணையோ
டுநிற்பதையும், அதைச்சூழ்ந்து துடுக்கர் எல்லாம் நிற்பதையும் கோ
பீசந்தனநாதர் பார்த்து, தேகமெல்லாம்வேர்த்து, கோதனத்தை மார்
புடன்சேர்த்து அபயர்தந்தேனெனப் போர்த்து கொல்வதழகலவெ
ஈர்த்துத் தன்னுயிரை அதற்குத்தாரைவார்த்து உயிர்பெற்று வா
ழெனக்காத்து இஸ்மாயில் என்பவன் தனக்குத்தோற்று ஓடிப்போ
கின்றதை நோக்கித் துலுக்கரைக் கொலைக்குள்ளாக்கி ஜீவகாருண்யத்
தைநீக்கி மோக்ஷமார்க்கத்தைப்போக்கி உன்வசப்பட்டவரைப்பாழா
க்கி ஈடேறுமற் கீழாக்கி நரகத்தேசேர்தற்காளாகச். செய்தாய். இம்மை
யேசாக்கி (சாக்ஷி) ஆதலாலுன்னை இப்போதேதூக்கி இவ்வனலிற்
போட்டுக்கரியாக்கி விடுவேண்டாரென்றேங்கி முகமீதோரறைவாங்கி
விடவே, இஸ்மாயில் என்பவன் ஏங்கி உயிர்போனதுபோற்றேங்கி
உம்மாலென்னுயிர் நீங்கிப்போதல்நன்றோ அருட்சீலனே! அறத்தாற்
சிறந்தபாலனே, கருணைக்கடற்கோர் கூலனே, சகலஜீவர்க்கு மனு

கூலனே, துடுக்கரைவெல்லுங்கோலனே, எனக்குக்காலனே, திரிசூல
னே, பரிபாலனே என்று தோத்திரம்புரிந்து மிகவும் பரிந்து அரு
வாயிருந்தோ ருருவாகிய ஓ அருட்சொரூபதர்மமே! ஓ பரப்பிரம
மே! இது நீ யறியாமர்மமே. இது முன்செய்தகர்மமே என்று தன்
னைத்தானே நிந்தித்துத் தாடிகளெல்லாம் வெளுத்து நிற்போரே!
இதன்கழுத்தை அருப்பீர். இதுமுன் கொழுத்து செய்துகொண்ட
தெழுத்து. அதனாற் படிமீதழுத்திக் காஜி கடவுளைவழுத்து மென்
பதைகேட்ட துடுக்கர், சொல்லுமுன் கொல்லுமுடுக்கர் அங்கேவந்
திருக்கும் சாதுவைநோக்கி ஓ ஐயா! சகல ஜீவர்களையும் மனிதரை
யும் மோகத்திற்காகவே கடவுள்படைத்தார். அதில் ஆடுமாடுமுதலா
கியவைகளை அவர்கள் புசிக்கவே உண்டாக்கினார். இப்படிக் கடவு
ளால் அனுப்பப்பட்ட வேதத்தில் முறையிடுகின்றது. இதோ இக்
காஜியும் மௌலியும் எங்கள் ஆதிவேதமானகுரானைத் தீர்க்கமாய்வா
சித்துச் சகலமார்க்கத்திலுந் தேர்ந்திருக்கிறார்கள. இவர்களை விட நீ
ரென்ன விசேஷமா யோதினவரோ? வேதத்தின் இரகசியத்தை
யறியாத உம்முடன் வாதுசெய்வதற்கிவர்களேபோதும். நீர் அகட
விகடஞ்செய்கிறீர் என்று நவின்றனர்.

இதைக்கேட்ட கோபீசந்தன சாதுவானவர் ஓ மாயாபூதமே!
நீ யுரைப்ப தபவாதமே! உனை நம்பினோர்க்கபாதமே! நீசெய்ததெல்
லாம் அநீதமே! நல்லோர்க்குமிகவும்பேதமே! விரோதமே! வெகுதே
சமே! மிகுகுரோதமே என்னையா வெருவச்செய்யவந்தாய்! கலியே நீ
இன்றைக்கானாய் பலியே. ஞானப்பூசை உண்மைவலியே, துடுக்கர்க்
கெல்லாம் புலியே, இப்போதுனக்கு நான்புலியே, சற்று முன்னடந்
தாய் கிலியே, என்முன் செல்லாதுன்வலியே, கொலைஞரைக் கொ
ள்ளைகொண்டநலியே, ஆணும் பெண்ணுமில்லா அலியே என்றுசொ
ல்லிக் கன்றைநோக்கி உனக்கிடர்வேண்டாமெனப் போக்கி வசுமஸ்த
கத்தின்மேல் தனதஸ்தத்தைத்தாக்கிக் கொற்றிக்குச்சுகமுண்டாக்கி
மார்புடனணைத்துக்கொண்டு ராமா ராமாவெனவிண்டு, என்ன கர்
மஞ்செய்தாய் பண்டு. ஆனாலும் பகவானை அண்டு, பயமில்லை என்
வாக்கல்லவிரண்டு இந்த யிஸ்மாயிலெனக்கோர் பெண்டு, வெட்டுதற்
குத் துரும்பின்துண்டு உனக்குச்செய்யச் சொல்லுகிறேன் தொண்டு
என்றங்கிருக்குமோர் கோலையெடுத்து வீசினார். அப்போதந்தத் தடி
யானது சரேலென்றெழும்பி வருவதால் இஸ்மாயில் மனங்குழம்பி

காஜியின் பின்னாலோடி நீங்களெல்லாங்கூடிக்கொடுத்துவிட்டீர்தாடி; ஆதலாலானீர்பேடி; ஆகாவிடில் நீண்டோடித் தடியைப்பிடியுங்கள் நாடி; கோபீசந்தனரைக் கொண்டாடி, இந்த வார்த்தைகளாடி, கொலைசெய்வோர்களைத்தேடி, மிகுதுரிதமாயோடிப்போகவே, முசல்மான்கள் யாவரும கடுஞ்சினமடைந்தவர்களாய எரிந்துபொரிந்து கோபீசந்தனரைப்பார்த்துக் கரத்தைப்பிடித்தீர்த்து அடாகோபீசந்தனு எங்கள் குலத்திலுற்பவித்தவிருத்தனை வருத்தப்படுத்தி, ஏனோட்டிவிட்டாய்? நீ கெட்டாய். கோதனத்தை அலால்செய்வதைத் தடுத்தாய். அனைவருமுண்பதைக் கெடுத்தாய். எங்களை வெல்லவோ சலந்தொடுத்தாய் அனேக துன்பங்களைக் கொடுத்தாய். நீ இங்கு வரவேண்டியகாரணமென்ன? எங்கள் மரபிலுதித்தவனன்றோ இக்கூட்டத்திற்குள் ளிருக்கவேண்டும்? நீ இந்துமதஸ்தனாக இருந்தும் எங்களுடன் உனக்கென்னவாது? நீ வந்தவழியைப் பார்த்துக்கொண்டுபோடாபோ என்றனர்.

கோபீசந்தனர் ஓ கொலைஞரே! ஜீவகாருண்யமில்லா வலைஞரே! ஓர் ஜீவனைப் பதைக்கப்பதைக்க வதைக்கலாமா? உயிர்நீங்கச் சிதைக்கலாமா? பஞ்சமாபாதகத்தில்முந்தினதுகொலையல்லவா? அதைநான் பலதரம்சொல்லவா? கொலைபாதகமொன்றுசெய்பவன் களவுகட்காமகுருநிந்தையுஞ்செய்தவனுமே. ஜீவகாருண்யத்தால் மோக்ஷமடையலாமே. ஜீவஹிம்சை செய்பவருக்கு முத்தியில்லையெனல் சத்தியமா? அசத்தியமா? ஐயையோ! ஓ தேறித்தெளிந்தகாஜியே! கல்வியில் வல்லமௌலியே! நீங்களாவதுபோதிக்கலாகாதா? உமக்கருளுண்டாகாதா! ஓர் பிராணியைக் கொல்லுவதுஞ் சந்தோஷமா? கொல்லென்றுரைப்பதும் நற்கோஷமாவெனப் பலபரிதாபவார்த்தைகளாடினர்.

காஜி, எங்கள் வேதத்தில் விதித்திருக்கிறபடியே அலால்செய்வதைக் கன்றின் கழுத்தைக்கொய்வதை மறுத்தலுனக்குத் தகவே தகாது. ஜீவகாருண்ய மொழிகளெங்கள் செவியிற் புகவேபுகாது. ஏனெனின், பசுவினுதிரஞ் சுண்டுதலாலுண்டாகும் பாலையுண்போர் தசையைப்புசிக்க லாகாதோவென, கோபீசந்தனர் தாயின்பாலையுண்ணும்சருவத்ராளும் அன்னையின்மேதைதனையுமுண்ணலாமோவென, காஜி,மானிடர்கட்கும் மிருகங்களுக்கும்பேதமில்லை. அன்றியும்மனிதருக்காகவே படைத்தமிருகங்களைக் கொல்லுவதாற் பழுதில்லவேயில்லையென, கோபீசந்தனர் சர்வபிராணிகளையும் சமமாகப்பார்க்கும் பகவான் பாரபக்ஷமாய்ப் பார்ப்பாரா? பாரபக்ஷமாய்க் காப்பாரா?

மிருகங்களுக்கிருக்கின்றவிவேகம்மானிடர்களுக்கிருக்கின்றதா? அனந்தயொருவரா லறிந்துகொள்ளத்தக்கதா? நம்மைப்போல் மிருகமும் யுக்தியுஞ் சக்தியுங் காட்டுமாயின் நம்மாற்கொல்லக்கூடுமோ? கொல்லென்று சொல்லக்கூடுமா? கோவாலல்லவோ பலதானியங்களும் வெகுமானியங்களும்பெறுகிறோம். பால்தயிர்நெய்மோர்முதலான துண்டுசுகமுறலால், சகாயஞ்செய்வதைக்கொல்லல்நலமோ? வதைத்தலால் உடமக்கென்னபலமோ? அல்லதாணவமலமோ? அலால்செய்தலே குலமோ? ஆச்சரியம்! தன்னுயிரைப்போல் மன்னுயிரைப்பார்க்கத்தேவையில்லையா? ஜீவகாருண்யம்மேலான தவமல்லவா? இதற்குத்தக்க மாறுத்திரஞ் சொல்லையா. சொல்லியென்னை வெல்லையா வென்றிக் கோதனத்தைக் கொல்லையாவென்றார்.

காஜி, கடவுளைத்துதித்து உயிர்வதைசெய்வதாற்பாபமில்லையெனா, கோபீசந்தனர் மனோவாக்குக் காயமென்னும்திரிகரணசுத்தியோடுங்கூடிக் கடவுளைத்துதிக்கவேண்டுமே யல்லது கொலைசெய்யும்போது துதிசெய்தல் மிகவும் பாதமெனா, காஜி, கடவுளைத்துதித்து அலால்செய்ததே புசிப்பதற்கு யோக்கியமானதன்றி மற்றதுகூடாதெனா, கோபீசந்தனர் நாற்கால் இருகாலுள்ள ஜீவர்களைக்கொல்லுவதால் அதன் கற்பத்துற்ற குட்டியும் முட்டையும் கொல்லப்பட்டதல்லவே யதைப்புசிக்கத் தகுமாவென்றார்.

காஜி, கருவிலுறுங் குட்டியையும் முட்டையையும்கொல்லக்கடவுள் விதிக்கவில்லையெனா, கோபீசந்தனர், நிருபமாய் நிஷ்களமாயிருக்கும் கருணாகரக்கடவுள் ஒரு பிராணியைப் பதைக்கப்பதைக்க வதைக்கும்படி கட்டளைகொடுத்துக் கருணாநிதிஎன்கிற தன் பேரைக்கெடுத்துக்கொள்வாரா? கொலைசெய்தோர் நரகத்திற்புகுவதைத் தடுப்பாரா? ஜீவரக்ஷணையை விடுப்பாரா? கொல்லக்கட்டளை இடுபவருக்குக் கருணாகரனென்கிற பேர்தகுமா? அவராக்கினைக்குட்படுவது நேர்மையாகுமா? ஓ காஜி! நான் சொல்லுவதைக்கேளும். அதாவது, ஜலம் அசரஜீவர்களுக்கும் சரம்ஜீவர்களுக்கும் ஆகாரமாகப் பகவான் சிருஷ்டிசெய்திருக்க,அதைவிடுத்து அதோகதிக்காளாக்கும் கொலைசெய்துண்ணக் கட்டளையிட்டார் என்றுரைக்குமொழி விபரீதமா யிருப்பதன்றி மிகவு மபராதத்திற்கும் ரௌரவாதி நகரத்தையடைவதற்கும் இடமாயிருக்கின்றதேயென்றார்.

காஜி, கடவுள் கொலைசெய்யும் கொடியமிருகங்களை யுண்டாக்கின காரணமேதெனா, கோபீசந்தனர், தன்தாயைப்புணரும் மிருகத்

தின்செய்கையைச் சாத்திரத்திற் பேசக்கூடுமோவென, காஜி ஜீவன் எல்லாவற்றிற்குமுண்டேயென, கோபீசந்தனர் சராசரங்களில் பேதமில்லையோவென, காஜி, ஜலமெல்லாம் ஜீவமயமாயிருக்கின்றதேயென, கோபீசந்தனர், ஈதுண்மையாகில் கொல்லுங்காரணமேதென, காஜி கொலைசெய்வது கொடியபாபமாகில் இந்துக்கள் பலியிடுவது பாபமல்லவோவென, கோபீசந்தனர், பாமரர்கள் இஷ்டகாமியார்த்த நிமித்தம் துஷ்டதேவதைகட்குப் பலியிடுகிறார்கள். அதுவுங்கொடியோர் செய்யுங் கொடுங்காரியமே. அவர்கட்கு நரகமே பிராப்தியாகுமென, காஜி, தேவதைகளிலும் இரண்டுவிதமுண்டோவென, கோபீசந்தனர், பிரமருத்திராதியர்கள் சிரேஷ்டதேவதைகளென்றும், காளிவராகிசத்திகள் துஷ்டதேவதைகளென்றும் சொல்லப்படும். அதில் துஷ்டதேவதைகளைப்போல் சிரேஷ்டதேவதைகள் பலியைக் கோராமல் தூபதீபநைவேத்தியங்களாற் சந்தோஷப்படுகின்றார்களென்றனர்.

காஜி, அசுவமேதாதி யாகங்களிற் கொன்றபிராணியின் அவிர்ப்பாகத்தை விஷ்ணுமுதலானோர்கள் இச்சிக்கவில்லையோவென, கோபீசந்தனர் பிரமம் தெய்வம் பூதம் பிதுர்மனிதனென்று ஐந்துவிதமுண்டு. அதில் வேதமோதல் பிரம்மயாகம். ஓமம்பண்ணுதல் தெய்வயாகம். பலியிடல் பூதயாகம். தர்ப்பணம் முடித்தல் பிதுர்யாகம். இரப்போர்க்குணவு முதலியனவீதல் மனிதயாகம் என்ற இவைகளில் முறையிடுகின்றதனால், பலிவற்றுக்கொள்ளுதல் பூதத்தின் கொள்கையாம். பிரம்மாதிதேவர்கள் மந்திரோச்சாடனங்களால் மரித்த ஜீவனை அக்கினிஷ்டோமங்களாற் பஸ்பமாக்கி அப்பூதியையும் மற்ற வஸ்துக்களையும் அவிர்ப்பாகத்தைக்கொண்டு பின்னுமச்சீவனை மந்திரபலத்தால் எழுப்பவேண்டும். அல்லது அதற்கு மேலாண்டபதவியைக் கொல்லவும் எழுப்பவும் வல்லவர்கள் பூதயாகஞ் செய்யவேண்டும். யாகமந்திரஞ் செபிக்கும் பூசுரன் அந்தயாகம் முடியுமளவும் நித்திராகாரமின்றி இருக்கவேண்டுமென்றும், பூதயாகம் காமியார்த்தத்தின் நிமித்தமே என்றும், மதுமாம்சத்தின்மேல் இச்சையுள்ளோர்க்கே உரியதென்றும், இதற் குடன்படுவோர் மாயாசம்பந்தமுடையவர்களே என்றும், இதையெவ்வளவு சிறப்புடன் செய்தாலும் சாகினி டாகினி முதலான பூதங்கள் களிப்படையும் பூதயாகமே என்று சொல்லும். வேதத்தின்கருத்தோ பலியிடும் யாகத்தை விலக்கியதன்றி செய்யச்சொல்லவில்லையே. உங்கள் குரானிலோ மாயாரகிதமாய் நிருபமாய் நிர்ப்பேதமா யிருக்கும் பரப்பிரம்மத்தைத் தியானித்து உயிர்வதைசெய்தால் பாபமில்லை

என்றும் இதுகடவுள்கட்டளையென்றும் உரைக்கின்றதே! அதைமெய் யென்று நம்பி பேதமையுடைய மானிடர்கள்கொல்லும் புழுவைப் போல் நாளொன்றுக்கு அனேகங் கோஹத்திகளைச்செய்து நிரயத் துக்காளா யிருக்கிறார்களே! இந்துக்கள் ஆயிரம்வருஷங்களிலோர் யா கஞ்செய்வது அரிதா யிருக்கின்றது.

நீங்களோ அரைநாழிகையில் ஆயிரங்கோக்களைக் கொல்லுகிறீர் கள். அன்றி பசுவைத்தானு வதைசெய்துண்ணவேண்டும்? கோமே தமாதியாகங்களைச் செய்வோர்க்கு மாயாசம்பந்தமான லோகங்களின் பிராப்தியேயல்லது மோட்சமில்லையென்றும், சுரபியானது பயிர்தி ன்னல் முதலாகிய தீங்குசெய்யுமாயின் அதை வாயாலதட்டியோட் டவேண்டுமென்றும், கையாற்றட்டி யோட்டக்கூடாதென்றும் ஓர் வேளை தட்டியோட்டினால் அதன் தேகத்திருந்து ஒருரோமமுதிரு மாயின் அதனால் நிரயத்துக்காளாக வேண்டுமென்றும் ஆதிவேதத் தில் முறையிடுவதே அல்லாமல் அசரமான மாம்ஸத்தைப்புசிக்கவே ண்டா மென்று ஆதாமுக்குத் திருவாய்மலர்ந்தருளிய கருணாலயன் அலால் செய்யுங்களென்றும் செய்யும்போதென்னைத் துதியுங்களெ ன்றுந் துதித்தால் பாபமுமக்கில்லையென்றும் உரைத்திருப்பாரா? வாயில்லாயேைழமிருகங்களை வெறுப்பாரா?கொலைபாதகமொருவரை விட்டு நீங்குமா? அதிலும் கோஅத்திகொடிய நரகத்திலாழ்த்தாமல் விடுமா? ஐயையோ! உங்கள் குரானில் இவ்வநீதத்தைச்சொல்லி யிரு ப்பதன்றி இஸாக்கென்பவனுக்குரிய வேதத்தில் நிர்க்குணமாய் நிர் மலமாய் நிராங்காரமா யிருக்கும் பராபரத்துக்கு மிருகங்களைப் பலி யிடவேண்டுமென்றும், அப்படி பலியிடுவதால் மாந்தர்களின் பாபவி மோசனமாய் பரிசுத்த மாவார்களென்றும், இதுதேவனுடைய கட் டளையென்றும் சொல்லியிருக்கின்றதே. அனியாயம்! மிருகங்கள் பய ன்படுவதென்ன? மனிதர் பரிசுத்தமாவதென்ன? அந்தோயிதைமெய் யென்றும், தேவனுடையகட்டளையென்றும் நம்பலாமா? நம்புவோர் மோட்சமடையப்போமா? பூதமேற்றுக்கொள்ளும் பலியைக் கருணா சாகரனை பரமேசுவரர் ஏற்றுக்கொள்வாரா? மிகவும் பரிசுத்தமான பரப்பிரம்மம் மிகவும் அசுத்தமான உதிரத்தை யிச்சிப்பாரா? கொலை செய்யுங் கொடியபாவிகளை ரக்ஷிப்பாரா? அன்றி கொலைசெய்யவு ம் பலியிடவும் உண்டாக்கியகட்டளை தீனதயாபரனை பரமேசுவரர் இட்டகட்டளையா? ஆதாமைக்கெடுத்த பைசாசத்தின் கட்டளையா? அயேச்சையுள்ள மானிடர்கள் ஏழுதிவைத்த கட்டளையா? இதை

பதைப்பார்த்து அருகில்வந்தென்னை ஆதரவுசெய்து நீயார் உனக்கிவ்விதத் துன்பமேன் வந்ததென்று வினவ, ஓ ஸ்வாமி! நான் வேதபாராயணஞ்செய்யும் வேதியன். என்வரலாறு இவ்விதமென மேல் நடந்தயாவுஞ் சொல்லவே, அத் தபோதனன் மறையோனுயிருந்தும் மாமிசத்தை இச்சூலதாரக்குத்தித் தூரமாயெறிந்துவிட்டார். பின்பு முட்புதரில் விழுந்த நான்கதறியழுது ஓ ஸ்வாமி! யான்செய்தவினை தீரவும் சீக்கிரம் என்பிராணன் நீங்கவுட கருணைபுரியுமையாவென்று தோத்திரஞ்செய்யும்போது அக்கருணாசாகரனான முனிசிரேஷ்டன் யாதுகாரணத்தாலோ அதிசீக்கிரமாகஎன்னருகிலோடிவந்து ஓ பிராமணோத்தமா யான்செய்த குற்றத்தை யன்னியும். தவத்துக்குஜீவகாருண்யமே விரதமெனத்தெரிந்தும் உன்றீவினையானதெனக்கு மூனிவுவரும்படியாகச்செய்து உனக்குற்றபாபத்திலெனக்குப் பாதிவந்தடைந்தது. அதைநீக்கிக்கொள்ளும்பொருட்டு யான் கங்காதீரத்துக்குத் தவஞ்செய்யப்போகிறேன். உனக்கேதாவது உபதேசஞ்செய்வேனாகில் மற்றைப்பாதிபாவமும் நானே யேற்றுக்கொள்ளவேண்டியதாகும். இனியுன்பா லரைக்கணமுந் தங்கேனென்று ஓ காசிவிசுவநாதா! பூதகணநாதாவென் றுரைத்துக்கொண்டே வாரணாசியைநோக்கிஓடத்தொடங்கினார். உடனே என்பிராணனுமக் காசிவிசுவநாதரைதியானித்துக்கொண்டே உடலைவிட்டுநீங்கிக் காசியையடைந்து புண்ணியஜென்மமான கோவின்கர்ப்பத்திற் பிரவேசித்து பத்துமாதபரியந்தம் விசுவநாதரைப்பூசித்துப் பின்பு பூவுலகிற்பிறந்து யான்மறந்து மாமிசத்தை இச்சித்த குற்றத்தால் இத்துடுக்கர்கையிலகப்பட்டுக் கக்கசத்துக்குட்பட்டு நிற்கும்வேளையில் பிரம்மமே ஒருருவான நீர்வரஉம்மைத் தெரிசித்துப் பூர்வக்ஞானம் பிறந்து கண்ணீர்விட்டழுதேன். கடவுளையுந்தொழுதேன். பின்புமது அஸ்தமென்மஸ்தகத்தின்மேல் வைக்கவே எல்லாப்பாபங்களும் நீங்கிப் பரிசவேதியால் நவலோகங்கள் களங்கம்நீங்கிப் பசும்பொன்னாவதுபோலப் புண்ணியவானானேன். ஓ பரமபுருஷா, பரமசொரூபா, என்மேலுமக்குக் கருணைவந்தகாரணம் முற்பிறப்பில் பிராணன் நீங்குங்காலத்தில் தவயோகியின் தெரிசனங்கண்ட பலனல்லவோ? இனிநான் மோட்சவாழ்வைப்பெற்றேன். பாசபந்தங்களற்றேன். ஓகுருபத்தியிற்சிறந்த பிரக்யாதரே! பிரம்மாநந்தநிஷ்டையிற்றேர்ந்த அவதூதரே! ஜீவகாருண்யத்தை என்றுங் கைவிடாதே. ஜீவஹிம்சை செய்வோர்களைத் தொடாதே. காருண்யமில்லார்க் குன்பாதங்கொடாதே என்ற வாக்கியங்களையுரைத்து மாயமாய்மறைந்து பரமபதத்தையடைந்தது.

தித பரப்பிரம்மத்துக்கிடல் மாயாசம்பந்தமன்றி ஞானசம்பந்தமல்ல வேயல்ல. எப்படியெனில், எள்ளுக்குள்ளெண்ணெயைப்போலவும், பாலுக்குள் வெண்ணெயைப்போலவும் பரிபூரணமாய் நிறைந்திருக்கும்நிருபநிராங்கார நிர்விகார நிர்மல நிரதிசயானந்தக்கடவுளுக்குப் பலியிடல் கொடியசெய்கையல்லவா? இதைப் பலதரஞ்சொல்லவா? உங்கள்தாயாதிகளான இஸாக்மதத்தோர் பராபரமான பரிசுத்த பரமேசுவரனுக் கோரோர்காலத்தில்நரபலியுமிடுகிறார்கள். அதுவேபூதத்தின் செய்கையெனக்காட்டப் போதுமான சாட்சியாயிருக்கின்றது. துஷ்டதேவதைகளுக்குப் பலியிடவும் கடவுளுக்குப் பலியிடவும் நேரிட்டகாரணம் நரகம்புகவும் பலர் வேண்டியதைக் குறித்தேயாம். "நோன்பென்பது கொன்றுதின்னாமை" பரமாத்மா சர்வஜீவாத்மா "அயிம்ஸா பரமோதர்ம்ம:"என்னும நீதிவாக்கியப்படி தன்னுயிரைப்போலமன்னுயிரைப் பார்த்தலே தவம் என்கிற வாக்கியங்களை நன்றாயோசித்துப்பாரும். குரானில் நான்காம்வகுப்பை வாசித்துப் பாருமென்றுரைத்து, ஓ காஜி! கொலைசெய்வோருக்குக் கொடியநரகமென்பதற்குமாட்சிமையான சாக்ஷிகொடுக்கிறேன். பாருமென்று அக்கன்றின் மஸ்தகத்தின்மேற்றனதஸ்தத்தை வைத்து ஓ கொற்றியே! கொலைசெய்வோர்களுக்குகொடியநரகம் பிராப்தியாதல் சத்தியமா அசத்தியமாசொல்வாயென்று வினவினன்.

அதற்கு அக்கோதனமானது கோபிசந்தனரது உபயபாதங்களின்மேற்றன்தலையைச்சாய்த்து வந்தனஞ்செய்து கண்ணீர்விட்டழுது ஓ சுவாமி! என்னுடைய சரித்திரத்தைச்சற்றேகருணைகூர்ந்து கேட்டருள்வீரேல் தேவரீர் வினவுக்குப்போதுமான சாக்ஷியாகும். நரகமென்பதுவேறிடத்திலில்லை. தசைஎலும்பு நரம்புதோல் மயிர்மச்சை மலசலம் பீளைமுதலானவைகளும் நிறைந்திருக்கும் இத்தேகமே நரகமென்னப்படும். இதற்குற்ற குன்மம், குஷ்டம், க்ஷயம், வாதவிரோதம் முதலான கொடியரணவியாதிகளே எமதண்டனையெனச் சொல்லப்படும். ஈதுமக்குத்தெரிந்ததே. இனியென்வரலாற்றைச்சொல்ல வெகு ஆச்சரியமும் பெருந்துக்கமுமாயிருக்கும். அதாவது நான் முற்பிறப்பில்மிகவும் கற்றறிந்த பிராமணனாகும். நானோர்காலத்தில் இமயபர்வதத்தின் சமீபமாக ஓர் காரியார்த்தமாய்ப்போகையில்அங்கு சிலமாந்தர்களோர் மானைக்கொன்று அதன்தசைகளை வகிர்ந்து பங்கிட்டுக்கொண்டிருந்ததைக்கண்ட யென் கண்களின் வழியாய் மாயாசம்பந்தமான மனம் வெளிப்பட்டந்த அரிணத்தின் மாமிசத்தின்மே

பதைப்பார்த்து அருகில்வந்தென்னை ஆதரணைசெய்து நீயார் உனக்கிவ்விதத் துன்பமேன் வந்ததென்று வினவ, ஓ சுவாமி! நான் வேத பாராயணஞ்செய்யும் வேதியன். என்வரலாறு இவ்விதமென மேல் நடந்தயாவுஞ் சொல்லவே, அத் தபோதனன் மறையோனுமிருந்தும் மாமிசத்தை இச்சூலத்தாற்குத்தித் தூரமாயெறிந்துவிட்டார். பின்பு முட்புதரில் விழுந்த நான்கதறியழுது ஓ ஸ்வாமி! யான்செய்தவினை தீரவும் சீக்கிரம் என்பிராணன் நீங்கவும் கருணைபுரியுமையாவென்று தோத்திரஞ்செய்யும்போது அக்கருணாசாகரனான முனிசிரேஷ்டன் யாதுகாரணத்தாலோ அதிசீக்கிரமாகவென்னருகிலோடிவந்து ஓ பிராமணோத்தமா யான்செய்த குற்றத்தை யன்றியும். தலைத்துக்குஜீவகாருண்யமே விரதமெனத்தெரிந்தும் உன்தீவினையானதெனக்கு முனிவுவரும்படியாகச்செய்து உனக்குற்றபாபத்தி லெனக்குப் பாதிவந்தடைந்தது. அதைநீக்கிக்கொள்ளும்பொருட்டு யான் கங்காதீரத்துக்குத் தவஞ்செய்யப்போகிறேன். உனக்கேதாவது உபதேசஞ்செய்வேனாகில் மற்றைப்பாதிபாவமும் நானே யேற்றுக்கொள்ளவேண்டியதாகும். இனியுன்பா லரைக்கணமுந் தங்கேனென்று ஓ காசிவிசுவநாதா! பூதகணநாதாவென் றுரைத்துக்கொண்டே வாரணாசியைநோக்கிஓடத்தொடங்கினர். உடனே என்பிராணனுமக் காசிவிசுவநாதரைதியானித்துக்கொண்டே உடலைவிட்டுநீங்கிக் காசியையடைந்து புண்ணியஜென்மமான கோவின்கற்பத்திற் பிரவேசித்து பத்துமாதபரியந்தம் விசுவநாதரைப்பூசித்துப் பின்பு பூவுலகிற்பிறந்து யான்மறந்து மாமிசத்தை இச்சித்த குற்றத்தால் இத்துடுக்கர்கையிலகப்பட்டுக் கக்கசத்துக்குட்பட்டு நிற்கும்வேளையில் பிரம்மமே ஒருருவான நீர்வரஉம்மைத் தெரிசித்துப் பூர்வக்ஞானம் பிறந்து கண்ணீர்விட்டழுதேன். கடவுளையுந்தொழுதேன். பின்புமது அஸ்தமென்மஸ்தகத்தின்மேல் வைக்கவே எல்லாப்பாபங்களும் நீங்கிப் பரிசவேதியால் நவலோகங்கள் களங்கம்நீங்கிப் பசும்பொன்னாவதுபோலப் புண்ணியவானுனேன். ஓ பரமபுருஷா, பரமசொரூபா, என்மேலுமக்குக் கருணைவந்தகாரணம் முற்பிறப்பில் பிராணன் நீங்குங்காலத்தில் தவயோகியின் தெரிசனங்கண்ட பலனல்லவோ? இனிநான் மோட்சவாழ்வைப்பெற்றேன். பாசபந்தங்களற்றேன். ஒகுருபத்தியிற்சிறந்தபிரக்யாதரே! பிரம்மாநந்தநிஷ்டையிற்றேர்ந்த அவதூதரே! ஜீவகாருண்யத்தை என்றுங் கைவிடாதே. ஜீவஹிம்சை செய்வோர்களைத் தொடாதே. காருண்யமில்லார்க் குன்பாதங்கொடாதே என்ற வாக்கியங்களையுரைத்து மாயமாய்மறைந்து பரமபதத்தையடைந்தது.

கேட்டீர்களோ சித்தர்களே! இவ்விதமாகச்சொல்லி அர்த்தகோதனம்மறைந்தபின் அங்கிருந்த பலரும் கோபீசந்தனரும் தன்றாக்குண்டான பாக்கியத்தைக்குறித் தானந்தபரவசராய்த் தன்னைமறந்து சற்றுநேரமிருந்து பின்புதெளிந்து தோத்திரஞ்செய்யுங் காஜிமுதலானவர்களைநோக்கிக் கோபீசந்தனர் ஓ சீலர்களே! கொற்றியுரைத்த வாக்கியங்களைக் கேட்டீர்களோ? ஜீவகாருண்யத்தைக்குறித்து முற்காலத்திலோர் விசித்திரமானகதை நடந்திருக்கின்றது. அதென்னவெனில், நேபாளதேசத்துக்கிடையிலிருக்கின்றதோர்பட்டினத்துக்கிறைவனும் அமைச்சனும் தன்னகருக்கிருகாத தூரத்திலிருக்கும் ஓர்பத்திரகாளியின் கோயிலுக்கு இரவில் இரண்டுஜாமம் கழிந்தபின்னிருவரும் சென்று காளியைப்பூசித்துத் தங்களிஷ்டகாமியார்த்தத்தை முடிப்பிக்க வேண்டுமென்று பிரார்த்தனைசெய்துகொண்டேவந்தார்கள். இப்படிப்பன்னிரண்டு வருஷங்கள்கடக்க ஒருநாள் பத்திரகாளி நராதிபன்முன் பிரசன்னமாகி ஓ அரசனே இக்கணத்திலெனக்கோர் நரபலிகொடுப்பாயாகில் உன்னிஷ்டகாமியார்த்தம் முடியுமென்று நவின்றனள்.

அரசன் அமைச்சனைநோக்கி ஓ மதிமந்திரி இதற்கென்ன செய்யலாமென, மந்திரியானவன் நாம்நகரத்திற்குப்போய் கொண்டுவருவதற்குள் சூரியோதயமாகும். ஆகையால், தடையின்றி என்னைப்பலிகொடுத்து உமதிஷ்டத்தைநிறைவேற்றிக்கொள்ளுமென்றுகூற, பார்த்திபன் நாமிருவருமல்லவோ சுகமனுபவிக்கப் பன்னிரண்டுவருஷமாய்ப் பூசித்துவந்தோம். அப்படியிருக்க, நீயிப்படிச் சொல்வது தகாது. வேறுமனிதனையே தேடவேண்டுமென, அமைச்சன் இப்போதிங்கிருப்பது நாமிருவரன்றி வேறுமனிதரில்லை. என்னசெய்யலாமென்றனன். பூபதி அர்ச்சனைசெய்யும் அர்ச்சகனிருக்கின்றான். அவனைப் பலியிடுவோமென மந்திரி ஸ்திரீஹத்தியிலுஞ் சிசுஹத்திகொடியது. சிசுஹத்தியிலுங் கோஹத்திகொடிது. அதிலுங்குருஹத்திகொடியது. இதனிலும் பிரம்மஹத்தி பொல்லாதென்றுரைக்கும் நீதிநூலைக் கற்றறிந்த நாம்பிரம்மஹத்திக்குட்படலாமோவென, நரேந்திரன் நீர் சொல்லுவது நிச்சயமாகிலும் விருத்தப்பிராமணனைக் கொல்வதால் நேரும் பாவத்துக்குப்பதில் அவன் தனயனுக்கு நமக்குக்கிடைக்கும் ராத்திற்பாதி கொடுப்பதால் விமோசனமாகாதோவென, மந்திரி அர்ச்சகப்பிராமணனையழைத்து இராஜன் கருத்தை யறிவித்தனன். வேதியன் அரசனையுமமைச்சனையு மொன்றுனாயின் நமது சொற்படி நடப்பதினிதென்றுன்னி ஒன்றுஞ் சொல்லாமல் மௌனமாயிருந்தனன். பின்னர் நிருபன் ஓ பூசுரனே! எங்கள் மொழிக் கிசைவுறவு

யாயி னுனது தனயனுக்கு என்னுடைய ராச்சியத்திற்பாதி கொடுப்பதன்றி இப்போதுபெறும்வரத்திலும் பாதிகொடுக்கிறேன். மறக்க வேண்டாமென, ஆதிவருணன் இனிநமக்கு முடிவுகாலம் வந்ததாயினும் நெடுநாளா யன்புடன் பூசித்துவரும் என்னைத்தானு இக்காளி பலிகொள்ள வேண்டுமென் றுன்னிக் கோயிலிற்பிரவேசித்துக் கோபமேலிட்டால் காளியின் கன்னத்திலறைந்து அடிசாமுண்டி! சண்டிகை! காளிவேதாளி! திரிசூலி! மிகுநீலி! ஏழாண்டிலிருந்துஎழுபதாண்டுவரையிற்பூசித்த என்னைத்தானு பலிகொள்ள ஆசித்தாய்! நீயுமுன் கோயிலும் பாழாய்ப்போகவென்றிரைந் தறைந்தனன்.

அம்மறையோன்முன் காளிபிரசன்னமாகி ஓ விப்பிரனே! நீ முற்பிறப்பில் சூத்திரனாயிருந்துஉன்னிஷ்டகாமியார்த்தமாய் இரண்டாடுகளைக்கொண்டுவந்தென்முன்னிறுத்தி வாளாலிரண்டையும் ஒரே வெட்டாய்வெட்டி மடித்தாய். அவ்விரண்டாடுகளும் இவ்வூருக்கரசனும் அமைச்சனுமாகியுதித்துப்பதிலுக்கு இப்போதுன்னைவெட்டத் துணிந்தார்கள். ஏககாலத்திலவர்களிருவருமுன்னைப் பலிகொடுக்காவிடில் இன்னமோர்ஜென்மமெடுத்து நீ பலியாகவேண்டியதாய்நேரிடும். அதனாலேயே நீ யெனக்குப்பலியானாய். வீணாய் கோபஞ்செய்யாதே யென்றுரைத்து மறைந்து எதாவுருவாய்நின்றாள். உடனே அம்முப்புரிநூலோன் ஆலயத்திலிருந்து வெளிப்பட்டு அரசனையும் அமைச்சனையும்நோக்கி நீங்களிருவரும் ஏககாலத்திலென்னை வெட்டுகிறோமென்று வாக்கைக் கொடுத்தால் உங்களிஷ்டத்துக்கு உட்படுகிறேனென, அமைச்சன் அரசனைநோக்கி ஓ சுவாமி ஆடுகளிரண்டு அரசனும் அமைச்சனுமானதும் அவைகளைவெட்டினவன் அந்தணனாய்ப் பிறந்ததும் ஏழுவயதிலிருந்துஎழுபதுவயதுமட்டும்பூசித்தும்கொலைபாதகம்விடாமல் அவ்வாட்டின் பிறப்பான நம்மிருவரால் பலிக்குட்படும்படியாய் நேரிட்டதே. ஐந்தறிவுள்ளமறையோனைக் கொன்றால் சூதனாலுண்டாகும் பாவம்நம்மை எக்கதியிற்கொண்டுபோய்விடுமோ ஆதலால்நமக்குவரமும்வேண்டாம்வாழ்வும்வேண்டாமென் றுரைப்பதைக்கேட்ட அதிபன் நம்மாலிம்மறையோன் சாகாமற்போனாலும் இனியோர் காலத்திலேனும் இறப்பதுநிச்சயமாதலால் துணிந்துவெட்டுவதேநலம். பின்பிவ்வேதியன் நம்மைக்கொல்லாமற்செய்துகொள்ளுமுபாயமுரைக்கின்றேனென் றமைச்சனைச்சம்மதிக்கச்செய்து வேதபிராமணனை இருவரும்பிடித்துஒரேவெட்டாய்வெட்டிக்காளியைத் துதிசெய்தார்கள்.

உடனே திரிசூலி பிரசன்னமாகி என்னவரம்வேண்டுங் கேளுங்களென்றுரவில, அண்ணல் எனக்கிவ்வந்தணனையெழுப்பவரந்தரவேண்டும் என்மந்திரிக்கு இஷ்டகாமியார்த்தத்தைக்கொடுமென்று பணியவே அதிபனுடைய புத்தியைக்குறித்தம்மாதங்கி மிகவுஞ்சந்தோஷமுற்று இரண்டுவரமும் தந்தேன் இனியோர் வரங்கேளென.

பூபாலன்வணங்கி ஓ அம்மணி! எங்கள்மூவர்க்கும் மோட்சபாக்கியங் கொடுப்பாயென, அக்கஙகாளிஅப்படியேகொடுத்தேன். இன்றுடனிம்மந்திரத்தைத்துதித்துக்கொண்டுவாருங்களென்று ஓர்மந்திரத்தை உபதேசிந்தும்மறையோனையுமெழுப்பித்தந்து மறைந்துபோயினாள். பின்பம்மூவரும் ...ளிக்கடலிலாழ்ந்து தங்கள் நகரத்தையடைந்து தம்பட்டணத்தில் ...ராவது ஜீவயிம்சை செய்வார்களாகில் அவர்களைக்காளிக்குப்பலியிடுவேனென்றுபறையறைவித்து ஜீவகாருண்யவிரதத்தைக் கைகொண்டு மூவரும் ஒற்றுமையாகவிருந்து இறுதியில் மோக்ஷவீட்டையடைந்தாகள். ஆதலால் ஜீவகாருண்ய விரதமேமேலானவிரதமென் றுரைக்கத் தகுமெனக்கேட்ட துலுக்கர் கோபிசந்தனருரைத்த மொழிகளெல்லாம் உத்தமமாகவே யிருக்கின்றதென்றன்னி ஜீவயிம்சைசெய்வதற் கிடைந்திருந்தார்கள். ஆதலால் ஓ சித்தர்களே ! சாதுசத்குணங்களே பூரணமாய்த் திரண்டோருருவாகிவந்த கோபிசந்தனருரைத்த ஜீவகாருண்யமொழிகளைக் கேட்பவர்க் கிம்சைசெய்யும்படியான மனம்ஜெனிக்குமோ ஜெனிக்காது. ஒருக்கால் ஜெனிக்குமாயின் தீயநரகிற் காளாவார்களென்று நாபாஜிசித்தருரைத்துப் பின்னுஞ் சொல்லத்தொடங்கினார்.

இந்தப்படியாக சோபிசந்தன சாதுவானவர் துலுக்கருக்கு அனேக நீதிமார்க்கங்களையோதி கோஹத்தி செய்வதை மறுத்துத் துலுக்கர்கள்கொண்டாடிப் பணியவேற்று விடைபெற்று யாகஞ்செய்து புசித்துக்கொண்டே தன்னாசிரியனைச் சேவிக்கவேணுமென்று அவர் மிகுதிகொண்டு வருகிறபோது யெதிர்த்துக்கொண்டு வருகிற ஞானபோதனும் அவதூதனுமான மச்சேந்திர நாதரைக்கண்டுபணிந்து அவர்திருவடியை நயனங்களிலணிந்து ஓ சுவாமி! உலகிலுள்ளமானிடர்களுஞ் செய்யாக் கொடும்பாவமாகிய காமாந்தகார குகைக்குட்பட்டு ஞானநிலைகெட்டு உலகர்தூஷிக்க உடலெடுத்தேனேயென்று பலவாறாக மொழிந்து மச்சேந்திரநாதரைச் சூழ்ந்திருக்கும் சிஷியர்களைப்பார்க்க நாணமடைந்து மச்சேந்திரநாதர் முன்னிற்பதற்கி

டைந்து அவரை வலம்வந்து பணிந்து ஓ கர்த்தனே! தங்களுடைய பரிபூரண கடாக்ஷம்பெற்ற அடியேன் கொடியோனாகிக் காமவலையிற் சிக்கி அசங்கிதமான விஷயானந்தத்திற்சொக்கிப் பிரம்மஞானத்தை மறந்து உபரதிவைராக்கியமிறந்து துர்க்குணங்கள்நிறைந்து மாயத்தி ன.ரயில் மறைந்து சொல்லுதற்கரிய துன்பத்தாற்குறைந்து பாமர னைகாரணமென்னமோ தெரியச்சொல்லும் சுவாமியென்றிரந்துகூறும்சாதுவை மச்சேந்திரநாதர் கருணைகூர்ந்து ஓ பரமபக்தனே! ஜீவனைது முன்னே கிரேதாயுகத்தில் பகவான் ராமாவதாரமெடுத்துப் பூர்வஞானம் மறந்து மிகவுமயர்ந்து வசிஷ்டராற்றெரிந்து சகல சந்தோஷங்களுமறந்து சங்கல்பவிகல்பங்களைத்துறந்து அனேகாளா சுபுரிந்து நாட்டிற்றருமத்தையும் காட்டிற்றவத்தையும் நிலைநிறுத்தி னதாஸ்தானமடைந்தார்.

ஆதலால் மாயாசம்பந்தமானஜென்மமெடுப்பவர்க்கெல்லாம் துக்கமே பலிதமாகும். நீரும் மாயையின் சாமர்த்தியத்தாலேயே விஷய போகத்தை யிச்சித்து வெகு அவஸ்தைக்குள்ளானீர். காமத்தைவென்றவர்கள் மூவுலகத்திலுமில்லை. நீரிதைப்பாராட்டி சஞ்சலப்படவேண்டாம். இதற்காமனம்வருந்துகிறீர். முன்னம்நாரதர்பிரமித்தசரிதையைக் கேட்பீராகில் வெகு ஆச்சரியப்படுவீர்.

அதாவது; முதல்யுகமாகிய கிரேதாயுகத்தில் யாழ்வல்லோனை நாரதர் உபாதியினல் சுரநாட்டைவிட்டுக் காட்டையடைந்து பதினான்கு வருஷங்கள் தவஞ்செய்து காமாதிகளை வென்றேமெனச் சிறிது கெர்வமடைந்து சொர்க்கலோகத்திற்குச்சென்று தவமேமேலானதெனப் புகன்று அதைவிட்டு சத்தியலோகமடைந்து சதுர்முகனைநோக்கி நாட்டிலிருப்பதைப்பார்க்கிலுங் காட்டிலிருப்பதேஉத்தமமென்றறைந்து கடலைக்குச்சென்று பரமசிவனைப்பணிந்து காமதகனஞ் செய்தவர்க்குக் காடே திவ்யஸ்தானமென நவின்று வைகுந்தத்தை அடைந்து மகாவிஷ்ணுவைப்பலவிதமாகத்தோத்திரம்புரிந்து ஆநந்தமேலீட்டால்நடித்துத் தன்னைமறந்து ஓமாயாவிசாலா! வைகுந்தவாசா! சர்வேசா! ஜெகதீசா! உம்முடையமாயைதவத்திலிருப்போரை என்னசெய்யுமென்றுவினவ, பகவான் சுழுத்தியிலிருக்கும் சுகம் கனவிலிருப்போர்க் கெப்படிவருமென்றுகேட்க, நாரதர் எப்பொழுதும் நனவிற் சுழுத்திநிலையிலிருப்போர் சாக்ரசொப்ன சேஷ்டைகளால் வேஷ்டையையடையமாட்டார்களென, பகவான் சாக்ர சுழுப்திநிலையை எப்போதும் மேவியிருத்த லரிதல்லவாவென,நாரதர்சக

ஜ்ஞானமுள்ளோர் சந்ததமுஞ் சமாதிநிஷ்டையிலேயே யிருப்பார்க
ளென, பகவான் நாரதரைப் பரிசோதிக்கும்பொருட்டு ஓ நாரதமகா
ரிஷியே! உம்மைப்போன்ற இம்மஹாஞானிக ளிவ்வுலகிலுண்டோ? உம்
மைக் காமதகனஞ்செய்த சங்கரபிடற்றன்னையென்றேயுரைக்கவேண்
டுமெனத்துதிக்க, நாரதரகமடைந்து அடியேன் காட்டிற்குப்போய்த்
தவஞ்செய்துநாள்கழிக்கிறேனென்றுவணங்கிக் கானகத்தைநாடிச்செ
ன்றார். அப்போதுபகவான்நாரதர்போகுமார்க்கத்தில்மாயையால் ஓர்
பட்டணமுண்டாகி அந்நகருக் கிறைவனுக்கோர் அழகுள்ள கன்
னியிருக்கவும், அப்பெண்ணுக்கு சுயம்வரம்நடக்கவும் ஐம்பத்தாறு
தேசத் தரசர்களு மங்குவந்திருக்கவும், அந்நங்கையின்றந்தை சோதி
டம்பார்த்து எந்தமன்னனைக் கைப்பற்றி மாலையிடுவாளெனக் கேட்
கவுஞ்செய்ய, அப்போது நாரதர் கும்பிடப்போனதெய்வம் குறுக்கே
வந்ததுபோற் களித்து அச்சுந்தரியை யுற்றுப்பார்த்துப் பரிவுகொண்
டு பிரமித்து ஸ்தம்பித்து மனமுருகி அன்புபெருகி இவள் பூலோகப்
பெண்ணல்லவென்றுன்னித் தான்மணஞ்செய்யநண்ணி அரசனைநோ
க்கி மிகவும் விசுவாசித்து ஓ மகாராஜனே! இப்பெண்ணுக்குரியநா
யகன் தேவலோகத்திலிருந்தினியோர் முகூர்த்தத்துக்குள் வருகின்
றான். உங்களுக்குத்தரிசனந்தருகின்றான். அவனுக்கே உமது கன்னி
கையைக்கொடுத்து வதுவைசெய்வீரென்றறைந்தார்.

பின்னும் அம்மாதைநோக்கி ஓபெண்கள்நாயகமே! உனக்கெவ்வி
தபுருஷன்மேல் இச்சையென்றுவினவ, அதற்கவ்வனிதை ஓ முனிசி
ரேஷ்டரே! எனக்குமகாவிஷ்ணுவுக்குநிகரானபுருஷன்மேல் இச்சையெ
ன்றுவணங்க, யாழ்வல்லோன் இப்போது வரும்புருஷன் மகாவிஷ்
ணுவைப்போலவே யிருப்பானென்றுசொல்லி அந்நாட்டைக் கடந்து
காட்டையடைந்து கன்னியென்னும் வன்னிதன் சென்னியைக்கொ
ளுத்துவதால் காமவேசத்தால்நொந்து நாணமிழந்து ஓ ஓ இத்த
ருணத்தில் லக்ஷணத்துடன் சென்றால் நம்மை யம்மாது வாதுசெய்
யாமல்மாலைசூட்டுவாள், பாராட்டுவாள், இன்பத்தைமூட்டுவாள், களி
முகத்தைக்காட்டுவாள், ஆஹா அம்மாதின் முகவிலாசமே விலாசம்!
இப்பேற்கொத்தவளுடைய கேசமேகேசம், அவளுடைய கூந்தலே
கூந்தல், அவளையணையும் வந்தலேவந்தல், அவளுடைய ரூபமேரூ
பம், அவளாலிங்கன லாபமேலாபம், அவளுடைய வசனமேவசனம்,
அவளைத்துதிக்கும் பஜனமேபஜனம், அவளுடைய நடையேநடை,
இப்பேற்கொத்தவட்கீயுங் கொடையேகொடை, எனப் பற்பலவார்

த்தைகளாடி யாரன்செய்யுங்கோரத்தால் தவஞ்செய்யப்போகுந் திற த்தைவிட்டு நேரத்துக்குட்பட்டு பக்தவச்சலனை நினைந்து ஓ பகவா னே! இவ்வேளைவந்து உன்னுடையரூபத்தைத்தந்து பாதுகாக்காமற் போனால் காமாக்கினியாலெரிந்துபோவேனென் றறியாயோ ஓர் கன் னிகையால் நாரதன் மரணமடைந்தானென்னும் பழிநிலை நிற்குமெ னக்குறியாயோ, உன்னுடையமாயையை வென்றவர்களுமுண்டோ? நான்சொல்லும் மொழியிற்பிசகுண்டோசீக்கிரம்வருவாய்உன்னுடை யரூபத்தைத்தருவாயென் றுருகும்போது, பகவான்தன்தெரிசனந்த தால் சேவைபலத்தால் காமவிகாரம் நீங்குமென்று அந்தர்த்தானமா கவேயிருந்து ஓ மூனிசிரேஷ்டரே! நீ ரிச்சித்தபடி என்னுருவைக் கொடுத்தேன். சீக்கிரம்போய் உம்முடைய இச்சையை நிறைவே ற்றிக்கொள்ளுமென் றுரைத்தார்.

உடனே அம்முனிவர்தனக்கும் பச்சைநிறமும் பீதாம்பரமும் கௌஸ்துவாபரணங்களும் அடைந்ததேகளிப்புற்றுப் பகலவனையு ம் புருகூதனையும் தனக்குத் துவாரபாலகராகிவர நினைத்தமாத்திரத் தில் உடனே அவர்களிருவரும் ஸ்ரீவைகுந்த வாசலைக்காக்குந்துவார பாலகரைப்போல் வடிவெடுத்து அவர்பக்கலடைய, உடனே அந்த மகாத்மா வெகு அவசரத்துடன் அப்பட்டணத்திற்பிரவேசிக்க அந் தவேளையில் தான் இச்சித்த வடிவழகி பூமாலையைக் கையிலே ந்திக்கொண்டு விசாலமான சபாமண்டபத்தி லெழுந்தருளியிருக்கும் ஐம்பத்தாறு தேசத்தரசர்களும் அதிக ஆவலாய் அவளருகிற்சென் று ஆயிரங்கண்ணால் ஹரியணையை வாலைழத் ததில் வீற்றிருந்து அடங்காக் காமவிகாரத்தால் அவ்வரிவையை நோக்கி நாணத்தைநீக் கிப் பூதலம்போற்றும் ஓ மாதரசே! நீ தவிர எனக் காதரவில்லாமை யால் இக்கணமேஎன்னைக்காப்பாய்கடைக்கண்ணால்பார்ப்பாய்என்னை உன்னிருகரங்களாலும் மார்பிற்சேர்ப்பாய் என்மையலைத்தீர்ப்பாய் எ ன்று இன்புள்ளவார்த்தைக ளன்புடனுரைக்க அதுகேட்ட அம்மோ கனங்கி கரியகுரங்குமுகமுள்ள அவரைநோக்கிக் கலீரென நகைத்து மன்னர்களருகிற்செல்ல அம்முனிநாதர் அவள்பேரிலிருக்கும் பேரா சையால் அருகிற்சென்று கரங்களைக்குவித்து நின்று ஓ அழகுசுந்தர மே ஆசைப்பெருக்கமே உனக்குகந்த மணாளன் நானன்றி வேறொரு வருண்டா? இல்லை இல்லை. ஆதலாலன்புடனெனக்கேமாலையிட்டுமகி ழ்வடையக்கடவாய் என்றுவஞ்சியைப்பற்பலவிதங்களாகக்கெஞ்சிகெ ஞ்சிக் கொஞ்சிவேண்டியும் இசையாத அம்மங்கைமேலுள்ள வாஞ்

அதையறிந்து கோபீசந்தனர் தப்பிதமறியாத தராபதியைப்பிரியத்துடனழைத்து அருகிலிருத்திக்கொண்டு பக்ஷமானவார்த்தைகள் பலபுகன்று இறைவனே! உனக்கோர் குறையும் நேரிடாது. அரசன் அஜாக்கிரதையாயிருத்தலடாது. உத்தமர்கள் சித்தகலக்கம் கிஞ்சித்தில்விடாது. சாதுக்களைத்தண்ணுஞ்சுடாது. இனியுமது நாடுநகரம் யாவும் முன்போலிருக்கப் பரமகுருநாதர் அருள் புரிந்தார். ஆகையால், அங்குசென்று நீர் சுகத்துடன்வாழ்ந்திரும். நான் பலதேசங்களிற் சென்று சஞ்சாரசமாதியால் சகஜஞானத்தைப் பூரணமாயடையவேண்டுமென்று சிலதேசங்களெல்லாந்திரிந்து என்பட்டணத்திற்கு வந்தேன்; வந்தவிடத்தில் எனக்குத்தங்கையும் உனக்குமனைவியுமானவள் மாயைக்குள்ளாகித் தன்னிடம் ஆடையாபரணங்களைத்தரித்துக்கொண்டிருக்கும்படிசொல்ல, அப்படிநான் அணிந்துகொள்ளாமையால் என்னை அலக்ஷியஞ்செய்து பாராவில்வைத்தாள். அதனுல் உனது நகரம்பற்றியெரிந்து சாம்பலாகியதேயன்றி உன்றலொரு இடையூறும் நடக்கவில்லை. இது பூர்வகர்மபலனுகும். இதைப்பற்றி நீ விசனப்படவேண்டாம். உனக்கொருநாளுங் குறைவு நேரிடமாட்டாது. போய்வாருமென்ற மைத்துனரைநோக்கி அரசன் மிகவுமனம்வெறுத்து கோபிசந்தனர் மகிமைக்குப்பிரமித்து ஓ சுவாமி! அரைக்கணமேனுந் தங்களைவிட்டுப் பிரிந்திருக்கமாட்டேன். பிரிந்தும் மாயையிற் கட்டுப்பட்டிருக்கவுங்கிட்டேன். நாடு நகரம் பெண்டுபிள்ளை சகலமும் எனக்குத்தேவரீரே. மற்றவெல்லாந் தீதேஎன இடமடைந்த அடியேனைக்கைசோரவிட்டால் காப்பவர் வேறொருவருண்டோவென்று மிகவுங் கரைந்தழத்தொடங்கினுன்.

அப்போது சாதுவாகிய கோபீசந்தனர் அரசனை ஆலிங்கனஞ்செய்து கொண்டு ஓ வேந்தனே! சத்துவகுணத்திற்சிறந்த சாந்தனே! ஹரியென்றும், சிவனென்றும் மதபேதத்தால் தெய்வத்தை இகழக்கூடாது. அப்படி பேதமாயிருந்தாலும் ஒன்றையே தொழுததாகும். எப்படியென்பீரேல், லவணத்தைப்போன்றது ரூபம். ஜலத்தைப்போன்றது நிரூபம். ஜலமேலவணமன்றி வேறில்லை. அதுபோல நிரூபம் ரூபமன்றி வேறல்ல. அவிவேகத்தால் வேறுபடுத்துவதன்றி விவேகத்தால்லூன்றி விசாரிக்கில் சமமாகவே யிருக்கின்றது. ஆதலால் நீரிது காலபரியந்தம் தியானஞ்செய்து கொண்டுவந்த நிரூபமாகிய பரப்பிரம்மத்தையே தியானஞ் செய்துகொண்டிருப்பதன்றி அப்பரப்பிரம்மத்தை உமக்குள்நேரறிந்தும் சந்தோஷசாகரத்தில் மூழ்கியிரு

ய்பிராகவென்றஸ்தமஸ்தக சைமபோகஞ்செய்துமகாவாக்கியோபதேச ஞ்செய்து தேகேந்திரிய கரணபிராண ஜீவவக்ஞானங்க ளிதென் றுணர்த்தி சாக்ரசொப்ன சுஷுப்தி இன்னிலவரங்களைத் தெரிவித் துச்சிலனுளிருந்து பிரம்மநிஷ்டையிலிருக்கும் மர்மத்தையும் அந்தர் முகத்தில் மனனஞ்சென்று ஆநந்தநித்திரையில் ரமிக்குங்குறியும் புலப்படக்காட்டி அத்வைதஞானத்திற் பூர்த்தியடையும்படியாய்ச் செய்து ஒருநாளிறைவனைநோக்கி ஓ அரசனே! உமக்கேதேனுஞ் சந் தேகமிருந்தால் கேளுமென்றறைய, அரசன் பட்டணத்திலிருந்த அ னேகம் சாதுக்களுரைக்கு மார்க்கமும் தன்மைத்துனர் சொன்ன மார்க்கமும் ஒற்றுமையா யிருப்பதால் யாதொன்றுங் கேட்கக்கூடா மல் சற்றேமௌன முற்றிருந்து பின் தனக்குற்ற ஓர் சங்கைநீங்கப் பரமசாதுவைத்தொழுது ஓ சுவாமி! நமதுபட்டணத்தில் பிரம்ம ஞானிகளும் ஹரிபக்தர்கள் என்னும் புகழ்பெற்ற பேர்படைத்தஉத் தமர்களும் சொல்லும் நெறியும் தாங்கள்புகன்ற வழியும் அபேதமா யிருப்பதாலும் பிரத்தியக்ஷமான அனுபவஞானத்தாலும் சந்தேக மொன்றுமில்லை. ஆயினும் இவ்வுலகமெவ்விதமா யுண்டாயிற்றோ எவ்விதமாயொடுங்குமோ என்ற சங்கைமாத்திரம் நிவர்த்திசெய்யும் படிக் கோருகிறேனென்று வணங்க,கோபிசந்தனர் ஓ அரசனே! அனு தினமும் சகலருக்குமனுபோகமான நித்திரையினுற்பத்தியும் நாசத் தையும் சொல்லுதற்கே கூடாமையாயிருக்க, பிரபஞ்ச உற்பத்தில யத்தை யொருவராலுரைக்கத்தகுமோ? ஆயினும் சகலமதஸ்தருமொ ப்புக்கொள்ளும்படியான வேதாந்த சாஸ்திரத்தில் உரைக்கும் பிரப ஞ்சோற்பத்திலயத்தைப் பெரியோர்களால் கேள்விப்பட்டபடியே யு ரைக்கின்றேன்; சற்றேகவனமாகக்கேளும். அதெப்படியென்றால்,அக ண்டபரிபூரண சச்சிதானந்த நித்திய நிர்மலசொரூப சாக்ஷாத்காரசு யம்பிரகாசமாகிய ஒப்பற்ற பரப்பிரம்ம வஸ்துவானது நாமரூபரகித மா யிருக்கின்றபடியால் இத்தகையதென்று மூவர்தேவர் மற்றி யாவர்களாலுஞ் சொல்லக்கூடாததா யிருக்கின்றது. சொல்லப்புகின், பிரமைக்குள்ளாகுமாதலால்,அத்வைதமாகியநிர்க்குணவஸ்துவுக்கும் பிரம்மமென்கிற நாமமுண்டாயிற்று. இப்படியே பலகாரணங்களாற் பலநாமங்களேற்பட்டது, நிராங்காரமாகிய பிரமம் நிவாததீபம் போ லவும், நிஸ்தரங்க சமுத்திரம்போலவும், ஆவியம்போலவும், காந்தக்க ல் போலவும், சலனமற்றிருக்க அதன்சந்நிதானத்தில் காந்தக்கல்மு ன் இரும்பூசிகளைப்போலவும், அக்கினியிற் சூடுபோலவும், விளக்கி

னிழலைப்போலவும், ரச்சுசர்ப்பம்போலவும், கானல் சலம்போலவும், சலனமே சுபாவமான மூலப்பிரகிருதியென்றும், அவ்வியக்தம் என்னும் பேருடைய ஓர் மாயாசக்தி யுண்டாயிற்று. இதன்வடிவம் இருளாம். எங்ஙனமெனில், சந்திரசூரியருற்பததி யாகாமுன் எங்கும் அந்தகாரமே நிறைந்திருந்தது. அந்தகாரமே மாயையென்றுரைக்கத் தகும். ஓ அரசனே! அகண்டபேரொளியின்பரப்பிரமம் ஓர் தீபமாம். அத்தீபத்தின் னிழலே மாயையாம். ஏகபெருவெளியின் பிரம்மத்தினிடத்தில் வந்தியாபுத்திரனைப்போலஅணுவுக்கணுவான மாயையென்னு மிருளெப்போதுண்டாயிற்றோ அப்போதே ஒன்றுண்டானுலதிலனேக முண்டென்கிற சம்பவப்பிரமாணப்படி முழுதும் மித்தையான மாயையிற் பிரதிபலித்த பரப்பிரமத்திற்கு ஆரோபமாய்ஈசுவரனென்கிறபொதுப்பெயருண்டாயிற்று. அனேகவிசித்திரரூபமான மாயாபிரதி பிரம்மனுன ஈசுவனுக்கும் அனேகவிசித்திர ரூபமுண்டென்று உரைக்கநேரிட்டது.

அதெப்படியென்றால், சலனமேசுபாவமான மாயாந்தகாரத்தில் சத்ததன் மாத்திரையான அரூப ஆகாயமுண்டாயிற்று. அதிற்பிரதிபலித்த பிரம்மத்திற்குச் சதாசிவனென்றும், அரூபமான ஆகாயத்தில் சத்தத்துடன் பரிசதன்மாத்திரையான வாய்வுண்டாயிற்று. அதிற்பிரதிபலித்த பிரமத்திற்கு மயேசுவரனென்றும், ரூபாரூபமான வாயுவில் சப்தஸ்பரிசத்துடன் ரூபதன்மாத்திரையான தேயுவுண்டாயிற்று. அதிற் பிரதிபலித்த பிரம்மத்திற்கு ருத்திரனென்றும், ரூபமுள்ளதேயுவில் சப்தஸ்பரிச ரூபத்துடன் ரசதன்மாத்திரையாகிய அப்புவுண்டாயிற்று. அதிற் பிரதிபலித்த பிரம்மத்திற்கு விஷ்ணுவென்றும், ரூபமுள்ள சலத்தில் சப்தஸ்பரிச ரூபரசத்துடன் கந்ததன் மாத்திரையான பிருதிவியுண்டாயிற்று. அதிற் பிரதிபலித்த பிரமத்திற்கு பிரம்மா வென்றுஞ் சொல்லப்படும். பஞ்சபூதங்களும் மாயாம்ஸமாம். பஞ்சகர்த்தாக்களும் பிரமாம்ஸமாம். பிரபஞ்சோற்பத்திக்குக் காரணமான மாயை பிரமத்தி லோரணுவெனச் சொல்லப்படும். மாயையென்னுஞ் சாயையில் விசாலமான ஆகாயமும் ஆகாயத்தில் வாய்வும் வாயுவில் தேயுவும் தேயுவில் அப்பும் அப்பில் பிருதிவியும் அடக்கமாயிருக்கும். நிர்ச்சலமான ஆகாயத்துக்கிணையாயிருக்கும்பரப்பிரம்மத்தினிடத்தில் தனக்குத்தானே உண்டாகிச்சுழலும் சுழல்காற்றுக் கிணையான மாயையானது பஞ்சபூதங்களிடமாயிருந்துஒன்றுடனொன்றைச் சேர்க்கும் ஈசுவரப்பிரயோகத்தால் அனேக அன்

டங்களாகி மயில் முட்டையைப்போல் நாநாவிசித்திரரூபங்களால் விளக்கமுற்றிருப்பன். அல்லாமல், ஸ்படிகம் நிஷ்களங்கமாய்ச் சுத்தஸ்வயமாயிருந்தாலும் பஞ்சவர்ணக் கோட்பாட்டால் பலவிதவர்ணங்களாயெப்படிதோன்றப்படுமோ அப்படியே அரூபமான ஆகாயத்திற் பிரதிபலித்த பரப்பிரம்மம் அரூபமான சதாசிவனாகவும் ரூபாரூபமான வாயுவிற் பிரதிபலித்த பரப்பிரம்மம் ரூபாரூபமுள்ள மயேசனாகவும் ரூபமானதேயு அப்பு பிரிதிவியிற் பரப்பிரம்மம் ரூபமுள்ள ருத்திராதி பிரம்மாவாயும் விளங்கின பிருதிவிசொரூபனானபிரம்மாவானவர் ஐந்துகுண முள்ள பிருதிவியா லனேக அண்டபிண்டங்களை யுண்டாக்கினார். விஷ்ணுவானவர் நான்குகுணமுள்ள அப்புவால் பிரம்மாவா லுண்டாக்கினதை ரட்சிக்கத்தொடங்கினார்

பின்னும் ருத்திரன் மூன்றுகுணமுள்ள தேயுவால் ஹரியால் ரட்சிப்பதைசம்மாரஞ்செய்யத்தொடங்கினார். மயேசுவரன் இரண்டுகுணமுள்ள வாயுவால் மாயாம்ஸமான ஜீவர்களுக்கு மயக்கமுண்டாக்குவார். சதாசிவன் ஏககுணமுள்ள ஆகாயத்தில் ஜீவர்களுக்குத்தெளிவைக்கொடுப்பார். மாயைபஞ்சபூதாம்ஸமானதேகேந்திரியாதிகளே நானானென்றும் அகங்காரக்கிரந்தியைவிளைவிக்கும் பிரமம் தேகாதிகளுக்கும் இவைகளையே நாமென்றிருக்கும். சிதாபாசனுக்கும் விலட்சணமாய் எல்லாவற்றிற்கும் சாட்சியாயறிந்துகொண்டு சுவஸ்வரூபமாகி திரிபக்குவாகிய ஆத்மாமாத்திரமாயிருக்கும். பிரம்மாஜாக்கிராவஸ்தையாய ஜீவனை நாநாவித போகபோக்கியங்களிலேயச் செய்வார். விஷ்ணுசொப்நுவஸ்தையாய் ஜீவனுக்கனேகவித லீலையைக் காட்டுவார். ருத்திரன்சுழுத்தியவஸ்தையாய் எல்லாவற்றையுஞ் சூனியமாக்கி ஜீவனைத் தனியாக்குவார். மயேசன் ஜீவனுக்குத் துரியாவஸ்தைக் கிணையான ஓர் மயக்கமுண்டாக்குவார். சதாசிவன்ஜீவனுக்குத் துரியாதீத அவஸ்தைக்கிணையான ஆனந்த முண்டாக்குவார். மாயைசுகத்தை மறைத்துச் சுத்தசூனியமாய்ப் பிரமிக்கச்செய்யும். பிரம்மம் சுயம்புவாய் அறிவானந்தமா யிருக்கும். பரப்பிரம்மமான இந்த ஆத்துமானந்தத்தை மாயாவிசேஷத்தாலறியாச்சீவன் துக்கத்தையே சுகமாகநினைத்து அளவற்ற ஆசைக்குள்ளாகி இச்சாசொரூபமான அனந்த தேகங்களெடுத்து ஜனனமரணமென்னும் வாரிதியிலமிழ்ந்து கரையேறுவதற்கோர் துறைகாணமல் துக்கத்தையேயனுபவித்துக் கொண்டிருக்கும். பஞ்சதன்மாத்திரைகள் பஞ்சபூதங்கள் இவைகளாலுண்டான அண்டபிண்ட பிரம்மாண்டங்களும் மாயையி

னுடைய லீலையன்றி வேறல்ல. விவேகத்தாலறிவன்றி விசாரிக்கில் ஜீவசப்தமேயில்லை. எங்ஙனமெனில், தேகாதிகளைப் பஞ்சபூதாம்சமென்று நியதிசெய்து பார்க்கையில் நானென்னுஞ் ஜீவசப்தம் சூன்யமாகும். தேகாதிகளை நானெனறகங்கரித்துநிற்கும் பிரமையே ஜீவனன்றி வேறில்லை. சாக்ஷியாகிய ஆத்மாவேபிரம்மமாகும். இந்தசுட்டஸ்த பிரம்மமே சுயம்பிரகாசமாய் சாக்ர சொப்ன சுழுந்தியிலுள்ள விஷயபோகங்களையும் நானாபேத விசித்திரங்களையும் சூனியத்தையும் ஜீவனுக்குள்ள மயக்கத் தெளிவையும் விலக்ஷணமாயிருந்தறிந்துகொண்டு அவைகள் நானாபேதப்பட்டாலும் தானபேதமாய் அவைகளசத்தானாலும் தானபிரியாச்சத்தாய் அவைகளஞ்ஞான மயமானாலும் தான்ஞானமயமாய்அவைகள் துக்கமயமானாலும் தானானந்தமயமாய் அவைகள் துக்கமயமானாலும் தான்ஞானமயமாய் நிர்மலமாய்நிர்விகாரமாய் நிரூபமாய் ஏகப்பிரகாசமாய் பெருவெளியாய் அகண்டபரிபூரணமாய் விளங்கியிருக்கும். மாயை ஓர்காலத்தில் விசித்திரரூபங்களாய் அநிர்தசட துக்கமாயிருக்கும். இந்தமாயையைநாடினோர்களுக்கு விசித்திரமானசித்திகள் சித்தித்தாலும் நானற்ற பிரம்மஞானமில்லாமையால் அகங்காரம் விர்த்தியடைந்து இறுதியில் துக்கமே பலிதமாகும். பிரம்மத்தை நாடினோர்களுக்குச்சித்திகளேனும்பலிதமாவ தன்றி அகண்டாநந்த முண்டாகி இறுதியில் கைவல்யங்கிடைக்கும். பிரம்மாட்லமானபஞ்சகர்த்தாக்களில் யாரைப்பரதெய்வமென நம்பித்தியானதோத்திரங்கள்செய்தாலும் அந்தப்பரப்பிரம்மத்தையே தியானதோத்திரஞ்செய்ததாகும். அதனாலேயே அனேகரிஷ்டதேவதையை இஷ்டதெய்வமெனத் தொழுதார்களோ அதையே தேகவியோகபரியந்தம் நம்பி அத்தேவதையினருளால் மோட்சமடைந்தார்கள். ரூபமுள்ள தேவதைகளைத்தள்ளி நிரூபமான பரப்பிரம்மத்தைத் தியானித்தல் வெகு துர்லபமாயிருக்கும். ரூபத்திலேயே இலக்ஷ்யதானம் நிரூபத்தில் நிற்பதருமையாதலால் சுலபமாய்முத்தியை நாடும் வழி ரூபமென அனேகர் அங்கீகரித்தார்கள்.

இதிலிருந்துதேர்ந்து நிரூபமான பிரம்மத்தைநாடினோர்களைப்போல எல்லோரும் ரூபத்தைவிட்டு நிரூபத்தைத்தியானஞ்செய்வதால் நிஷ்பிரயோஜனமே பலிதமாகும். உறுதியானமனதாற் தியானிப்பதற்கோர் தடையுமில்லை. தடைசொல்வாருமில்லை. பரப்பிரம்மமே சிருஷ்டியாதி கிருத்தியங்களியற்றுகின்றதென்றால், நிர்ச்சலனமல்லவென்றுரைத்தல் கூடாது. நினைத்தமாத்திரத்தில் சகலமுமுண்டாயிற்

றென்றால் நினைப்பிருந்தால் மறப்புமிருக்கும். இவ்விரண்டுமிருந்தால் விகாரமுமிருக்கும். ரூபமுமிருக்கும். விகாரமும் ரூபமுமில்லாமல்பரம்பொருளுக்கு நினைப்புண்டென்பதே எல்லாச்சங்கைகளுக்குமிடமாயிருக்கின்றதாகையால், திரிமூர்த்திகளாலேயே சிருஷ்டி திதி லயங்கள் நடக்கின்றது. ஆதலாலிவர்களையும் முக்கியமாகத்தொழவேண்டும். திரிகரண சுத்தியோடும் திரிமூர்த்திகளையாவது பரப்பிரமத்தையாவது பஜிப்பவனே பரமபக்தனென்றுரைக்கத்தகும், இந்தசிரத்தாபக்தியோடு சர்ப்பத்தைப்போல் சுவாசத்தையுண்டு நீண்ட ஆயுளைப்படைத்து அனேகசித்திகளால் பூர்த்தியடைந்து நிர்வியாகூலத்துடனிருப்பவன் மாட்சிமையான சித்தனென்றுரைக்கலாம். பகவத்பக்தியும் யோகப்பயிற்சியும் செய்தபலத்தால் சித்திப்பதென்னவெனில், ஜீவன்முக்திநிலையேயாம். ஜீவன்முக்தியென்பது தேகாதிகளை நியதி செய்து தன்னையறிந்து தானேபிரமமென்றுணர்ந்து பிரமநிஷ்டாசாதனத்தினால்விஸ்ராந்தியடைந்து தன்னைமறந்துபரப்பிரமத்திற்குள் ஐக்கியமாய் ஆனந்தவாரியில்மூழ்கித்தானின்றுமொன்றுணராமல் அக்ஞானியர்தலேயாம். கேவலம்மௌனசுகாசனத்தைப்போலிருப்பவனிலும்மூர்த்தி தியானஞ்செய்பவனதிகம். அவனிலும் பரப்பிரமத்தைத்தனக்குளறிபவனதிகம். அவனிலும் அப்பரம்பொருளாயிருப்பவனதிகம். அவனிலும் அகண்டாகாரத்தாற்றன்னையின்னதென்றறியாமல்சாக்ஷாத்காரத்தை யடைந்திருப்பவனதிகம். அவனிலும் துரியதிருஷ்டிகளைமேவி திக்குதேசாதிகளிறந்து பேய்பிடித்தவன் போலவும் சேயிருப்பதுபோலவுமிருக்கும். சகஜஞானிகளைத் தேடிக்கண்டுபிடித்து அன்னபானாதிகளூட்டி குற்றேவல்செய்பவனதிகமாகும். ஓ இராஜனே! இத்தனையமேலானலாபத்தைத விடுத்துத்துன்பத்தையடுத்து அரிதான ஆயுளைக்கெடுத்துக்காமமென்னும் பெருமூட்டைகளையெடுத்துப் பசுவைப்போலிருக்கும் மானிடர்கள் நாளை எமன்வர்தடுத்தால்என்னசெய்வார்களோ யானறிகிலேன். ஓ வேந்தனே! எத்தனைநாளிருந்தாலுமொருநாளிலழிந்துபோகும் இத்தேகத்தைப் பொய்யெனத்தீர்மானித்து மெய்வாழ்வுக் குடன்படாமல்அரைநிமையும்வீண்காலம் போக்கலாமோ? மண்ணினாற்செய்த பாண்டம் உடைந்தும் மண்ணே இருந்தும் வண்ணேயானது போல பரமபக்தியும் ஜீவன்முக்தியுமடையாதவர்களிறுக்கை யிருக்கும்பிரேதமே. மரித்தும் பிரேதமேயல்லவோ? ஆஹா! மர்க்கமதியோர்க்கெத்தனைவிதமாயுரைத்தாலும் அந்தகன் சூரியனைக்காணாமல் ஒன்றுந்தோணாமல் அந்தகாரமே நிறைந்திருப்பதாகக் காண்பதைப்

போல, மந்தத்துக்குள்ளகப்பட்டு வெகு தொந்தரைக்குட்பட்டிருக்கிறார்களே. மதபேதவாதிகள் வாதுகளாடி வேதைக்குட்பட்டு தான் கற்றகல்வியாலோர் பயனடையாமல் சம்மதத்துக்குட்படாமல் உங்கள் வேதம் பொய்யென்றும் எங்கள்வேதம் மெய்யென்றும் உங்கள் தெய்வம் அசத்தியமென்றும் எங்கள் தெய்வம் சத்தியமென்றும் தூஷணவார்த்தைகள் விண்டு மதாபிமானமேற்கொண்டு உலகத்துக்குட்படாமல் தன்னையறியாமல்தனக்குள்ளிருக்கும் ஆநந்தத்தையும் அனுபவிக்காமல் உத்தமர்களைப்பழித்து வீணாய்நாளைக்கழித்து எமன்வருங்காலத்தில் தந்தங்களைக்காட்டிச் சூழ்ந்திருப்போரையும் வாட்டி சொல்லொணாதுயரத்தை யூட்டி நரகப்பட்டணத்துக்கு மேட்டான மேட்டிகளாகிறது நன்மையோ? தனக்குள் மெய்ப்பொருளைத் தேடாமல் தெரிவிப்பவரிடமு மோடாமல் பகவத்பக்தியையு நாடாமல் பரமபாகவதர்களைக்கூடாமல் வீணாய்தர்க்கசுதர்க்கங்களால் நாட்களைக்கழிக்கலாகுமோ? இதனாலகந்தைபிரிந்துபோகுமோ? க்ஷணபங்கமான இவ்வங்கத்தைத் தங்கத்தைப்போ லெண்ணலாமோ? பாபகர்மங்களைப் பண்ணலாமோ? ஓ அரசனே! மதபேதகர்க்குச்சதுர்வேதமும் சங்கைபேயாகும். சம்மதமுள்ள சாதுக்களுக்கு ஓர் மொழியே போதும். முடிவுளஏழுவகைத்தோற்றங்களான சராசரங்க ளொத்தனையுகமிருந்தாலும் ஓர்காலத்தில் பூமியிலடங்கிப்போகும். பூமியோ சூரிபோஷ்ணத்தாற் சுன்னமாகிப் பிரசண்டவாயுவாற்றூசாகி வருணபகவானால் ஜலமயமாய்ப்போகும். ஜலமோ அக்கினியால் வற்றிப்போகும். அக்கினியோவாயுவினால் இல்லாமற்போகும். வாயுவோ ஆகாயத்தி லடங்கிப்போம். ஆகாயமோ இருள்மயமான மாயையி லடங்கிப்போகும். மாயையோ தன்சாமர்த்தியங்கெட்டுச் சூரியனைக்கண்ட பனிபோலவும், சுழற்காற்றிலகப்பட்ட இலவம்பஞ்சுபோலவும், அக்கினியில்வீழ்ந்த சருகைப்போலவும், சுத்தசூனியமாய்ப் பிரம்மத்திலில்லாமற்போகுமானால் நமதாக்கையை ஓர் பொருளாகமதித்து அகமடைந்திருக்கலாமோ? ஓ நரபதி! மாயையிவ்விதமாயொடுங்கியும்பரப்பிரம்மம் ஆதிமத்யாந்த ரகிதமாய் நாமரூபவிகார ரகிதமாய் அகண்டானந்தமாய நித்த சுத்த புத்த மூத்தமாய் நிஷ்க்ளபுஷ்க்ள பிரமமயமாய் நிர்ச்சேத நிர்வேதநிராவர்ணமாய் என்றுமுள்ளபடியே இருக்கும். ஆதலால், தனக்குளிப்போதுமந்த லட்சணத்தோடிருக்கும்பரமாத்மாவை சத்குருவாலறிந்து கூடஸ்த பிரம்மத்தையே சுசாதிகவிசாதிக சுவகதபேதரகித மென்றும் அகண்டபரிபூரண ஸ்வரூபியென்

றும் சத்யக்ஞானானந்தவஸ்துவென்றும் தேவரும்மற்றியாவரும்போ ற்றும் ஆதிதெய்வமென்றும்முத்தரும் பத்தரும் சித்தரும் வணங்கு ம் பரம்பொருளென்றும் சித்விலாச சின்மயசுயம்பிரகாச தேஜோம யமென்றும் திவ்யமங்களாற்புதபோதமென்றும் இதை யடைந்தவ ர்களுக்கே ஜனனமரண துக்கமாம் பரைபொழியு மென்றும் சகலபா பகர்மங்கள் விமோசனமாகுமென்றும் நரகவேதனை இல்லையென்றும் மோட்சசாதனந்தங்கிடைக்குமென்றும் சொல்லப்படும். இதிற்சந்தே கமே யில்லை. சந்தேகமுள்ளோர்க் களவற்றதொல்லை. ஓ அரசனே! இந் தப்பிரம்மக்ஞானம் லேசிலடைவதற்குச் சற்குரு கிருபையும் இஷ் டதேவதையின் வரப்பிரசாதமும் அவசியம்வேண்டும். இல்லாவிடில் நிஷ்பிரயோஜனமாய் முடியும். ஆதலால், இன்றுடன் தெய்வபக்தியும் சத்குருசிரத்தையும் சாதுக்கள்சேவையும்செய்து சுகமுற்றிருப்பாயா க வென்றறைந்து அவ்வரசனிடத்தில் விடைபெற்றுக்கொண்டு மது ரபிருந்தாவனமுதலான புண்ணியக்ஷேத்திரங்களிற் சஞ்சரித்து ஆந ந்தமேலீட்டாற் றன்னைமறந்து சகஜஞானத்தாற் பூர்த்தியடைந்து ஆரூடக்ஞானியாய்ச்சிறப்புற்றுத் தன்குருநாதரையும் அன்னையையு ம் சேவிக்கவேணுமென்ற ஆவல்மிகுந்து நகரத்தைநாடி ஆசான்றிரு வடியை மறவாமல் துதித்துக்கொண்டே திரும்பினார்.

அரசனும் விடைபெற்றுத் தன்னகரத்தையடைந்து அன்றுமு தல் பகவத்பக்தியில் விசேஷித்துப்பிரமக்ஞான நிஷ்டையும் சாதித் துக்கொண்டு செங்கோலுஞ்செலுத்திக்கொண்டு மிருந்தார். இப்படி க்கிருக்க, இவருடைய மனைவியும் தன்நாயகனைவிளித்து ஓ நாதா! தா ங்களிவ்வண்ணம் கண்களைமூடிக்கொண்டுமௌனசமாதியிலிருந்தால் மற்றராஜகாரியங்கள் அனைத்தையும் பார்ப்பவர்கள்யாவர்? எனக்குத்த மையனும் நினக்குமைத்துனனுமாகிய துஷ்டாத்துமாவினிடம் உப தேசம்பெற்றுக்கொண்டீரோ? அப்பாவி தான்கெட்டதுமல்லாமல் உன்னையுங்கெடுத்தானே என்குடியைக்கெடுக்கவேணுமென்று எத்த னை நாளாய்காத்திருந்தானே என்று தன்தமையனென்ற மரியாதை எட்டுணையும்வையாமல் பற்பலவிதமாய் தூஷிக்கிறதைக்கேட்ட அர சன் வெகுண்டு சினங்கொண்டு அடிபாவி! சாதுக்கள்போற்றும் உத்த மபுருஷருடைய சித்த அருமையைக்கிஞ்சித்தும்யோசிக்காமல்வாயில் வந்தபடி வைகிறாயா உனக்கித்தனைவாயா நீயொருபானையா உனக் குமிது நியாயமா அம்மகானுயாவர் நீதிவாக்கியங்களையும் வேதவாக் கியங்களையும் உரைத்து என்னைப் பாவக்கடலில் நின்றும் வெளிப்ப

டுத்தித்தெளிவடையச் செய்ததுமன்றி என்றும் இறப்பிறப்பில்லா ஜீவன் முக்திமார்க்கத்தில் இடைவிடாது நடக்கவும் போதித்த உத்தமபுருஷரை வெறுக்கவும் நீதிவாக்கியங்களுரைக்கவும் நேரிட்டதல்லவா ஓ! ஓ! அஞ்ஞானமனதே உன்னாலல்லவா அபகீர்த்திக்குள்ளானேன். பேதையாய்ப் போனேன். உன்மீதுங்குற்றமில்லை. நானேதேடிக்கொண்டேன் தொல்லை. முன்னம் அடையில் விஷத்தைச்சேர்த்துக்கொடுத்தபடியால் அதை அம்மகானுபாவருணர்ந்து கோபமிகுந்து பட்டணமுழுமையும் பற்றியெரிந்து சாம்பலாகும்படிச் செய்தார்.

அதுதெரிந்திருந்தும் இப்பாவி மறுபடியும் ஏதேதோ வாயில் வந்தபடி பிதற்றினேனே. இதனால் நமக்கென்ன விபத்து நேரிடுமோவென்று பயந்து ஓ பெண்ணே! இப்போதே ஸ்ரீமந்நாராயணன்மேலாசையாய்விட்டது. இனியுன்னெண்ணப்படி நடப்பது கெட்டது. இனிமேல் மரணபரியந்தம் கொஞ்சிப்பேசும் வஞ்சகரைக் கனவிலும் நினைக்காதே. கோதையரைப்பார்த்துக் கனைக்காதே என்றுபலவார்த்தைகள் பகர்ந்து காமவிகாரமறந்து கர்த்தன் பக்திநிறைந்து பாமரகுணங்கள்குறைந்து பாவியானேனெனப்பறந்து மனைவிக்குவந்தனம்புரிந்து நீயேகுருவெனப்பரிந்து இன்றுடன் நீ தாயென்றுபகர்ந்து வீதியிற்போகையில் உடனேமனைவிநாயகரெனக்கூவி, அன்பன்பால்மேவி, ஆர்வலாநீரெனநுவி, அடியாள்மிகவும்பாவி என்றவரைப்பலதரஞ்சூழ்ந்துபாதங்களில்வீழ்ந்து அன்புடன்தாழ்ந்து ஓ சுவாமி! ராஜாங்கமார்க்கத்தையுரைத்தால் என்னைத்தாயென வெறுக்கலாமா? அன்பைச் சுருக்கலாமா? அடியாள்கழுத்தை நறுக்கலாமா? இப்படியும் அடத்தைப்பெருக்கலாமா? இல்லறதருமத்தை வெறுக்கலாமா? என்றுபகரும்போது.

அரசன் ஓ மாதரசே! இன்றுடனுனக்கு மெனக்குமுள்ள சம்பந்தம்போய்விட்டது. காமவிகார மிகவுங்கெட்டது. என்மனதகட்டது. பகவத்தியானம் நேரிட்டது. ஆகா நான் செய்ததபகாரம். நாவியற்றியதபசாரம். நீ இயற்றியதுபசாரம். உன்னைமறப்பேனோ. உயிருள்ளமட்டும் வெறுப்பேனோ. நீ தாயென்பதுறுதி. நீ என்றுய்ப்பார்கருதி. இது மெய்ம்மன உறுதி. இது வேதத்தினுறுதி. இனிஎன்றுமாசையைவிடுத்து இழிவுள்ள மனதைத்தடுத்து இப்போகத்தைக்கெடுத்து இறைவன் பாதத்தைப்பூண்டு அரியைச்சேர அவாக்கொண்டு நாட்டைக்கடந்து காட்டில்நடக்கத் தொடங்கினார்.

இவ்வாச்சரியத்தைப்பார்த்த பந்துக்கள்முதலான சகலரும் அரசனைப்புகழ்ந்து மிகவும் மனமகிழ்ந்து அரசன் மனைவியையிகழ்ந்து விந்தை யிதெனத்திகழ்ந்து ஒன்றுந்தோன்றாதவர்களாய் நின்றார்கள்.

அரசியோ கணவன்முன்சென்று பட்சவார்த்தைகளைப்புகன்று ஓ பிராணநாயகா, ஓ பிராணவல்லபா, என்னைவிட்டுப் பிரியவும்மனம் வந்ததோ நானுரைத்த கடுஞ்சொற்களால் மனம்வெந்ததோ வீட்டுக்குவாரும். வந்தன்புடன்சேரும். சேர்ந்தின்பத்தைத்தாரும். கிருபைகூரும் என்றுசொல்லி போகாமற்றடுத்தாள். விடாசலந்தொடுத்தாள்

அரசன் ஓ மாதே! நான்தாயெனவெறுத்தபின் நீ மறந்துவருந்துவதால் என்கருத்துப் பிறழாதெனச் சிரித்துக் காமனை யெரித்தவன்போல் கார்வையை நோக்கிச் சாந்தத்தைநீக்கி இக்கணம் நமது நாட்டைச்சேரு. பகவான் பதத்தைக்கோரு. பதியேதெய்வமெனுஞ் சதிநீயானால் என்வார்த்தைகளைத்தள்ளாதே. யாதொருமொழியும் விள்ளாதேஎன்றுரைக்கும் பதியின்பாதங்களிற்பணிந்து நயனங்களையணிந்து பலதரமுத்தமிட்டு உம்மையும்விட்டு நானுயிருடனிருப்பேனே மனமும் பொறுப்பேனே உமக்குமெனக்குமுள்ள சம்பந்தம் இன்றுடன்தீர்ந்து விட்டதோ நானுரைத்த கடினசொற்களும்மைச் சுட்டதோ எவ்விதமாக மறந்திருப்பேன். துக்கந்தணிந்தெப்படி யிருப்பேன். தனித்தெப்படி உயிருடனிருப்பேன். பட்சமாயினியாருடன் பேசுவேன். பாடுவேன். சந்தனாதிக ளெவருக்குப்பூசுவேன். யாருடனூடுவேன். எவருடன்பாடுவேன். நாயகாவென்று யாரையழைப்பேன். எப்படிப்பிழைப்பேன். யாருடன்நகைப்பேன். எவருடன் பகைப்பேன். யாருடன் கொஞ்சுவேன். எவர்பால் கெஞ்சுவேன். இனியெனக்கும் பூமாலைகளேன். முத்துமாலைகளேன். சிங்காரகொண்டையேன். செஞ்சதங்கைத்தண்டையேன். என்னழகைப்புகழ்பவர்யார்? புகழ்ந்து மகிழ்பவர் யார்எனப் பெருமூச்சுவிட்டயர்ந்து ஆயாசத்தால் மூர்ச்சையாய் நிலத்திற் சாய்ந்துவிட்டாள்.

இவை யாவையும் பார்த்திருந்த அரசன் சற்றுமிடறாமல் அரிவையின் காமம்நீங்கி ஹரிமேற் காமமோங்கி அச்சுதனைப்பார்க்க வேங்கி அரைக்கணமிருக்கப்பின்வாங்கித் தன்னெதிரில் யார்வந்துமரித்தாலும் ஓ ஐயமாரே! நீங்களானந்தமாயிருக்கிறீர்களே. அரியைப்பார்த்தீர்களா? அவரடியிற்றலையைச் சேர்த்தீர்களா? ஆசைகளையெல்லாம் மாய்த்தீர்களா? அடியோடகந்தையைச் சாய்த்தீர்களா? அரியின்

வழியாய் வந்தாரா? அரியசேவைதந்தாரா? அரியைக்கண்டு புகழ்ந்தீரா? அன்பாயுருகி மகிழ்ந்தீரா? அரி நீ என்றனையாளாயோ. அரியசேவைதாராயோ. அடியேன்மேற் கிருபைபடராயோ. அருட்கண்ணாலெனைப்பாராயோ. ஐயாவிதுவோ நான்கண்டபோதக. அடியோறுபுன் வீறுச்சு. மெய்யோர்க்கிருமிகமேவச்சு. விதிபோமென்றுபெருமூச்சு அடிக்கடிவிட்டுக் கொண்டே போன்போலவும் பித்தன்போலவும் பேசிக்கொண்டே கன்றையிழந்த பசுவைப்போலவும் புதல்வனையிழந்த தூதைவைப்போலவும் பதியையிழந்த சதியைப்போலவும் பதறிக்கதறிக்கொண்டு அரிஹரியென்கிற வார்த்தையன்றி வேறுவார்த்தை சொல்லாமல் எங்குந்தங்கி நிற்காமல் கல்லென்றும் முட்களென்றும் பாராமல் காடென்றும் நாடென்றும் தேராமல் கர்த்தனைக்காணாமடந்தார். அப்போது அரசி மூர்ச்சைதெளிந்தெழுந்து கணவனைக்காணமல்மின்னும் பூமியில்விழுந்து புரண்டுபுரண்டு கதறிப்பதறி ஓலமிட்டழுதுழன்றதனைப்பார்த்தொழுது ஐயோமோசஞ்செய்தேனோவழுது இனியெப்படிப்போகும்பொழுது என்னுயிர்க்கண்ணீராற் றேகத்தையலம்பி கணவனைக்காணாமடிப்போகத் தொடங்கினாள்.

அப்போதங்கிருந்த சுற்றத்தார் பலவாறுகத்தேற்றித் துக்கத்தையாற்றி நீ வீட்டிலிருசற்றேபோ நாமானவனைழைத்துக்கொண்டுவருகிறோமெனத் திடப்படுத்தினார்கள். அதற்கு மாதரசி நீங்கள்போய் என்னுயிரை அழைத்துக்கொண்டுவந்தால் என்பாக்கியம் அதனை மறித்து நாட்டுக்கழைத்துக்கொண்டு வருவேனென்றுரைக்கச் சிலர் இதோ அழைத்துக்கொண்டு சடுதியில் வருகிறோமென் றோடினார்கள். இதற்குள் அரசன் இரவிலேயே நாட்டைக்கடந்து காட்டிற்புகுந்தும் சேற்றிற்புதைந்தும் புதருகளாற் கிழிந்தும் அரிபோதயமாவதற்குமுன் ஓர் மலைமேற்றரிசித்து ஆயாசமேலிட்டாலயர்ந்து சற்றுதங்கியிருந்து பகலைக்கண்டதே அம்மலையைவிட்டிறங்கிப் பலகாடுகளிலும் புகுந்து இன்றைக்கு அரியைக்கண்டேனே. இன்பாபரணம்பூண்டேனே. இன்றைக்கென்முன் வருவாரா, எனிமேன்விரதம் முடிப்பாரா, என்னைக் காலையிலிருந்து உச்சிமட்டும் பலவிதங்களிலுஞ் சொல்லிக்கொண்டே திரிந்து மனம்நொந்து இப்போதுபடுமினைந்து நாழிகையாகிவிட்டது. இனிமேல் காலக்கண்ணனை வருவாறு, விமலைபத்தைப் புகழ்வேன், மேலையின்பமடைவேன் என்றோதி வாலயங்களிற்பிரவேசித்து பகவானிலைசேயபாலா பகவானுஞ்சேசாரா. மகிழ்வோடேழுந்தருளாரா. அவ்வாறதங்கள் தாராராவென

வெகுநேரந் தோத்திரஞ்செய்து அசையாதவிக்கிரகங்களைப்பார்த்து மார்புடன்சேர்த்து ஓ சுவாமி! நானும்மைக்காணவேண்டி நாடு காடு மலைந்து திரிகிறேனே, கால்கள் மிகவும்நோகின்றதே, பாதங்கள்தேய்ந்துபோயிற்றே, பொழுதுமிதோபோச்சுதே, நீரசையாமலிருக்கின்றீரே, நானிரவும்பகலும் ஓலமிட்டுக் கூப்பிடுகின்றேனே, நீர் வாய்திறந்துபேசாமலிருக்கின்றீரே, இதுவுமக்குத்தர்மமோ, அல்லதுவேறே மர்மமோ, நான்செய்தகர்மமோ, நீரசையாப்பிரமமோவெனத்துதித்துச் சூரியனஸ்தமனமானதே ஆலயத்திலேயேசயனித்து அரியென் கனவில்வருவாரா அரியசேவைதருவாரா உரிமையாக்கிக்கொள்வாரா உபதேசஞ்செய்வாரா கமலபதங்கள் பார்ப்பேனு நளினசாகரத்திற் குளிப்பேனு நிமலாவென்றுதுதிப்பேனு நிச்சலனுகியிருப்பேனு பண்ணேடுருகிப்பணிவேனே பவசாகரத்தைக் கடப்பேனே கண்ணுற் பார்ப்பதெந்நாளோ கவலைகள்தீர்வதெந்நாளோவென்று தியானஞ்செய்துகொண்டேநித்திரைபோய் பாதியிரவிலேயே விழித்துக் கோயிலிலிருந்து வெளிப்பட்டு ஓகோபகவானே! நீரென்னெதிரிற்பிரசன்னராய் சேவைதரல்வேண்டும். கண்களாற்பார்த்து மகிழவேண்டும். மனங்குளிரப் பேசவேண்டும். என்மனவாட்டங்க ளறவேண்டும். ஆனந்தமுறவேண்டும். நிர்த்தனஞ்செய்யவேண்டும். தன்னைமறந்து திரியவேண்டும். எனப்புகன்று பகவானைக்கனவிலு மறக்காமல் ஹரி ஹரியென்கிற வாக்கியத்தைத் துறக்காமல் அனேக நூதன கீர்த்தனைகள்பாடிக்கொண்டே பலதேசங்களிற்றிரிந்து மிகவும்பரிந்து கால்களெரிந்து முகங்கரிந்து காசிப்பட்டணத்திற் பிரவேசித்து விசுவநாதரைப்பூசித்து சாதுக்களைநேசித்து அரிகதைகளை வாசித்து விஷ்ணுசங்கீர்த்தனங்களைக் கோஷித்துப் பக்தியில்விசேஷித்து நாள்களைக்கழிக்கத் தொடங்கினர்.

இவரிப்படியிருக்க, சூரியோதயமாகியும்புதல்வன்வராததால்அன்னையானவள்வாடி வீதிகளிற்போய்த்தேடிப் பலதிசைகளிலும் ஓடிப் பாலனைக்காணுதற்குநாடி துக்காக்கினியால்வெந்து மிகவுஞ் சிந்தைநைந்து மகனைக்காண வீதியைக்கடந்து வருகிறபோது பந்துக்களில் சிலரைக்கண்டு என்னருமைப்புதல்வனைக்கண்டீர்களாவெனக்கேட்க, அவர்கள் சகலமும் சவிஸ்தாரமாகவுரைக்க அவ்வசனத்தைக்கேட்ட தாய் பூமியில்விழுந்து புரண்டெழுந்து அதிசீக்கிரமாக அரண்மனைக்குச்சென்று மருமகளைக்கூப்பிடவே உடனே மருமகள் மாமியைத் தொழுது ஓ வென்றழுது துக்கித்தலறும்போது அவ்வன்னையுங்கூ

டவேபுலம்பி ஆ என்மகனே! அழகானமுகனே! என்னையும்மறந்தாயோ உன்னையுந் துறந்தாயோ எத்திசையிற்சென்றாயோ எங்கேஇருக்கின்றாயோ பசிவேதனைக்கெப்படி பொறுப்பாய் கால்கள்நோக எப்படி உயிர்தரிப்பாய் மோகஜன்னிமேலிட்டதோ மனைவியின் வாய்மொழிசுட்டதோ இல்லறங்கசப்பாய்விட்டதோ மதிமயங்கிவிட்டதோ விதிபிரிந்துவிட்டதோ இவ்வூர்தான் கெட்டதோ உன்முகத்தைக் காட்டாமற் போய்விட்டாயே என்னைப் பாவியாக்கிவிட்டாயே உன்னைப்பார்க்காமலெப்படியிருப்பேன் எவ்விதமாய் மனம்பொறுப்போன் ஓகோ மோசம்செய்தாயே எனப் புலம்பிக்கொண்டிருக்கும்போது பந்துக்களிலொருவர் அந்த அம்மணியையன்புடன்நோக்கி இதோ என்புதல்வர்களால் உமதுசுதனை இப்போதே அழைப்பிக்கிறேன் துன்பப்படவேண்டாமெனத் தேற்றித் துக்கத்தைமாற்றிப் புதல்வரையும் ஏவலாளரையும் கூட்டி அரசனைத்தேடி அழைத்துக்கொண்டு வரும்படியாக அனுப்பினான்.

அவர்களும் காடு நாடு மலை வனாந்திரங்களெல்லாந்தேடியலைந்து திரிந்து அங்கங்கே அரசனுடைய சங்கதியைக் கேள்விப்பட்டுக்கொண்டே வாரணாசியை யடைந்து அங்கிருக்கும் அரசனைக்கண்டு பித்தனாய்விட்டானென் றுணர்ந்து தங்களூருக்குச்சென்று அரசனிருக்குங் கோலத்தைச்சொல்லி முறையிட்டார்கள். அதுகேட்ட அன்னை மிகவும் பிரலாபித்துத்தாயும் மருமகளும் பல்லக்குகளிலேறி ஏவலாளருடன் பிரயாணப்பட்டு வாரணாசியையடைந்து தனத்தின்மீதும் வஸ்திரம் முதலான சகல சொகுசுகளின்மீதும் ஆசையின்றி ஓரிடத்திலும் நில்லாமல் ஹரி ஹரியென்கிறமொழியல்லாமல் வேறுவார்த்தை சொல்லாமல் பரதேசியைப்போற் கிழிந்த ஆடையைத் தரித்துக்கொண்டு குடுமியை விரித்துக்கொண்டு பாதங்கள்வெடித் துதிரம்புறப்பட நடந்துகொண்டு பகவானை, ஓசையுடன் கூப்புட்டுக்கொண்டு மஸ்தகத்தின்மே லஸ்தங்களைக் கூப்பிக்கொண்டு தெருவிற்றிரிந்துகொண்டு மழையென்றும் வெயிலென்றும்பாராமல் யாரிடத்தும் பேசாமல்ஊமையாகி அங்கங்கறுத்து கோடைக்கும்பொறுத்துஎலும்புமாத்திரமா நிச்சலத்தனாகிமேடைமாளிகையிலிருந்ததுபோய்மடஞ்சத்திரங்களிற்றங்கிப் பஞ்சணைமேற் சயனிப்பதுபோய்ப் புழுதியிலனந்தல்செய்து பேய்பிடித்தவன்போலும் சேயிருப்பதுபோலும்இருக்குமைந்தனைக்கண்டு தாயானவள் தாரைதாரையாய்க் கண்ணீர்விட்டழுது பாதங்களின்மேல் இத்தகைய விதிவந்ததோ உன்

மனைவிசொன்ன கடுஞ்சொல்லால்மனம்நொந்ததோ சிங்காரமேடையி லிருந்து தியானஞ்செய்யலாகாதோ அஞ்ஞானம் நாசமாய்ப்போகா தோஎன்னருமைக்குழந்தாய்! உனதந்தையுமெனைப்பிரிந்தாரேநீயும் பிரிந்துவிட்டாயே நான்தனித்திருப்பேனே உன்னைப்பிரிந்துயிர் தரிப் பேனேவெனப்பற்பலமொழிகளைப்புகன்று இரண்டுகரங்களையும்பிடி த்துக்கொண்டு வயிற்றிற்றலையைவைத்து ஓ வென்றழத்தொடங்கி னள்.

அதற்கந்தபாகவதன்பணிந்து ஓ என்தாயே! நாராயணனைப்பார் த்தாயா, நயனங்களவர்பதத்திற்சேர்த்தாயா. இழிவான யெண்ணங்க ளைப்பேர்த்தாயா. எல்லாவாயாசங்களையுந்தீர்த்தாயா. அடியேன்அரி யைக்காணவில்லை. கொடியேன்மே லருள்கூரவில்லை. கோதுகளின் னுந்தீரவில்லை. பச்சைவண்ணனைக் கமலக்கண்ணனைசுதாற்புதனை அ ரசனர்சுதனைக்கோதண்ட அஸ்தனைக் குறைவிலாசொஸ்தனைச் சீதை மணாளனைப் பத்மசொரூபனைக் கதிதருமுதல்வனைக் கௌசலைப்புதல் வனை ஆதிமூலனை அன்பரனுகூலனை மாதவர்நேயனை மதிதருமாய னைக் கண்குளிரக்கண்டு ஆநந்தங்கொண்டு பலவரங்களைப் பெற்றுக் கொண்டு இதோவருகிறேன். இன்றைக்ககத்தியம் பகவான்வருவார். தரிசனந்தருவார். இன்றைக்கென்விரதம்நிறைவேறும், சமஸ்தகுறை களுந்தீரும். எனப்பற்பல வசனங்களாடி அரியைத்தேடிக்காணமல் வாடிப் பலகீர்த்தனங்களைப்பாடிக் கொண்டிருந்தார்.

அப்போது மனைவி கணவனைச்சூழ்ந்து அடிகள்மேல்வீழ்ந்து பலதரந்தாழ்ந்து ஓ சுவாமி! நான்செய்தகுற்றத்தை க்ஷமித்து வீட்டு க்குவாரும். தாயைக்காரும். ஆஹா இத்திவ்யதிருவடிகள் நோகநடக் கவும் நேரிட்டதோ. புழுதியிலுஞ்சயனிக்கலாச்சுதோ. உமக்குள்ள அ வமானமெங்கே பிரிநதுபோச்சுதோ. இப்பேர்க்கொத்தவிதியும்வாய்ச் சுதோ. ஓ கொடுங்காலமே! ஓ கடுந்தெய்வமே! என்னையிப்படியுஞ்சோ திக்கலாமோ என்று பலமுறை முகத்திலறைந்துகொண்டு கல்லும் உருகக்கரைந்தழத் தொடங்கினள்.

அதற்கந்த அரிதாசர் ஓ மாதரசே! நீசெய்தஉபதேசப்படி இன் னும் ஹரியேன் வரவில்லை. எனவர்தெரிசனந்தரவில்லை. இன்னும் எத்தனை நாள் செல்லும்? எனக்கோருபாயஞ்செல்லும் என்று விபீ ஷணனைக்காத்தவனை, ராவணனைமாய்த்தவனை, கும்பகர்ணனைவென் றவனை, மூலபலத்தைக்கொன்றவனை, அயோத்தியை யாண்டவ னை, எனக்குமுனக்கும் ஆண்டவனை இதோபார்த்து வருகிறேன் நீம

னைக்கேகென்றுரைத்து ஸ்ரீராமா, பரந்தாமா, துளப்பத்தாமா, சகஸ்ரநாமா, பரசுராமா, பலபத்திரராமா, நீலமேகசியாமளா, புஜபலபராக்கிரமா, திரிவிக்கிரமா, புருஷோத்தமா, நாரசிம்மாவெனத் தோத்திரஞ்செய்துகொண்டே இச்சைப்படிப் பலவிடங்களிலுந்திரியுங் காவலனை மறக்காமல் மாமியைநோக்கி இனியிவரை நாமழைத்துக்கொண்டு போவதருமை யாதலால் இவ்விடத்தில் ஓர் பெரியமடமேற்படுத்தி அதில் நாமிருந்துகொண்டு இவருடைய தெரிசனஞ்செய்துகொண்டே இருக்கலாமெனப்புகல, அதற்கவ்வம்மணி ஓ மருகி! நீ நமக்குள்ள ஆஸ்தியை எல்லாம் அழைப்பித்து உன்னிஷ்டப்படியேசெய்து என்மகனுக்கு அன்னவஸ்திர முதலானதுகளுக்குக் குறைவராமற் பாதுகாத்துக்கொண்டிருவென்று சொல்லித்தண்டிகையின்மேலூர்ந்துசென்று கௌடபங்காளதேசத்தையணுகித் தன்புதல்வனுடைய ஸ்திதியைக்கூறிவிசனித்தனள். அதைக்கேட்டகுருவானவர் அம்மா! புதல்வன் நன்மார்க்கத்திற் பிரவேசித்திருப்பது உன்னுடையஏழேழுதலைமுறைக்கும் நன்மைபயக்குவதாகும். இதைக்குறித்துச்சந்தோஷிப்பதைவிட்டு ஒன்றுமறியா அஞ்ஞானிகளைப்போல் துக்கப்படுவது நன்றோவெனப் பலநீதிகளையோதி அம்மாதினுக்குள்ள மகவாசையைநீக்கி இகவாசையைப்போக்கிபகவான்பதத்துக்காளாக்கி சுகமடையக் கிருபைக்கண்ணோக்கித் தன்னிடத்திற்றானே வைத்துக்கொண்டு பல நீதிவாக்கியங்களை விண்டு ஆசானிடஞ்சேர்ந்து அன்பாயவளைக் காத்து ரக்ஷியும் சுவாமி என்று வேண்டிக்கொள்ள, ஆசானும் அம்மாதுக்கு பிரம்மநிஷ்டையையோதி மகாவாக்கியோபதேசஞ்செய்து களங்கத்தைமாற்றினார். அவ்வுத்தமியும்மைனாவதியுடன் இடைவிடாது ஆசானைப்பூசித்து ஆசித்துநேசித்து விசுவாசித்துக் கொண்டிருந்தாள்.

இம்மாது இங்கிப்படியிருக்க, இவள் மருகிதனக்குள்ள ஆஸ்தியையெல்லாந் தருவித்துக்கொண்டு அவ்வூரில்பெருத்த மடமொன்றுகட்டிக்கொண்டு அதில் நிவாசமாயிருந்துகொண்டு தன்கணவனுக்கும் அவருடன்கூடிவரும் தொண்டர்களுக்குங்குறைவின்றி அன்னபானாதிகளை உதவிக்கொண்டு இரவும்பகலும் மாறாமல் கணவனையே தியானித்துக்கொண்டிருந்தாள். கணவனோ சிலநாளில் பக்தியோகஞானம் விசேஷித்து அவ்வூரைவிட்டுத் தன்னிஷ்டப்படி வேறோரூருக்குப் போவதும் மறுபடியும் திரும்பிவருவதும் இப்படியாகவிருந்து அநேகபாமரர்களையெல்லாம் திருத்திப் பகவத்தியானம்

போதித்துக் கீர்த்தனைகளைப்பாடும்படிக்கேட்டு ஆனந்தித்துக்கொண்டிருந்தார். இவர்மனைவியோ அல்லும் பகலும் பதிபக்தியிற்சிறந்தவளாதலால் யாதொருவியாதியுமின்றி ஆச்சரியமான மரணமடைந்து பரலோக வாழ்வைப்பெற்றாள். மனைவி மரணமடைந்தவுடனே சாதுவானவர் மிகவும் சந்தோஷமடைந்து அத்திரவியங்களனைத்தையும் ஏழை பரதேசிகளுக்குத் தானஞ்செய்து அவ்வூரிலிருக்கும் வீடுகள்தோறுஞ்சென்று பிக்ஷைவாங்கிப்புசித்து பரமானந்தத்திற் சுகித்து நித்தியமுக்தராகி யின்றும் உலகத்தில் வசித்துக்கொண்டிருக்கின்றார்.

அங்கே கோபிசந்தனநாதர் சிலமகத்துவங்களைக்காட்டி அவ்வூரைவிட்டுத் தன் ஆசான்வசிக்கும் கௌடபங்காள தேசத்தையடைந்து அன்னையைக்கண்டு தெரிசித்து ஆசானிடத்திற்குவந்து வலம்புரிந்து தீர்க்கதெண்டனிட்டுத் தான்போய்வந்த விசேஷங்களை யெடுத்துச்சொல்லி ஆசான்களிப்புறத்தொண்டு செய்திருந்தான். இப்படிக்கிருக்கிறபோது மைனாவதியோர்நாள் ஆசானிடத்திற்குவந்து பணிந்து ஓசுவாமி சத்குருநாதரே! அடியாளுக்கு யாத்திரைசெய்யவேணுமென்ற எண்ணம் மிகுதியாயிருப்பதால் தேவரீர்நேமித்தால் போய் வருகிறேனென்ற மைனாவதியைநோக்கி ஜாலந்தரநாதர் ஓ அம்மணி! நீ இன்னமும் என்னுடைய உத்திரவுக் கெதிர்பார்க்கவேண்டாம். இனி உன்னிஷ்டப்படி நடக்கலாம். உனக்குயாதொருகுறைவும் நேரிடமாட்டாது. போய்வாருமம்மாவென்று மங்களவாக்களிக்க உடல்பூரித்து மயிர்க்கூச்செறிந்து பரமானந்த மடைந்தவளாகித் தன்குமாரனை அழைத்துக்கொண்டு பரதேசிவேடம்பூண்டு வெகு தேசதேசங்களெல்லாம் பிக்ஷையெடுத்துப் பசியாறித்திரிந்துகொண்டுவருகிறபோது ஒரு கிராமத்தில் வசிக்கும் பிராமணனொருவன் இவர்களைக்கண்டு அழைத்துக்கொண்டுபோய் அன்னமளித்துப் புசிக்கும்படிசெய்து உபசரித்து ஓ மகாத்மாக்களே எனக்கு அனேகநாளாய்ப் புத்திரபாக்கிய மில்லாமல் மிகவும் கஷ்டப்படுகிறேன். ஆகையால் எனக்கோர் பால னுண்டாகும்படிக்கிருபைசெய்ய வேணுமென்று வேண்டிக்கொண்ட பிராமணனைநோக்கி மைனாவதிசொல்லலுற்றாள்.

ஓ பிராமணோத்தமரே! உமக்கு இந்தஜென்மத்தில் புத்திரபாக்கியங் கிடையாது. மறுஜென்மத்தில் உண்டாமென்றாள். அதற்கந்த பிராமணன் சாதுக்கள் நினைத்தால் ஆகாதகாரியமும்

உண்டோ நீ சொல்லுவது விந்தையாயிருக்கிறது, ஆகையால் எனக்
குப் புத்திரபாக்கியம் உண்டாகும்படிச் செய்யாவிடில் உங்களிருவ
ரையும்விடாமல் என்னபாடுபடுத்துகிறேன் பாருங்களென்றுசொல்லி
இருவருக்கும் கைகால்களுக்கு விலங்குபூட்டி ஓர்கொட்டடியில்போ
ட்டுப் பூட்டி வெகுஜாக்கிரதையாகக் காத்திருந்தான். இவனிப்படிக்
கிருக்க அவ்விருவரும் கண்மூடித்திறப்பதற்குள் விலங்குகளைக் கழ
ட்டிக்கொண்டு மாயமாய் வெளிப்பட்டுவந்து அப்பிராமணன்முன்
னம் நிற்க அவர்களைக்கண்ட பிராமணன் மிகவும் வியப்படைந்து ஓ
சாதுக்களே கொட்டடிக்குள்ளிருந்து நீங்கள்மாயமாய்வெளியில்வர
மாத்திரம் மந்திரங்கற்றுக் கொண்டீர்களோ எனக்குப்பிள்ளை புண்
டாகும்படி கிருபைசெய்ய மந்திரங்கற்கவில்லையோ உங்கள்மோசக்
கருத்தை ஒருநிமைப்பொழுதில் யிவ்வூராரெல்லாம் பார்க்கும்படி
வெளிப்படுத்துகிறேன் என் சமர்த்தைச் சற்றேபாருங்களென்றுசொ
ல்லித் தனக்கு நேசனாகிய அதிகாரியிடத்திற்குச்சென்று இவர்களி
ருவரும் சாதுக்களைப்போல வேடம்பூண்டுவந்து என்வீட்டில் புசித்
துப்படுத்திருந்து நடுராத்திரிலெழுந்து என்மனையாள் பூண்டிருந்த
கெட்டிமுத்து மாலையைத் திருடிக்கொண்டார்களென்று அசத்தியம்
செய்தான்.

இதைக்கேட்ட அதிகாரி துலுக்கனானதால் அந்தவார்த்தையை
த்திரவிசாரிக்காமலும் நன்றாயோசிக்காமலும் சமீபத்திலிருந்த அர்க்
கார்களை யழைத்து நீங்களிவ்விரண்டுபேர்களையும் அழைத்துக்கொ
ண்டுபோய் கொலையாளிகள்வசம் ஒப்புவித்து சிரசைவெட்டி யெறிந்
துவிடும்படி யான்சொன்னதாக இம்முத்திரைமோதிரத்தை அடை
யாளமாகக்காட்டிச்சீக்கிரம்வாருங்களென்று ஆக்கியாபித்தான். அந்த
ப்படியே அர்க்காரர்கள் அவர்களிருவரையுங்கைதிசெய்துமுன்னும்
பின்னும் உருவினகத்தியோடு நான்குபுறமும் சூழ்ந்தபடி கொலைக்
களத்திற்குக்கொண்டுபோய் கொலையாளிகளின் வசம் ஒப்புவித்து
அதிகாரிசொல்லியபடி முத்திரைமோதிரத்தை அடையாளங்காட்டி
சிரசைத் துணிக்கும்படி சொல்லிவந்தார்கள். உடனே கொலையாளி
கள் இருவரையும் ஜதையாகநிறுத்தி வாளாயுதத்தையெடுத்து ஓங்கி
சிரசுவேறுமுண்டம்வேறாகும்படி வெட்டினார்கள்.

அவ்வெட்டானது இவர்கள் சிரசைச் சேதிக்காமல் கிரா
மத்திலிருந்த கொடியபிராமணன் சிரத்தைத் துண்டித்துவிட்
டது. இரண்டாவது அதிகாரியின் சிரசைவெட்டியது. இந்த

அற்புதத்தை ஊரார்கண்டு கொலைக்களத்திற்குக் கொண்டுபோகப் பட்டவர்கள் மகான்களென்றுணர்ந்து கொலைக்களத்திற்கு ஓடிவந்து நடந்த விந்தையைச்சொல்லி அவர்களைவிடுவித்துக்கொண்டுபோய் சிலநாள்வைத்து உபசரித்து அனுப்பினார்கள். இந்தப்படி மைனாவதி யும் அவள் குமாரனும் நாளுக்குநாள் மகத்துவமிருந்து நாடெங்கும் சஞ்சரித்துத் திரும்பிவந்து ஆசானைத் தெரிசித்துப் பூரணக்கிருபை யைப்பெற்று இன்றைக்கும் நாளைக்கும் ஜீவன்முத்தர்களாக வெங்கு ம்சஞ்சரித்துக்கொண்டிருக்கின்றார்கள்.

இந்தமைனாவதியினுடைய சரித்திரத்தைஅன்புடன்பாராயண ஞ்செய்பவர்களும் சிரவணஞ்செய்பவர்களும் பகவத்பக்தியும், நிஷ்கா மியமும், பிரமஞானமும், அகண்டானந்தமும் சித்திக்கும். ஓ சித்தர் களே! ஜீவன்முக்தர்களே! தொண்டர்மீது அன்புற்றவர்களே! இனி யுங்கள் நிவாசத்துக்குச் செல்லுங்கோளென்று விடைதந்து நாபாஜி சித்தர் தன்னைமறந்து யோகநிஷ்டையிலெழுந்தருளியிருந்தார். பின் பு உத்தவசித்தர் முதலானோரும் தங்கடங்களிருப்பிடஞ் சேர்ந்து பிரம்மாநந்தத்திற் படிந்திருந்தார்கள்.

ஓம் ஸ்ரீ கிருஷ்ண பரப்பிரம்மணே நம:

## வாழ்த்து.

சற்குரு ஜாலந்தர்தஞ் சரணம் வாழி
தனைச்சரணம் புகுமைனா வதியும் வாழி
இக்குவல யத்துள்கோபி சந்தன் வாழி
எழிலாரு மிக்கதையைப் படிப்போர் வாழி
பக்குவமாய்ப் பகர்பவருங் கேட்போர் வாழி
பாரெங்கு மும்மாரி பொழிந்து வாழி
தக்கபுல வர்களுந்தா சர்களும் வாழி
தாசரதி தாளிணைகள் தினமும் வாழி.

மகா மகிமைபொருந்திய

# மைனாவதிக்கதை.

முற்றிற்று.

நூதனமாய் அச்சிட்டிருக்கும்

# புத்தகவிளம்பரம்.



ஸ்ரீ இராமலிங்கப்பிள்ளையவர்கள் அருளிச்செய்த

## திருவருட்பா மூலமும்-உரையும்.

உலகமாகிய பெண்ணுக்கோர் நெற்றிக்கண்ணதாகிய திலகம்போல் விளங்காநின்ற இச்சென்னைமுதலியதேசங்களில் அநேக அற்புதங்களைச் செய்துவந்த ஸ்ரீ ராமலிங்கப்பிள்ளையவர்கள் அருளிச்செய்த திருவருட்பா மிகவும் பெரிய நூலாயிருக்கின்றமையால், நூல்முழுமையும் பயன்படவில்லையென்பது யாவருக்குந்தெரிந்தவிஷயமே. ஆகையால் யாவருக்கும் பயன்படும்படி அந்நூலிலிருந்து சிலபாகங்களையே எடுத்துத்திரட்டி தக்கவாறு உரையெழுதி நல்லகிளேஸ்கடிதத்தில் டிம்மி (168) பக்கங்களாக அச்சிட்டு ஷை பிள்ளையவர்களின் திருவுருவப் படமொன்று சேர்த்து புல்காலிகோபயிண்டு செய்திருக்கிறது. புத்தகம் 1-க்கு விலை ரூபா-1 வி-பி-சார்சு அணா-3.

## அனுபோக பிரசனை ஆரூடம்.

இந்த ஆரூடபுத்தகத்தில் உலகத்தில் பிரஜைகள்நினைத்துக்கேட்கும் எல்லாவித கேள்விகளுக்கும் பிரதியுத்தரமும் அதற்குப் பலாபலனும் கூறியிருக்கும். இந்தபுத்தகம்சோதிடர்களுக்கும் மற்றவர்களுக்கும் மிக்க அனுகூலமானது சுத்தமானபதிப்பு.

இதன்விலை அணா-8 வி. பி. சார்ஜ் அணா-2.

## தற்கால வயித்தியபோதினி.

அனேக வைத்தியர்களால் கையாளப்பட்டுவருகின்ற பாகங்களை மாத்திரமே (15) அத்தியாயங்களாகப் பிரித்துத் தற்காலவைத்தியபோதினி என்கிறபேரிட்டு எழுதி ஒருநூல் அச்சிட்டிருக்கின்றனன். ஆனால் இந்நூலில் சொல்லியபடியே விபரீதமான அர்த்தஞ்செய்து கொள்ளாமல் சரியானமாதிரிசெய்துபார்த்தால் அவ்வம்மருந்துகளுக்குச் சொல்லியுள்ள வேலைகளைக் கட்டாயம் செய்தேதீரும். இதற்குச் சந்தேகமேயில்லை. உயர்ந்தபதிப்பு கிளேஸ்காகிதம் உயர்ந்தபயிண்டு.

விலை அணா-8. வி. பி. சார்சு 2.

வேண்டியவர்கள் அடியிற்கண்டவரிடம் பெற்றுக்கொள்ளலாம்.

எஸ். பி. ராஜாராம் அண்டு கம்பெனி.

ஸன் ஆப் இந்தியாபிரெஸ், சூளை போஸ்டு,

மதராஸ்.